# யுத்தத்தால் வந்த யுத்தம்

With the best compliments from
K. B. Subbiah

ஸ்ரீ கே. பி. சுப்பையா எழுதியது

To S. Venkatesha Rao Esqr.

---

"ஜனநாயகம்" ஆசிரியரது முன்னுரையும்,
ர் சமஸ்தான இந்தியர் ஒற்றுமைச் சங்கத் தலைவரதும்,
கூர் சமஸ்தான பொது தொழிலாளர் சங்கத் தலைவரதும்
சிறப்புரைகள் கொண்டது.

---


சோல் ஏஜண்டுகள்:—

**ஷனல் லைப்ரரி பிரஸ்,**

78, அம்பாங் ஸ்ட்ரீட்,

**கோலாலம்பூர், மலாயா**

## பொருளடக்கம்

# ஆசிரியர் குறிப்பு

---

உலக ஞானத்தையும், சர்வதேச சரித்திரத்தையும், அரசியல் ஒளியையும் அறிய அவாவி நிற்கும் என் சகதேசிகளிடம் "யுத்தத்தால் வந்த யுத்தம்" என்ற இப்புத்தகத்தைச் சமர்ப்பிக்குமுன் இரண்டொரு வார்த்தைகள் கூறவிரும்புகிறேன்.

இவ்வுலகம் ஆரம்பத்திலிருந்தே சதா யுத்தத்திலேயே மூழ்கி வந்திருக்கிறது. பொன், பெண், மண் ஆகியவற்றின் மீது சிலர் கொண்ட ஆசையும், சுயநலமும், கர்வமுமே இந்த இடைவிடாத யுத்தங்களுக்குக் காரணம். பாரதம், இராமாயணம் போன்ற இதிகாச புராணங்களும் இதை ஜனங்களுக்கு எடுத்துக்காட்டி மேற்கொண்டு யுத்தமேற்படாமல் செய்வதற்காகவே எழுதப்பட்டவைகளாகும். இதனாலாவது இவ்வுலகில் யுத்தங்கள் நீங்கி சமாதானமேற்பட்டதாவெனில் அதுதானில்லை.

கடந்த பல நூற்றாண்டுகளாக உலகெங்கும் மதச்சண்டைகள் நடந்து வந்தன. அதன் பயனாக பல சாம்ராஜ்யங்கள் தவிடுபொடியாயின. சில சாம்ராஜ்யங்கள் உற்பத்தியாயின. அதன் பிறகு தேசீயச் சண்டைகள் நடந்தன. அதனால் பல மன்னர்கள் முடியிழந்தனர். பல நாடுகள் மற்றொன்றுக்கடிமையாயின. சில நாடுகள் குடியரசேற்படுத்திக்கொண்டன. அநியாயச் சண்டைகளில் குறிப்பிடத்தக்கது 1914—18-ல் நடந்த முதலாவது உலகமகா யுத்தம். அதன் பிறகு இன்று நடந்த இரண்டாவது உலகமகா யுத்தத்தைக் கொள்கைச் சண்டை என்றுதான் கூறவேண்டும். பழைய ஒழுங்கிற்கும் புது ஒழுங்கிற்கும், முதலாளித்துவத்திற்கும்—தொழிலாளித்துவத்திற்கும், வைதீகத்திற்கும்—சீர்திருத்தத்திற்கும், அநீதிக்கும்—நீதிக்கும், ஏகாதிபத்தியத்திற்கும்—பொதுவுடைமைக்கும், சுயநலத்திற்கும்—பொதுநலத்திற்கும் இடையில் நடந்தபோர் என்றுதான் இன்றைய யுத்தத்தைக் கூறவேண்டும்.

யுத்தத்தைத் தடுக்கவே யுத்தம் செய்கிறோமெனப் பிரிட்டிஷ் நேசதேசத்தினர் கடந்த உலகமகா யுத்தத்தின் போதும் கூறினர்; இன்றும் கூறினர். ஆனால் அந்த யுத்தத்தால் பொதுவாக உலகிற்கும், குறிப்பாகத் தமக்கும் செய்யப்பட்டுள்ள அநீ

தங்களைத் திருத்தி இனிமேலாவது யுத்தமேற்படாதபடி செய்யவே இந்த யுத்தத்தைச் செய்வதாக இன்று ஜெர்மன் அச்சு நாட்டினர் கூறினர். எங்ஙனமாயினும் இன்றைய யுத்தத்திற்குக் காரணம் கடந்த உலகமகா யுத்தந்தான். எனவே இந்த இரண்டாவது உலக மகாயுத்தத்தை "யுத்தத்தால் வந்த யுத்தம்" என்றும் கூறலாம்.

கலிகால சரித்திர ஆசிரியர்கள் இந்த யுத்தங்களைப்பற்றி வரையும்போது உண்மையான காரணங்களை அநேகமாகக் காட்டமாட்டார். தத்தம் நாடுகளுக்குச் சாதகமாயிருக்கும்படி ஏதாவது நொண்டிசாக்கு போக்குகளையே கூறுவர். மண், பெண், பொன், சயநலம், கர்வம் போன்ற ஏதாவதோர் துராசையை மனதிற் கொண்டே அந்தந்த நாடும் பிறநாடுகள்மீது அவ்வப்போது யுத்தம் தொடுத்து வந்திருக்கிறதென்பது உண்மையாயினும் அந்தந்த நாட்டு சரித்திர ஆசிரியர்கள் இந்த உண்மையை ஒப்புக் கொள்ளும் தைரியசாலிகளாய் இரார். ஆனல் இப்புத்தகத்தில் கூறப்பட்டிருப்பது விருப்பு வெறுப்பற்ற நடுநிலைமைக் காரணங்களாகும். எனவே அவைகள் அந்தந்த நாடுகளின் அதிகார தோரணையில் வெளியாகியுள்ள சரித்திர உண்மைகளுக்கு மாறுபட்டிருந்தால் அதில் யாரும் ஆச்சரியமுற ஹேதுவில்லை.

இப்புத்தகத்தில் காணும் விஷயங்கள் அவ்வப்போது பத்திரிகைகளில் பிரசுரிப்பதற்காக எழுதப்பட்டவை. எனவே ஒரு அத்தியாயத்தில் கூறப்பட்டிருக்கும் விஷயம் மற்ற அத்தியாயங்களிலும் சந்தர்ப்ப அவசியத்தை முன்னிட்டு குறிப்பிடப்பட்டிருக்கலாம். இதைச் சொன்னதைத் திருப்பிச் சொல்லும் வழுக்கென யாரும் கருதலாகாது.

யுத்த நடவடிக்கைகளைப் பொறுத்த உண்மைகள் சர்வதேச செய்தி ஸ்தாபனங்களின் அறிக்கைகளை ஆதாரமாகக் கொண்டவை. இது "யுத்தகாலப் பொய்கள்" சகஜமாகப்பரவி வரும் "நாகரிக" காலமெனினும் பகுத்தறிவுக்கெட்டிய வரை நிஜமெனத் தெரிந்தவையே இதில் குறிப்பிடப்பட்டிருக்கின்றன. சர்வதேச நிலைமைகளைப்பற்றி இடையிடையே கூறப்பட்டிருக்கும் அபிப்பிராயங்கள் அனுபவத்தைத் தழுவியவை.

இப்புத்தகத்தில் குறிப்பிடப்பட்டுள்ள பற்பல நாடுகள், நகரங்கள், தீவுகள், போர்முனைகள் ஆகியவற்றின் இருப்பிடங்

களைத் தெளிவாக அறிந்து கொள்ள வாசகர்களுக்குப் பெரிதும் உதவியாயிருக்கக் கருதி இதில் அநேக படங்களும் சேர்க்கப்பட்டிருக்கின்றன.

இப்புத்தகம் அச்சிடப்படும்போது அச்சுநாடுகள் மூன்றும் சரணடைந்து விட்டன. ஆனால் இதுவரை பிரிட்டிஷ் நேசதேசத்தினரால் அடிமைகளாக அடக்கிவைக்கப்பட்டிருக்கும் எகிப்து, பாலஸ்தீனம், பாரசீகம், இந்தியா, பர்மா, மலாயா, இந்தோனேஷியா, இந்தோ சைனா, பிலிப்பைன் போன்ற ஆப்ரிக்க-ஆசிய நாடுகள் தத்தம் சுதந்திரத்திற்காக நடத்திவரும் போர்கள் இன்னும் நடந்துக்கொண்டே இருக்கின்றன. இந்த யுத்தத்தில் ஜெயித்த நன்றிகெட்ட வல்லரசுகள், கடந்த உலக மகாயுத்த முடிவில் நடந்து கொண்டது போலவே, வேறு சாக்கு போக்குகளைச் சொல்லி இந்நாடுகளை இனியும் நசுக்கிப் பிழிந்து சுரண்டிவாழ முயற்சிப்பதோடு மூன்றாவது உலக மகா யுத்தத்திற்கும் இப்பொழுதே விதையிடத் தொடங்கிவிட்டன.

ஜப்பானியர் முரட்டு நிர்வாகஸ்தர்கள்தான். ஆனால் இன்றைய உலகில் வேறு எந்த ஏகாதிபத்திய சர்க்கார் இரக்க சிந்தனையுடன் ஜனங்களிடம் நடந்து கொள்ளுகிறதென எடுத்துக் காட்டுங்கள் பார்ப்போம்! ஜப்பானியர் கொடுத்த அடியுதையால் ஏற்பட்ட திரேக வேதனையைவிட மேற்கத்திய ஏகாதிபத்திய வாதிகளின் சிறைகளில் ஆசிய மக்கள் படும் மனோ வேதனை மிக அதிக பயங்கரமானது. ஓர் ஐரோப்பியரும், ஓர் ஆசியரும் தன் எதிரில் வந்தால் ஜப்பானியர் அந்த ஆசியருக்கே முதலில் மரியாதை காட்டுவார். ஆசியர்கள் ஆங்கிலோ-அமெரிக்கருக்கு எவ்வகையிலும் கீழ்ப்பட்டவர்களல்லவென்ற தமது சுய சக்தியையும், சுயமரியாதையையும் உணர்ந்து, ஒன்று திரண்டு, வீராவேசம் பூண்டெழுந்து, இன்று மேற்கத்திய ஆக்கிரமிப்பாளர்களை எதிர்த்து நிற்பதற்கு நேர்முகமாகவோ அல்லது மறைமுகமாகவோ காரண கர்த்தாவான ஜப்பான் முதலில் பிரிட்டிஷ் நேசதேசத்தினரை அடியோடு தோற்கடித்து விட்டதென்ற உண்மையை மறுக்கவல்லவர் இவ்வுலகில் யாரேயுளர்? மேற்கு நாட்டினர் அனைவரும் ஏககாலத்தில் ஓர் சிறிய ஆசிய நாட்டிடம் இவ்விதம் படுதோல்வியடைந்தது உலக சரித்திரத்தில் இதுவே முதல்தடவை. எனினும் ஜப்பான் இறுதியில்தோல்வியுற்று சின்னபின்னமாகியது. இன்று ஆசியர்கள் துயில்நீங்கி, தலை

தூக்கியதற்குக் காரணம் ஜப்பானின் இந்த சுயத்தியாகந்தான். எனவே, ஆசியர்கள் என்று ஏகோபித்து அந்நியருக்கு முடி வணங்க மறுக்கின்றனரோ அன்றே உலகில் சமாதானம் நிலவும். அதுவரை உலகில் யுத்தங்கள் தோன்றுவதற்குத் தாமும் பொறுப்பாளிகள் என்பதை ஆசியர்களும், குறிப்பாக இந்தியர்களும் உணர வேண்டும்.

இப்புத்தகம் வெளிவர சதா எனக்கு ஊக்கமூட்டி, உதவி பல புரிந்த எனது மனைவி ஸ்ரீமதி கிருஷ்ணவேணி, சில பிளாக்குகள் கொடுத்துதவிய "மலாயா ட்ரிப்யூன்" ஆசிரியர் ஸ்ரீ எஸ். பாஸ்கரன், "ஜனநாயகம்" மானேஜர் ஸ்ரீ ஆர். ஸ்ரீரெங்கநாதன், "ஜெய் ஹிந்த்" கேலண்டர் பிரசுரக்கர்த்தா ஸ்ரீ என். கணேசன், முன்னுரையும், சிறப்புரைகளும் கொடுத்த ஸ்ரீ ஸுப்ரமண்யம், ஸ்ரீ அமலு, ஸ்ரீ தாஸ், ஸ்ரீ மோஹன் ஆகிய சகல கனவான்களுக்கும் நான் பெரிதும் கடமைப்பட்டுள்ளேன். இப்புத்தகத்தை இவ்வளவு விரைவில் மிக அழகாக சந்தோஷத்துடன் அச்சிட்டுக்கொடுத்த மலாயன் அச்சுக்கூட நிர்வாகத்தினருக்கும், தொழிலாளர்களுக்கும் இத்தகைய புத்தகம் வெளிவரவேண்டுமென என்னைக் கேட்டுக்கொண்ட சகல பொதுநல சகோதர சகோதரிகளும் என்றென்றைக்கும் வந்தனமளிப்பர். கிழக்காசிய இந்திய சுதந்திர சங்க சிலாங்கூர் சமஸ்தானக் கிளை தலைவரான ஸ்ரீ எம். கே. ராமச்சந்திரம் அவர்களின் உதவியின்றேல் இப்புத்தகம் வெளிவந்தே இராது. எனவே அவருக்கே நான் அதிகம் நன்றி செலுத்துகிறேன். இப்புத்தகத்தில் காணப்படும் உலக தேச படங்கள் அனைத்தையும் வரைந்து கொடுத்துதவிய எனது மைத்துனர் ஸ்ரீ எதிராஜுலு கோபால் அவர்களை நான் பெரிதும் பாராட்டுகிறேன்.

இப்புத்தகம் சில காரணங்களை முன்னிட்டு அவசரமாக வெளியிடப்படுவதால் அதிலுள்ள குற்றங்குறைகளைத் திருத்தியமைக்கப் போதிய அவகாசம் தற்சமயம் ஏற்படவில்லை. ஆனால் அவற்றை எடுத்துக் காட்டுபவர்களுக்கும், இப்புத்தகத்தின் பேரபிமானிகளுக்கும் எனது மனமார்ந்த வந்தனம் என்றும் உரித்தாகும்.

ஜெய்ஹிந்த்!

78, அம்பாங் ஸ்ட்ரீட்,
கோலாலம்பூர், 15-2-1946.

கே. பி. சுப்பையா

# முன்னுரை

‘யுத்தத்தைத் தடுக்க யுத்தம்’ என்று ராஜ தந்திரிகள் அடிக்கடி கூறி வந்ததுண்டு. அக்கூற்றை உலகம் ஓரளவு நம்பிய காலமும் உண்டு. ஆனால் இன்று அம்மயக்கம் அறவே தெளிந்துவிட்டதெனலாம். யுத்தத்தை யுத்தத்தால் தடுப்பதென்பது முரண்பாடான விஷயம். தாங்கள் போரில் ஈடுபட்டது நியாயமென்று உலகிற்குப் பறைசாற்றவே ராஜதந்திரிகள் அப்பொய்க்கூற்றைப் புனைந்தனர்.

யுத்தத்திற்கு, யாராலும் அடக்கமுடியாத இரு சக்திகள் உண்டு. ஒன்று துவேஷத்தை வளர்ப்பது; மற்றொன்று அடுத்த யுத்தத்திற்கு விதை விதைப்பதாகும். எனவே ‘யுத்தத்தைத் தடுக்க யுத்தம்’ என்று கூறுவதைக் காட்டிலும் ‘யுத்தத்தால் வரும் யுத்தம்’ என்று கூறுவதே முக்காலத்திற்கும் பொருந்தும்.

1914—18 யுத்த முடிவின் அநீதிகளே 1939—45 யுத்தத்திற்குக் காரணமாக அமைந்தன. இந்த யுத்தத்திற்குப் பின்னரும் யுத்தத்திற்கு அஸ்திவாரமான அநீதிகள் தீர்ந்தபாடில்லை.

‘யுத்தத்தால் வந்த யுத்தம்’ என மகுடமிட்டு ஸ்ரீ கே. பி. சுப்பையா எழுதியுள்ள இச்சரித்திர நூல், ஏகாதிபத்தியத்தின் சூழ்ச்சிகளையும், ஏழை நாடுகளின் துன்பங்களையும் மனமுருக, உணர்ச்சி ததும்பச் சித்தரிக்கின்றது. பல்வேறு யுத்தங்களுக்கும் மூலகாரணமான ஏகாதிபத்தியப் பேராசை இந்த நூலில் பட்டவர்த்தனமாகக் கண்டிக்கப்பட்டிருக்கிறது. தென் கிழக்காசியாவில் நடந்த இந்திய சுதந்திர யுத்தத்திற்காக இப்புத்தகத்தில் ஒரு பெரும் அத்தியாயம் இடம்பெற்றிருப்பது மிகவும் போற்றத்தக்கதாகும். ஏராளமான படங்களும் குறிப்பாக சுதந்திர இந்திய சர்க்கார் சம்பந்தமான படங்களும் இந்நூலுக்குச் சிறப்பையளிப்பதாக இருக்கின்றன. இதை வெளியிடுவதில் ஸ்ரீ சுப்பையா எடுத்துக்கொண்ட முயற்சி மிகவும் பாராட்டத்தக்கதே. இப்புத்தகத்தைத் தொகுத்துள்ள ஆசிரியருக்கு இந்திய மகாஜனங்கள் ஆதரவளித்து உற்சாகமூட்டுவரென்பதே எனது நம்பிக்கை.

ஜெய் ஹிந்த்!

ஜெயமணி, ஸா. ஸுப்ரமண்யம்.
ஆசிரியர், "ஜனநாயகம்"

கோலாலம்பூர்,
25—3—46.

# சிறப்புரை

"யுத்தத்தால் வந்த யுத்தம்" என்ற புத்தகத்தின் ஆசிரியரான ஸ்ரீ கே. பி. சுப்பையா அவர்களுடன் நெருங்கிப்பழகும் பாக்கியம் எனக்கு சுமார் 10-வருடங்களுக்கு முன்பே கிடைத்தது. இந்திய மாதாவின் விடுதலைக்காகப் பாடுபடும் படாடோபமற்ற சேவகர்கள் என்ற முறையிலேயே நாங்கள் ஒருவருக்கொருவரைத் தெரிந்துகொள்ளலானோம். 1932-ல் திருச்சினாப்பள்ளி பிஷப் ஹீபர் காலேஜில் பயிலும்போதே தோழர் சுப்பையாவைப் பத்திரிகைத்தொழில் வசீகரித்துவிட்டது. அவர் கோலாலம்பூர் "தமிழ் நேசன்" பத்திரிகையில் ஆசிரியப்பகுதியில் ஸ்ரீ ஜெயமணி ஸுப்ரமண்யம் அவர்களுடன் சேவையாற்றிய பிறகு, மலாயாவில் மிகப்பிரபலமடைந்த "ஜெயமணி" தினசரியை இருவரும் சேர்ந்தே உருவாக்கி நடத்தினர். இந்தியாவிலும், இந்நாட்டிலுமுள்ள பல பிரபல தமிழ் ஆங்கிலப் பத்திரிகைகளில் புனைப்பெயருடன் வெளியாகியுள்ள ஸ்ரீ சுப்பையாவின் மனமுருகும் கட்டுரைகளுக்கு வாழ்த்துகள் ஏராளம் வருவதைக் கண்டிருக்கிறேன்.

இந்நாட்டை ஜப்பானியர் ஆக்கிரமித்ததும் தோழர் சுப்பையா பேரா சமஸ்தான இந்திய சுதந்திர சங்க சார்பாக "புது உலகம்" என்ற தினசரியை சிருஷ்டித்து, அதன் ஆசிரியராக இருந்த காலத்தில்தான் இந்நாட்டு இந்திய வாலிபர்களும், தொழிலாளர்களும் அவரது எழுத்தழகையும், வேகத்தையும், திறமையையும் கண்டு மனம்பூரிக்கலாயினர்.

"ஜெயமணி சுப்பையா" "புது உலகம் சுப்பையா" என்ற இரண்டும் நம் இளைஞரைத்தான் குறிப்பது. அவர் ஓர் சிறந்த தேசாபிமானியோடு, சமதர்மவாதியுமாவார். எனவே அவர் சதா இந்திய சுதந்திரத்திற்காக மட்டுமின்றி, தொழிலாளர்களின் சார்ப்பாகவும் போராடிவருவதில் அதிசயமில்லை.

அத்தகைய ஒருவரால் எழுதப்பட்ட இப்புத்தகம் கட்டாயம் சகலராலும் படிக்கப்பட வேண்டியதவசியம்.

ஜேய் ஹிந்த்!

கோலாலம்பூர், எஸ். அமலு,

28-3-1946. தலைவர், சிலாங்கூர் இந்திய ஒற்றுமைச்சங்கம்

# சிறப்புரை

"புது உலகம்" ஆசிரியரும், "ஜெயமணி" நிர்வாக பிரசுர கர்த்தாவுமாகிய நம் மதிப்பிற்குரிய தோழர் கே. பி. சுப்பையா அவர்களின் பல வருட உழைப்பை உருவாகக் கொண்டதே "யுத்தத்தால் வந்த யுத்தம்" என்னும் இந்நூல். ஐரோப்பிய, ஆசிய விஷயங்களையும், மலாய் நாட்டின் மிகப்பெரிய இந்தியத் தொழிலாளரின் எழுச்சியாகிய 1940-ம் வருட சிலாங்கூர் வேலை நிறுத்தத்தின் நியாயமான காரணங்களையும், அதனுல் அதிகாரிகள் தொழிலாளர்களுக்கும், இந்தியர்களுக்கும் விளைவித்த அநீதிகளையும் தெளிவாக விளக்கும் இந்நூல் மகாஜனங்களின் நல்லாதரவைப்பெற்று, ஆசிரியர் மற்றும் பல நூல்களையும் தொகுப்பதற்கு ஊக்குவிக்குமென நம்புகிறேன்.

ஆசிரிய அன்பரீர்,

தங்களுடைய இப்புனித முயற்சிக்காக பல்லாயிரக் கணக்கான அங்கத்தினர்களைக்கொண்ட நம் சங்க சார்பாக எனது பரிபூரண அன்பையும், ஆசியையும் அளிக்கிறேன்.

வாழ்க வையகம்!

ஆர். மோஹன்,
தலைவர்,
சிலாங்கூர் மாகாண பொது
தொழிலாளர் சங்கம்.

85, ஹை ஸ்ட்ரீட்,
கோலாலம்பூர்.
29-3-1946.

# சிறப்புரை

இரண்டாவது உலக மகாயுத்தம் தற்கால நவீன நாகரிக அழிவுக் கருவிகளைக்கொண்டு ஒருவாறு முடிவுபெற்றது. பல சாம்ராஜ்யங்கள் மறைந்து புது சாம்ராஜ்யங்கள் தோன்றுகின்றன. ஆனால் எதிர்காலத்தில் உலக மக்கள் சமாதானமாக வாழ முடியுமா? திருவாளர் கே. பி. சுப்பையா அவர்களால் எழுதப் பெற்ற "யுத்தத்தால் வந்த யுத்தம்" என்னும் புத்தகம் இக் கேள்விக்குப் பதிலளிக்கிறது.

திருவாளர் கே. பி. சுப்பையா ஒரு இளைஞர். எதிர்கால உலகம் இவர்போன்ற இளம் எழுத்தாளர்களின் உள்ளங்களையும், உழைப்பையுமே விரும்புகிறது. இவர் தான் எண்ணுவதையும், தன் அனுபவத்தையும், தன் லக்ஷியத்தையும் எவ்வித எதிர்ப்புக்கும் அஞ்சாது வெளியிடுபவர். இதன் உண்மை இப் புத்தகத்தைப் படித்தால் தெள்ளிதில் புலனாகும்.

இவர் இளைஞரேயாயினும் பத்திரிகையுலகில் இவருக்கு நல்ல அனுபவம் உண்டு. சிறந்த தேச பக்தர். தொழிலாளர்களின் நலனுக்காக உழைப்பவர். இவருடைய இப் புத்தகத்திற்கு தமிழ் மக்கள் பேராதரவளித்து மேலும் மேலும் இவருக்கு ஊக்கமளிப்பார்களென நம்புகிறேன்.

ஜேய் ஹிந்த்!

எஸ். எம். தாஸ்,

மானேஜர், வி. ஜி. சன்ஸ்.

கோலாலம்பூர்,

27—3—1946.

(திரு. தாஸ் அவர்கள் கிழக்காசிய இந்திய சுதந்திர சங்க சிலாங்கூர் சமஸ்தானக் கிளையின் கௌரவ பொக்கிஷதாராய் இருந்தவர்.)

# யுத்தத்தால் வந்த யுத்தம்.

## அத்தியாயம்—1

2518

### முதலாவது உலக மகாயுத்தம்

[இதன் கீழ் 1914—18-ல் நடந்த முதலாவது உலக மகாயுத்தம்—அந்த யுத்த முடிவில் ஏற்பட்ட வெர்சயில்ஸ் உடன்படிக்கை—சர்வதேச சங்கம்—அச்சங்கத்தைப் பிற்காலத்தில் பிரிட்டனும், பிரான்ஸும் எவ்விதம் தமது ஏகாதிபத்திய சுயநலன்களுக்காக உபயோகித்துக் கொண்டு, இரண்டாவது உலக மகாயுத்தத்திற்கு விதையிட்டன—என்பன போன்ற விவரங்கள் தரப்பட்டுள்ளன.]

நாமறிந்த வரை நடந்திருக்கும் பயங்கரப் போர்களில் ஒன்று 1914-18-ல் நடந்த முதலாவது உலக மகாயுத்தம்; மற்றது இன்று நடக்கும் இரண்டாவது உலக மகாயுத்தம். இவை ஆரம்பத்திலேயே உலக மகாயுத்தங்களாகத் தோன்றி விடவில்லை. நாள் செல்லச் செல்லத்தான் அவை உலக மகா யுத்தங்களாக மாறின. இரண்டாவது உலக மகா யுத்தத்திற்கு விதை விதைத்த முதலாவது உலக மகாயுத்தத்தைப் பற்றிச் சிறிது விளக்குவது ஈண்டு அவசியமாகும்.

ஆறு வல்லரசுகளென்றால் எத்தனையோ காலமாக பிரிட்டன், பிரான்ஸ், ஜெர்மனி, ஆஸ்திரியா, ரஷியா, இத்தாலி என்ற ஆறு நாடுகளையே குறிப்பதா யிருந்து வந்தது. இதில் பிரிட்டிஷ், பிரஞ்சு நேசதேசத்தினர் அகில உலகிலும் நல்ல ஆதிக்கம் பெற்றிருந்தனர். ஆனால் ஜெர்மானியர் ஆப்பிரிக்காவிலும் ஐரோப்பாவிலும் மட்டும் சிறிது ஆதிக்கமே பெற்றிருந்தனர். இதனால் பல வருடங்களாக இரு தரப்பினர்க்கிடையிலும் மனஸ்தாபம் வளர்ந்து கொண்டே வந்தது. மேலும் ஐரோப்பாவிலும் சரி, அகில உலகிலும் சரி யாரும் தன்னைவிட அதிக பலசாலியாக

வந்து விடக்கூடாதென்ற நோக்கத்துடன் பிரிட்டன் "சமபலம்" (Balance of Power) என்ற கொள்கையை நிலை நாட்ட சகலத்தையும் செய்து வந்தது. அதன் பிரகாரம் ஐரோப்பிய நாடுகள் ஒன்றிரண்டு ஒரு முகப்படுவதையும் பிரிட்டன் சகித்துக் கொள்ளாது. ஒன்றுக்கொன்று சிண்டு முடிபோடும் "பிரித்தாளும்" தந்திரமே பிரிட்டனின் பாரம்பரியத் தொழிலாக இருந்து வந்திருக்கிறது. ஜெர்மனிக்கும், பிரான்ஸிற்கும் என்றும் ஏழாம் பொருத்தந்தான். எனவே பிரிட்டன் ஜெர்மனிக்கு விரோதமாகப் பிரான்ஸைத் தன் வசப்படுத்திக்கொண்டு அகில உலக சட்டாம் பிள்ளையாக விளங்கிவந்தது. நெப்போலியன் தலைமையில் தன்னை வதைத்த பிரான்ஸ் பிரிட்டனோடு சேர்ந்து கொண்டு, சதா கொட்டமடித்து வருவதைக்கண்ட ஜெர்மனிக்கு எவ்வளவு ஆத்திரமுண்டாகி யிருக்குமென வாசகர்கள்தான் ஊகித்துக்கொள்ள வேண்டும்.

எனவே கி. பி. 1914-ல் ஐரோப்பிய வானில் யுத்த மேகம் சூழலாயிற்று. சாகுபவன் என்றிருந்தாலும் சாகவேண்டியவன் தான். எனினும் சாவதற்குத் தலைவலி, காய்ச்சல், கத்திக்குத்து, காடாத்து என்பன போன்ற ஏதாவதோர் காரணம் கூறப்படுகின்றதல்லவா? அதேபோல் ஐரோப்பிய யுத்தமும் ஓர் காரணத்திற்காகக் காத்துக் கொண்டிருந்தது. ஒரு தீக்குச்சி உரைக்க வேண்டியதுதான் பாக்கி; மீதி எல்லாம் தயாராயிருந்தது. முதலாவது உலக மகாயுத்தத்தைப்பற்றி எதையும் அறியுமுன்பு ஜெர்மன் சாம்ராஜ்யமும், ஆஸ்திரிய—ஹங்கேரிய சாம்ராஜ்யமும் அண்ணன் தம்பிபோல் என்பதைச் சகலரும் மனதில் வைத்துக் கொள்ளவேண்டும். செர்பியாக்காரர் சிலர் சரஜீவோ எனுமிடத்தில் 1914-ளு ஜூன்-மீ 28-ம் தேதி ஆஸ்திரிய பட்டத்திளவரசராகிய அர்ச்ட்யூக் பிரான்ஸிஸ் பெர்டினண்டைக் கொலை செய்து விட்டனர். இச்சம்பவந்தான் கடந்த உலக மகாயுத்த அக்னி மூண்டதற்கு நெருப்புக் குச்சாகியதென அதிகாரத் தோரணையில் வெளியான சரித்திரங்கள் கூறுகின்றன. இது நிற்க, 1914 ஜுலையில் ஆஸ்திரியா செர்பியாவிற்கு விடுத்த ஒரு இறுதி எச்சரிக்கை தனது பட்டத்திளவரசரைக் கொன்று விட்டதற்காக பெரும் நஷ்டயீடு கேட்டுப் பல நிபந்தனைகளை செர்பியாமீது விதித்தது. செர்பியா அதை ஒப்புக்கொள்வது முடியாத காரியமா யிருந்தது. திரை மறைவிலிருந்த முக்கிய ஐரோப்பிய

வல்லரசுகளும் ஆஸ்திரியாவையும், செர்பியாவையும் தூண்டிவிட்டு வந்தன. எனவே பிரஸ்தாப இறுதி எச்சரிக்கை ஆஸ்திரியா-செர்பியா யுத்தப் பிரகடனமாயிற்று. இதனால் ரஷியாவும் பாதிக்கப் பட்டது. ஏனெனில் செர்பியாவின் நலன்களைப் பாதுகாப்பதாக பல சந்தர்ப்பங்களிலும் ரஷிய சர்க்கார் வாக்களித்திருந்தது. எனவே ஜெர்மனி ரஷியாமீது 1-8-1914-ல் யுத்தப் பிரகடனம் செய்தது. இதற்கிடையில் ஜெர்மனிக்கும், பிரான்ஸுக்கு மிடையில் நெருக்கடி முற்றி வந்தது.

பெல்ஜியத்தின் நடுநிலைமையைப் பாதுகாப்பதாக ஜெர்மனி, பிரான்ஸ், பிரிட்டன் ஆகிய மூன்றும் சேர்ந்து 1830-ல் ஓர் ஒப்பந்தத்தில் கையெழுத்திட்டிருந்தன. இவ்வொப்பந்தத்தை அலட்சியம் செய்து ஜெர்மன் துருப்புகள் 1914—ஆகஸ்டில் பெல்ஜியத்தின் மீது பிரவேசித்தன. எனவே பெல்ஜியம் 4-8-1914-ம் தேதி ஜெர்மனி மீது யுத்தப் பிரகடனம் செய்தது. அதே தேதியில் பிரிட்டனும் ஜெர்மனி மீது யுத்தப் பிரகடனம் செய்தது. இத்தாலி, ருமேனியா, ஜப்பான், ரஷியா, போர்ச்சுகல், அமெரிக்கா (U.S.A.) ஆகிய நாடுகள் பிரிட்டிஷ்—பிரெஞ்சு நேசதேசத்தினர் சார்பாகவும், துருக்கியும், பல்கேரியாவும், ஜெர்மன்—ஆஸ்திரிய நேசதேசத்தினர் சார்பாகவும் இந்த யுத்தத்தில் ஈடுபடவே, ஆஸ்திரியா—செர்பியா யுத்தம், ஐரோப்பிய யுத்தமாகி இறுதியில் அகில உலக யுத்தமாய் மாறிவிட்டது. கிழக்குப் பிரான்ஸ், போலந்து, டிரேன்ஸில்வேனியா, பால்கன் நாடுகள், வட இத்தாலி, மெஸபொட்டேமியா, சிரியா, கிழக்காப்பிரிக்கா, ஏழு கடல்கள் ஆகியவிடங்கள் யுத்தகளங்களாக விளங்கின.

இந்த யுத்தத்தில் கலந்துகொண்ட நாடுகளில் அமெரிக்கா (U.S A.) பிரான்ஸ் ஆகிய இரண்டும் குடியரசுகள். மற்றவைகள் முடியரசுகள். ஜெர்மனியில் வில்லியம் கெய்ஸரும், ஹாலந்தில் வில்ஹெல்மினா அரசியும், பெல்ஜியத்தில் லெப்போல்ட் மன்னரும், பிரிட்டனில் ஐந்தாம் ஜார்ஜ் அரசரும், ரஷியாவில் நிக்கலஸ் ஜாரும், ஆஸ்திரிய ஹங்கேரியில் பிரான்சிஸ் ஜோசப் மன்னரும், துருக்கியில் கலீபா அப்துல் ஹமீது சுல்தானுமாக முடியரசு நடத்திவந்தனர். 12-3-1917-ல் ரஷியாவில் லெனின்—ஸ்டாலின்—ட்ராட்ஸ்கி தலைமையில் பொதுவுடமைக் கட்சியார் புரட்சி செய்து, ஜாரை சிறைபிடித்து சர்க்காரைக் கைப்பற்றிக்

குடியரசேற்படுத்திக் கொண்டனர். மேலும் புது ரஷியா பிரஸ்ட்—லிடோவ்ஸ்க் எனுமிடத்தில் 15-11-1917-ல் ஜெர்மனியோடு யுத்த நிறுத்த ஒப்பந்தம் செய்து கொண்டது. எனினும் நாளடைவில் ஜெர்மன் தைரியம் சிர்குலைந்தது. அதன் கடற்படைக்குள் கலகமூண்டது—அதன் இராணுவத்தினர் மனந் தளர்ந்தனர். அதன் தொழிலாளர்களும் யுத்தத்தை வெறுக்கலாயினர். இக்காரணங்களின் விளைவாக உள்நாட்டில் கலகமூண்டு 9-11-1918-ல் ஜெர்மன் கெய்ஸர் ஹாலந்துக்கு ஓடி விட்டார். எனவே 11-11-1918-ம் தேதி பிரிட்டிஷ் நேசதேசத்தினரோடு யுத்த நிறுத்த ஒப்பந்தம் செய்து கொள்ளும்படியாக ஜெர்மனிக்கு நிர்ப்பந்தமேற்பட்டது. இந்த யுத்த விளைவாக ரஷியா, துருக்கி, ஜெர்மனி, ஆஸ்திரிய-ஹங்கேரிய நாடுகளில் முடியரசு நீங்கி குடியரசேற்பட்டன.

## வெர்சயில்ஸ் உடன்படிக்கை

1914-லிருந்து 1918-ம் வருடம் வரை ஜெர்மனி பல்லைக் கடித்துக்கொண்டு போராடிய பிறகு பிரிட்டிஷ் நேசதேசத்தினரோடு 11-11-1918-ல் யுத்த நிறுத்த ஒப்பந்தம் செய்து கொள்ளும்படி அதற்கு நிர்ப்பந்தமேற்பட்டதல்லவா? அதன் பிரகாரம் ஜெர்மனி நிராயுதபாணியாகச் செய்யப்பட்டது. ஜெர்மனியும், அதன் நேசதேசங்களும் சிறிது சிறிதாகச் சிதைக்கப்பட்டு, ஒன்றோடொன்று சேர்ந்து, திரும்பவும் பலம் பெற்று விடாதபடி சகல தந்திரங்களும் பகல் கொள்ளை போல் நடத்தப்பட்டன. பாஞ்சாலியின் மானம் போவதைக் கண்ணாரக் கண்டும் சகித்துக் கொண்டிருந்த பாண்டவர்களைப்போல் ஜெர்மானியர்கள் மூச்சு விடமுடியாதிருந்தது. ஜெர்மனியின் மீது 1130 கோடி பவுன் யுத்தக்கடன் சுமத்தப்பட்டது. அது தனது ஆப்பிரிக்கக் குடியேற்ற நாட்டையும், அற்புதக் கடற்படையையும், புஜபல பராக்ரமம் பொருந்திய தரைப் படையையும் இழந்தது. மேலும் யுத்த நிறுத்த ஒப்பந்தப்படி ஜெர்மனிக்கு நேசதேசத்தினர் உடனே உணவுப்பொருள் சப்ளை செய்ய வேண்டும். ஆனால் அதற்கு மாறாக பிரிட்டிஷ் நேசதேசத்தினர் இனியும் தொடர்ந்து கடல் மறியல் செய்து வந்தனர். அதனால் ஜெர்மனியில் பெரும் பஞ்சமேற்பட்டது. அங்கு ஏறக்குறைய 10 லக்ஷம் மக்கள் மடிந்தனர். ஜெர்மனியை வஞ்சந் தீர்ப்பதற்காகப் பிரிட்டிஷார் செய்த இந்த சகிக்க முடியாத—தர்ம விரோதமான—அக்கிரமத்தைப் பிரிட்

டிஷ்—பிரஞ்சு சரித்திர ஆசிரியர்கள் குறிப்பிடவே இல்லை. இது போன்ற இன்னுமனேக அவமானகரமான நிபந்தனைகளை ஜெர்மனி ஒப்புக்கொண்ட பிறகு, 1919-ம் வருடம், ஜூன் மாதம், 28-ம் தேதி ஜெர்மனிக்கும், நேசதேசத்தினருக்குமிடையில் வெர்சயில்ஸ் (பிரான்ஸ்) பட்டணத்தில் சமாதான உடன்படிக்கை கையெழுத்தாயிற்று. இத்தோடு முதலாவது உலக மகாயுத்தமும் முடிவுற்றது.

## சர்வதேச சங்கம்

பிரிட்டனும், பிரான்ஸும் இந்த யுத்தத்தினலடைந்த லாபங்களனைத்தையும் தம் சுய நலத்திற்காகவே வைத்துக்கொண்டன. இத்தாலி, ஜப்பான் போன்ற தம் நேசதேசத்தினருக்கு எதையும் பிரமாதப் பிரதிபலனாகக் கொடுத்து விடவில்லை. ஆனால் தமக்கு மட்டிலும் ஏராளமான ஆஸ்தி, பூஸ்திகளைச் சம்பாதித்துக் கொண்டன. யுத்தத்தின்போது தமக்கு உதவும்படிக்கும், அதற்குப் பதிலாக யுத்தம் முடிந்ததும் அவ்விதம் உதவி புரிந்த நாடுகளுக்கு பலவித உபகாரங்களைச் செய்வதாகவும், தம்மிடம் அடிமைகளாய்த் தவிக்கும் நாடுகளுக்குச் சுதந்திரமளிப்பதாகவும் பிரிட்டனும் பிரான்ஸும் வாக்குறுதி கொடுத்திருந்தன. ஆனால் யுத்தத்தில் வெற்றிபெற்றதும் அவ்வாக்குறுதிகளை நிறைவேற்ற அவைகளுக்கு மனமில்லை. இந்த யுத்தத்தில் அதிகமும் ஏமாற்றப்பட்டவை இந்தியாவும், அரேபிய முஸ்லிம் நாடுகளுந்தான். இவ்விதம் பிரிட்டனும், பிரான்ஸும் எதாலாபத்தில் சம்பாதித்த சொத்துகளைத் தமக்கு நிரந்தரமாக்கிக் கொள்ளும்பொருட்டு ஒரு ராஜதந்திரத் திட்டத்தை வகுத்தன. எனினும் இத்திட்டத்திற்கு வெளிப்படையாகக் கூறப்பட்ட காரணம் வேறு. உலகில் இதுபோன்ற கொடிய யுத்தங்கள் இனிமேலாவது ஏற்படாதிருக்கும்படி பார்த்துக் கொள்ளவேண்டுமென வெளிக்குச் சொல்லி அவ்விரு நாடுகளும் சேர்ந்து சர்வதேச சங்கம் (League of Nations) என்ற ஒன்றை 1920-ல் ஸ்தாபித்தன.

வெர்சயில்ஸ் சமாதான உடன்படிக்கையில் கையொப்பமிட்ட நாடுகள்தான் இச்சங்கத்தின் பூர்வீக அங்கத்தினர்கள். ஆனால் அமெரிக்கக் குடியரசு இதில் சேர மறுத்துவிட்டது. பிரிட்டனும், பிரான்ஸும் எப்படியோ தகடுதத்தம் செய்து ஜெயமுற்றவையெனப் பெயரெடுத்துவிட்டபடியால் அவை அமெ

சிக்காவை சட்டை செய்யவில்லை. ரஷியாவைச் சேர்த்துக்கொள்ள மறுத்து விட்டன. இந்தியா போன்ற அடிமை நாடுகளுக்கு அச்சங்கத்தில் நேரடியாக வேலையில்லை. அடிமை நாடுகளின் சார்பாக எஜமான நாடுகள் அதில் அங்கம் வகித்தன. எனினும் அடிமைநாட்டு மக்களின் சந்தாத்தொகை மட்டிலும் அச்சங்கத்திற்கு நிர்ப்பந்தமாய் வசூலிக்கப்பட்டு வந்தது. இறுதி வரையில் இச்சங்கத்தில் மொத்தம் 55 நாடுகள் அங்கம் வகித்தன.

இச்சங்க நோக்கங்களும், சட்ட திட்டங்களும் மிகவும் நல்லவை தான். ஆனால் காகிதத்தில் சர்க்கரை என்று எழுதி வைத்திருந்தால் நாவுக்கு ருசிதட்டிவிடுமா? சொல்வது சுலபம்; செய்வது கஷ்டம். வாய் வாழைப்பழம், கை கருணைக்கிழங்கு. சர்வதேச சங்கத்தின் நோக்கங்களும், சட்டதிட்டங்களும் தர்மபூர்வமாகக் கையாளப்படவே இல்லை. "உலக சமாதானத்திற்காக அகில உலக ஒத்துழைப்பு. உலக நாடுகளுக்கிடையில் நீதி நேர்மையான உறவுகள். தமக்குள் ஏற்படும் சச்சரவுகளை சங்கத்தாரிடம் முறையிட்டு சமரஸமாய்த் தீர்த்துக்கொள்ளவேண்டும். சங்கத்தின் பொதுக்கூட்டம் வருடமொருதரம் ஸ்விட்ஸர்லந்திலுள்ள ஜினிவாவில் நடைபெறும். அதன் கமிட்டிக் கூட்டங்கள் வருடம் நான்கு முறைகள் நடக்கும். சர்வதேச நீதிமன்றத்தின் நிரந்தரஸ்தலம் ஹாலந்திலுள்ள ஹேக் பட்டணமாகும். முறை சொல்லிக்கொண்ட நாடு சர்வதேச சங்கத் தீர்ப்பிற்காக ஆறு மாத காலம் வரை காத்திருக்கவேண்டும். மேற்கொண்டும் மூன்று மாதம் வரை பொறுத்திருக்க வேண்டும். இதற்கிடையில் எந்த நாடும் மாற்றான் நாடு அல்லது நாடுகள் மீது யுத்தம் தொடங்கக்கூடாது. சர்வதேச சங்கத் தீர்ப்பை மீறியோ அல்லது சர்வதேச சங்கத்திடம் முறை சொல்லிக் கொள்ளாமலோ அல்லது முறை சொல்லிய பிறகு அது தீர்ப்பளிக்கும் வரை காத்திராததோ எந்த ஓர் நாடும் மற்றதை ஆக்கிரமிக்கத் தொடங்குமாயின் அவ்வித ஆக்கிரமிப்பாள நாட்டின் மீது சர்வதேச சங்கத்தில் அங்கத்தினராயுள்ள இதர நாடுகளனைத்தும் சேர்ந்து போர் தொடுப்பது." ஆகிய இவைகள்தான் இச்சங்கத்தின் முக்கிய சுருக்கமான நோக்கங்களும், சட்ட திட்டங்களும். அடிமை நாடுகளுக்கு இச்சங்கத்திடம் முறை சொல்லிக் கொள்ளக்கூட வசதியில்லாதவாறு பிரிட்டனும், பிரான்ஸும் தந்திரம் செய்து விட்டன. சுருக்கக் கூறில் பிரிட்டிஷ்—பிரஞ்சுக்காரர்களால் தமது பரந்த ஏகாதிபத்திய சாம்ராஜ்ய சுயநலங்களை

என்றென்றைக்கும் நிரந்தரமாகப் பாதுகாத்துக்கொள்ள ஓர் கருவியாக இச்சங்கம் உபயோகிக்கப்பட்டு வந்தது.

கி. பி. 1918-ம் வருட வெர்சயில்ஸ் உடன்படிக்கைக்குப் பிறகு பிரிட்டனும் பிரான்ஸும் சர்வதேச சங்கத்தின் மூலம் தமது ஆதிக்கத்தை நாளொரு மேனியும், பொழுதொரு வண்ணமுமாக அதிகப்படுத்திக்கொண்டு வந்தன. ஆனால் அதே சமயத்தில் இத்தாலி, ஜப்பான், ரஷியா, ஜெர்மனி, துருக்கி, இந்தியா, சயாம் ஆகியவற்றின் அதிகரித்து வரும் செல்வாக்கைக் கண்டு சிறி விழுந்தன. 1939-ம் வருடம் செப்டம்பர் மாதம் 30 நாட்களுக்குள் இருந்தவிடம் தெரியாமற்போன போலந்தைச் சிருஷ்டித்தது வெர்சயில்ஸ் உடன்படிக்கைதான். ரஷியா ஜார் நிக்கலஸ் பிரிட்டிஷ் அரச வம்சத்திற்கு ஒரு வழியில் உறவினர். அவரையும் அவரது வம்சத்தையும் பொதுவுடைமைக்காரர்கள் 16-7-1918-ல் சுட்டுக்கொன்றுவிட்டனர். பொதுவுடைமை ரஷியாவை ஒழிக்க முதலாளித்துவ பிரிட்டிஷ், பிரஞ்சு ஏகாதிபத்திய சர்க்கார்கள் அளவற்ற வஞ்சகங்களைப் புரிந்தன. மேலும் ரஷியா இறுதி வரையும் போர் செய்யாது இடையிலேயே ஜெர்மனியுடன் சமாதானம் செய்து கொண்டதற்குப் பழிக்குப்பழி வாங்குமுகத்தான் அதற்குச் சொந்தமான பெஸரேபியாவையும், புக்கோவினாவையும் பிடுங்கி ருமேனியாவுக்குக் கொடுத்தன. இதுவும் போதாதென போலந்தையும், பின்லந்தையும் தூண்டிவிட்டு ரஷியா மீது போர் துவங்கச்செய்து வேடிக்கை பார்த்தன. பிரிட்டிஷ், பிரஞ்சு வஞ்சகத்தை நன்குணர்ந்த பொதுவுடைமை ரஷியக் குடியரசுத் தலைவரான லெனின் மிகச்சாதுர்யமாய்ப் போலந்துடனும், பின்லந்துடனும் சமாதானம் செய்துகொண்டார். இன்றேல் ரஷியாவின் பாடு ஆபத்தாயிருக்கும். ஏனெனில் உலக மகா யுத்தத்திலும், உள் நாட்டுப் புரட்சியிலுமிருந்து ரஷியா அப்பொழுதான் தலைதூக்கவாரம்பித்தது. ரிக்க பிரஸ்தாபச் சமாதானப்படி போலந்திற்குச் சில பிரதேசங்களும், பின்லந்திற்குப் பெட்ஸாமோ ஜில்லாவும் 20 வருடக் குத்தகைக்கு எழுதிக் கொடுக்கப்பட்டன. இக்குத்தகைக் காலாவதி கி. பி. 1938-ல் முடிவடைய வேண்டியது. இவ்விதமாக நாளடைவில் ரஷியாவின் செல்வாக்கு பரவலாயிற்று.

ரஷியாவில் ஜோசப் ஸ்டாலினும், துருக்கியில் கமால் பாஷாவும், ஜெர்மனியில் அடால்ப் ஹிட்லரும், இத்தாலியில் ஸீனோர் முஸோலினியும், சர்வாதிகாரிகளாகி தத்தம் நாடுகளை

அதி தீவிரமாகப் புனருத்தாரணம் செய்து வந்தனர். உலகிலுள்ள சகல நாடுகளும் ஒன்றுக்கொன்று தெரியாமல் ஆயுத உற்பத்தியைத் தெய்வத் திருப்பணியாகச் செய்து வந்தன. வெர்சயில்ஸ் உடன்படிக்கைப்படி நிராயுதபாணிகளாக்கப்பட்ட நாடுகளே இதில் முதன்மை வகித்தன. ஆனால் பிரிட்டனும், பிரான்ஸும் தமது அடிமை நாடுகளை அடக்கிச் சுரண்டுவதிலேயே அதிகக் கவனம் செலுத்தி வரலாயின. அமெரிக்கா வட்டிக்குக் கொடுத்து வாங்குவதையே பிரமாதமாகக் கருதிவந்தது. கடந்த உடன்படிக்கைப்படி சகல எதிரிகளும் நிராயுதபாணிகளாகச் செய்யப்பட்டுவிட்டபடியால் தம்மை ஜெயிக்க இனி யாரும் இவ்வுலகில் இல்லையெனும் மமதையாலும், தமது ஊழ்வினைப்பயனாலும், பிரிட்டனும் பிரான்ஸும் இதர நாடுகளின் ஆயுதபலத்தை அறியாது அவற்றை அலட்சியமாகக் கருதி இருந்தனவெனினும், பொதுவுடைமை ரஷியாவின் பலத்தை மட்டிலும் ஒருவாறு உணர்ந்துகொண்டு அதை இனி பகிரங்கமாக அடக்கமுடியாதெனத் தெரிந்ததும் அதற்கெதிராகச் சதி செய்து வந்தன.

மஞ்சுகோவில் ஜப்பான் எடுத்துக்கொண்ட நடவடிக்கைகளைக் கண்டித்ததன் பயனாக 27-3-1933-ல் ஜப்பான் சர்வதேச சங்கத்திலிருந்து விலகிக்கொண்டது.

இதற்கிடையில் ஜெர்மனி தனக்குப்போதிய ஆயுத பலத்தை சேகரித்துக்கொண்டது. எனவே பிரிட்டனும் பிரான்ஸும் ஜெர்மனியின் பலத்தைக் கண்டஞ்சின. அதன் பயனாக ஜெர்மனி, இதாலி, பிரிட்டன், பிரான்ஸ் ஆகிய நான்கு வல்லரசுகளுக்கிடையிலும் ரோமாபுரியில் 15-7-1933-ல் ஓர் ஒப்பந்தமேற்பட்டது. எனினும் ஜெர்மனி 14-10-1934-ல் ஆயுதப்பரிகரண மகாநாட்டிலிருந்துப், சர்வதேச சங்கத்திலிருந்தும் விலகிக் கொண்டது!

ஜெர்மனிக்குச் சொந்தமாயிருந்த ஸார் பிரதேசத்தை யுத்தத்திற்குப் பிறகு பிரான்ஸ் அனுபவித்துக் கொண்டிருந்தது. ஆனால் ஜெர்மனி அதைத் திரும்பவும் 1934-ல் எடுத்துக்கொண்டது. பொதுவுடைமை ரஷியா 18-10-1934-ல் சர்வதேச சங்கத்தில் சேர்த்துக் கொள்ளப்பட்டது. இதற்கிடையில் ஸ்பெயினில் குடியரசுக் கிளர்ச்சி ரஷிய செல்வாக்கில் வளர்ந்து வந்தது. 5-11-1934-ல் அங்கு புரட்சி ஏற்பட்டு சமதர்ம சர்க்கார்

ஸ்தாபிக்கப்பட்டது. அல்பான்ஸோ மன்னர் நாட்டைத்துறந்து ஓட்டம் பிடித்தார்.

இதற்குள் ஆயுத உற்பத்தியில் முழுமுயற்சி செய்துவந்த இத்தாலியும் தயாராகிவிட்டது. இதைக்கண்டு அஞ்சி பிரான்ஸ் பிரிட்டனுக்குத் தெரியாமல் இத்தாலியுடன் ரகசியமாக 7-1-1935-ல் ஓர் ஒப்பந்தம் செய்துகொண்டது. பிரிட்டன் பிரான்ஸிற்குத் தெரியாமல் ஜெர்மனியுடன் ரகசியமாய் இதே வருடம் ஓர் ஒப்பந்தம் செய்து கொண்டது. அதன் பயனாக 15-1-1935-ல் ஸார் பிரதேசத்தை ஜெர்மனி மீண்டும் பிடித்துக் கொண்டது.

இச்சமயத்தில் ஆப்பிரிக்காவில் சுதந்திர நாடாக மீந்திருந்தது அபிஸீனியா ஒன்றுதான். இத்தாலியின் திருஷ்டி அதன் மேல் விழுந்தது. ஹெயிலி ஸெலாஸி சர்வதேச சங்கத்திடம் முறையிட்டுக்கொண்டார். இத்தாலி பகிஷ்கரிக்கப்பட்டது. ஆனால் சர்வதேச சங்க சட்டப்படி அதன் மீது பிரிட்டனும், பிரான்ஸும் இதர அங்கத்தினர்களும் படையெடுக்கவில்லை. 3-10-1935-ல் யுத்தமாரம்பித்து அபிஸீனியா 9-5-1936-ல் இத்தாலியின் குடியேற்ற நாடாகியது. ஹெயிலி ஸெலாஸி 2-5-1936-லேயே லண்டனுக்கு ஓடி விட்டார். இதற்கு முன்பே இத்தாலி அல்பேனியாவையும் பிடித்துக்கொண்டு விட்டது. பிரிட்டனும், பிரான்ஸும் இஞ்சிதின்ற குரங்குகளைப்போல் பல்லைக் காட்டிக்கொண்டிருந்தன.

இவற்றின் கோழைத்தனத்தை ஹிட்லர் நன்கறிந்துகொண்டார். மேலும் பிரிட்டன் தன்னோடு ரகசியமாய் ஒப்பந்தம் செய்துகொண்டிருக்கிறது. எனவே வெர்சயில்ஸ் ஒப்பந்தப்படி நிராயுதபாணியாகச் செய்யப்பட்டிருந்த ரைன்லந்தை ஜெர்மன் துருப்புகள் 8-3-1936-ல் ஆக்கிரமித்துக் கொண்டன. ஜெர்மனி வெர்சயில்ஸ் ஒப்பந்தத்தை இதனால் மீறி விட்டதென்ற சம்பிரதாயப்படி சர்வதேச சங்கம் 19-3-1936-ல் பிரகடனப் படுத்தியதேயொழிய வேறொன்றும் செய்யவில்லை.

இத்தாலிக்கும், ஜெர்மனிக்குமிடையில் அந்தரங்க ஒற்றுமையுண்டென்பதை மேற்கண்ட சம்பவங்களிலிருந்து வாசகர்கள் ஊகித்துக் கொண்டிருக்கலாம். ஹிட்லரும், முஸோலினியும் சமதர்மக் கொள்கையையும், பொதுவுடமைக் கொள்கையையும்

ஆதரித்துத்தான் பெரிய மனிதர்கள் ஆயினர். எனினும் அவர்கள் ரஷியாவை வெறுத்தனர். ரஷியாவுக்கு ஐரோப்பாவில் செல்வாக்கேற்படுவதை அவர்களால் சகித்துக்கொள்ள முடியவில்லை. எரிகிற நெருப்பில் எண்ணெயை வார்த்தாற்போல் ரஷியா சர்வதேச சங்கத்திலும் சேர்க்கப்பட்டு விட்டது. போதாக்குறைக்கு ஸ்பெயினிலும் ரஷிய செல்வாக்குடன் குடியரசேற்பட்டுவிட்டது. ஹிட்லரும், முஸோலினியும் இதை இனியும் எப்படி சகித்துக்கொண்டிருக்கமுடியும்?

எனவே 18-7-36-ல் ஸ்பெயினில் சமதர்ம சர்க்காருக்கு விரோதமாக ஜெனரல் பிராங்கோவின் தலைமையில் உள் நாட்டுக் கலகம் மூண்டது. ரஷியா கஜகர்ணம் போட்டுப்பார்த்தது. பிரிட்டனும், பிரான்ஸும் மசியவில்லை. நடுநிலைமைக் கொள்கையை அனுஷ்டிக்கவேண்டுமென சர்வதேச சங்கம் தீர்மானித்து விட்டது. ஜெர்மனியும், இத்தாலியும் ஜெனரல் பிராங்கோவிற்கு மறைமுகமாக ஏராள ஆள், பொருள் உதவிகளைச் செய்து வந்தன. ஸ்பேனிய சமதர்ம சர்க்கார் தோல்வியுற்றது. ஸ்பெயினில் நிறுவப்பட்ட ஜெனரல் பிராங்கோ சர்க்காரை ஹிட்லரும், முஸோலினியும் 18-11-36-ல் அங்கீகரித்தனர். இவ்விதமாக சர்வதேச சங்கமும் தூங்கிக்கொண்டிருந்தது. பாரபட்ச வெர்சயில்ஸ் ஒப்பந்தமும் அலட்சியம் செய்யப்பட்டு வந்தது. பிரிட்டனும், பிரான்ஸும் வஞ்சகமாகப் பகட்டிக்கொண்டிருந்தன.

---

## அத்தியாயம்—2

---

### புதிய ரஷியா

[இதில் ஆசியாவின் கோயாளியாயிருந்த ரஷியா எவ்விதம் புத்துயிர் பெற்றெழுந்து உலக மக்களை விழிப்படையச் செய்திருக்கிறது—பொதுவுடமைத் திட்டந்தான் உலகில் யுத்தங்களைப்போக்கி, உலக நாடுகளனைத்திற்கும் நிரந்தர சமாதானத்தையும், சுதந்திரத்தையும் ஸ்தாபிக்கவல்லது—தனிவுடமை எனும் ஏகாதிபத்திய அதிகார வர்க்கங்கள் உலக மக்களைக் கொல்லச்செய்யும் சூழ்ச்சிகள்—போன்ற விவரங்கள் கூறப்பட்டுள்ளன.]

உலகிலேயே மிகப் பெரிய நாடு ரஷியாதான். அதை ஆண்ட மன்னர்கள் பெயரின் ஈற்றில் "ஜார்" என்ற வார்த்தை சேர்க்கப்பட்டிருக்கும். "ஜார்" என்றாலும், "கெய்ஸர்" என்றாலும், "எம்பரர்" என்றாலும் "சக்கரவர்த்தி" என்றுதான் அர்த்தம். உதியன் பெருத்தாலும் உத்தரத்திற்குதவாது என்றோர் பழமொழியுண்டு. அதுபோல் ரஷியா இருந்து வந்தது. துருக்கி "ஐரோப்பாவின் நோயாளி" எனக்கருதப்பட்டு வந்தது போல், ரஷியா "ஆசியாவின் நோயாளி" எனக் கருதப்பட்டு வந்தது. ஜார்களும் நம் இந்தியநாட்டு சமஸ்தானாதிபதிகளும் குணாதிசயங்களில் ஒன்றுபோன்றவர். நாட்டின் க்ஷேமாபிவிருத்தியிலோ, பிரஜைகளின் கஷ்டநஷ்டங்களிலோ அவர்கள் சிரத்தை கொள்வதில்லை. அதனாற்றான் உலகிலேயே மிகப்பெரிய நாடாகிய ரஷியாவை அன்று உலகிலேயே மிகச் சிறிய நாடாகவிருந்த ஜப்பான் 1905-ம் வருடத்தில் ஓடஓட உதைத்துத் தோற்கடித்தது. ரஷியத் தொழிலாளர்கள் நம் நாட்டுச் சமஸ்தானப் பிரஜைகளைவிட மிகக் கேவலமாகச் சுரண்டப்பட்டு வந்தனர். ஒரு சில பிரபுக்கள் குபேரர்களாய் வாழ்ந்தனர். மதச்சண்டை, ஜாதிச்சண்டை, ஏழை பணக்காரன் சண்டை, எஜமான் தோட்டிச் சண்டை, உயர்வு தாழ்வு சண்டை, ஆண் பெண் சண்டை ஆகிய அனந்தங்கோடி சண்டைகளுக்கும் தாயகமாக விளங்கியது அன்று ரஷியா.

சிப்பியில் முத்து உற்பத்தியாவதைப்போல் அந்த நிலை கெட்ட ரஷியாவில் ஓர் மேதாவியும் தோன்றினர். அவர் ஓர் குபேரர்தான். என்றாலும் அல்லலுறும் ஏழைகளின் நலனைக் கருதி தனது சொந்த சுகபோகங்களையும், சொத்து சுதந்திரங்களையும் துறந்து ஆசிரியத் தொழிலில் அமர்ந்தார். அவர்தான் இன்று உலகம் போற்றும் நம் உத்தமத் தலைவர் மகாத்மா காந்தியின் பிரதமக்குரு டால்ஸ்டாய். டால்ஸ்டாயின் அனுபவக் கதைகள் கல் நெஞ்சத்தையும் கரைத்து விடும்.

டால்ஸ்டாய் குபேரர் என்றால் சாதாரணக் குபேரரல்ல. அன்றைய உலகில் பெரிய தனவந்தராய் இருந்தவர். அன்று ரஷியா அநேக பிரபுக்களின் சொந்த சொத்தாக இருந்தது. நம் நாட்டில் ஜமீன்தார்களும், சுதேச சமஸ்தானங்களும் இருப்பதுபோல. அந்தந்த சமஸ்தான பிரபுக்கள் தத்தம் பிரஜைகளை சிறிதும் லக்ஷியம் செய்வதில்லை. அவர்களைச் சுரண்டி தாம் சுகிப்

பதிலேயே காலந்தள்ளி வந்தனர். ஆனால் டால்ஸ்டாய்க்கு இதைச் சகித்துக் கொண்டிருக்க முடியவில்லை. எனவே அவர் தமது பிரஜைகளிடம் கருணை காட்டலானார். அவர்களுக்குத் தனித்தனியாக நிலத்தைப் பிரித்துக்கொடுத்தார். விவசாயத்திற்கு வேண்டிய பொருளுதவியும் செய்து கொடுத்தார். ஒவ்வொருவரும் பாடுபட்டு வருடத்திற்குக் கொஞ்சமாகத் தன் கடனைத் திருப்பிக்கொடுக்கவேண்டுமென்பதோடு பலனிலும் ஆறில் ஒரு பாகத்தைத் தனக்குக் கொடுத்துவிட்டு மீந்ததை பிரஜைகளே உபயோகித்துக் கொள்ளலாமென்றார். ஆனால் இத்திட்டம் வெற்றியாக வரவில்லையென்பதை உணர்ந்து வேறோர் திட்டத்தைக் கொண்டுவந்தார். இதன்படி ஒவ்வொருவருக்கும் குடும்ப தாராதரத்திற்குத் தக்கவாறு நிலங்களைப் பங்கிட்டுக் கொடுத்தார். அவர்கள் மேலே கண்டவாறு 5 வருடங்களுக்கு மட்டிலும் தனக்குப் பலனில் பங்கு தரவேண்டுமென்றும், பிறகு அந்தந்த நிலங்கள் அவரவர்களுக்கே சொந்தமென்றும் கூறிச் செய்கையில் காட்டினார். பிரஜைகள் இதில் நல்ல ஆர்வம்கொண்டனரெனினும் இதிலும் டால்ஸ்டாய் திருப்தியுறவில்லை. ஏனெனில் பிரஜைகளில் பலரும் மேல் கண்ட விதமாய்த் தமக்குச் சொந்தமாக்கப்பட்ட நிலங்களை விற்றுவிட்டு "பழைய குருடி கதவைத்திறடி" என்று வறுமையில் தவிக்கலாயினர். எனவே டால்ஸ்டாய் மூன்றாந் தடவையாக வேறோர் திட்டத்தைக் கொண்டுவந்தார்.

இதுதான் கூட்டுறவு முறை. இதன் படி ஓர் கிராமம் அக்கிராமவாசிகளுக்குச் சொந்தம். யாரும் யாருக்கும் நிலத்தை விற்க அதிகாரமில்லை. எல்லோரும் கூட்டுறவாகச் சமமாகப் பாடுபட வேண்டும். அதனால் கிடைத்த பலனையும் சகலரும் சமமாகப் பங்கிட்டுக் கொள்ளவேண்டும். இதனால் பாடுபட்டவருக்குப் பலனில்லாமற்போகவோ அல்லது பாடுபடாதவருக்குப் பலன் கிட்டவோ முடியாமற் போயிற்று. இத்திட்டம் மிகவும் திருப்திகரமாக வந்ததைக் கண்டு டால்ஸ்டாய் கொண்ட ஆனந்தத்திற்கு அளவில்லை. ஆனால் தன்னுடையதைப்போல் இனியும் எத்தனையோ சமஸ்தானங்களைக்கொண்ட ரஷியாவில் தான் ஒருவர் மட்டிலும் அவ்விதச் சீர்திருத்தத்தைச் செய்துவிட்டதால் ரஷியா முழுவதிலுமுள்ள பிரஜைகளின் கஷ்டநஷ்டங்கள் நிவர்த்திக்கப்பட்டுவிடுமா? இல்லை. எனவே சகல ரஷிய சமஸ்தானாதிபதி

களுக்கும், ஜாருக்கும், சர்வதேசத்திற்கும் க்ஷேமமுண்டாக வேண்டி தனது அனுபவ சித்தாந்தத்தைப் போதிக்கும் பொருட்டு அவர் ஆசிரியத் தொழிலில் ஈடுபடலானார். சுயநலமி கள் நிர்ப்பந்தப் படுத்தப் பட்டாலன்றி அவர்கள் தம் சுயநலக் கோட்பாடுகளைக் கைவிடச் சம்மதியார். ஆனால் டால்ஸ்டாய் இடம் இராணுவபலமில்லையென்பதோடு அவர் அன்பினாலேயே சகலத்தையும் திருத்த முற்பட்டார். எனவே அவர் தனது ஜீவிய காலத்தில் தனது திட்டம் ரஷியாவெங்கும் பரவாமலிருக்கக் கண்டு மனம் வெம்பி மாண்டார்.

இது நிற்க ஜெர்மன் யூதரான காரல் மார்க்ஸ் என்பவர் தான் பொதுவுடமைத் தத்துவத்தினது சிருஷ்டிக் கர்த்தா. டால்ஸ்டாயின் கருத்துக்களும், காரல் மார்க்ஸின் பொதுவுடமையும் சதா சுரண்டப்பட்டு வந்த ரஷியர்களுக்கிடையில் காட்டுத் தீபோல் பரவின.

ரஷியாவின் கடைசி ஜாருக்கு நிக்கலஸ் என்று பெயர். இவனுக்கு ஒரேயொரு மகன்தான். அவனுக்கும் வாதரோய். கிடந்தது கிடந்தாற்போல் கிடப்பான். எவ்வளவோ சிறந்த டாக்டர்களாலும் இவ்வியாதியைச் சொஸ்தப் படுத்த முடியாமல் போய் விட்டது. இறுதியாக ரஷ்புட்டின் என்ற பெயருடன் ஓர் மனோவஸிய வாதி வந்து சேர்ந்தான். தான் சுகப்படுத்தாவிடில் தன் தலையை வெட்டி விடலாம் என்று ஜாரிடம் கூறினான். தன் மகனுக்கு சிகிச்சை செய்யும்படி ஜார் ரஷ்புட்டினுக்கு அனுமதியளித்தான். மகனும் சுகமடைந்தான்; மன்னன் "நீவிர் யார்?" எனக் கேட்ட கேள்விக்கு, "யான் கடவுளால் அனுப்பப்பட்ட தூதன். எனக்கு இந் நாட்டில் மதப் பிரசாரம் செய்ய அனுமதி கொடுப்பாயாக!" வென்று ரஷ்புட்டின் உத்தர மளித்தான். ரஷியாவில் ரஷ்புட்டின் செய்த அக்கிரமங்களுக்கு அளவு கிடையாது. கடவுளின் பெயராலும், மதத்தின் பெயராலும் அந்தப் பாதிரி ரஷியாவில் கற்பழித்த கன்னிப் பெண்களின் தொகை கணக்கிலடங்காது.

ரஷியாவில் ஜாரின் ஆட்சியை வெறுத்து ஏற்கனவே சூறுவளியைப் போல் பொது ஜனங்களுக்கிடையில் பரவி வந்த டால்ஸ்டாய் கருத்துகளும், காரல் மார்க்ஸ் பொதுவுடமையும் ரஷ்புட்டினின் அடங்காப் பிடாரித் தனத்தால் சண்ட மாருதம்போல்

முழங்கலாயின. எனினும் நிக்கலஸ் ரஷ்புட்டினை நாட்டை விட்டு விலக்க மறுத்து விட்டான். அதற்குப் பதிலாக கிளர்ச்சி செய்தவர்களைச் சிறையிலிடுவதையும், சிரச்சேதம் செய்வதையுமே புனிதச் செய்கையாகப் போற்றி வந்தான்.

முதலாவது உலக மகாயுத்தம் ஆரம்பித்தது. நிக்கலஸ் ஜார் ஜெர்மனிக்கு எதிராக பிரிட்டிஷ் நேசதேசத்தினர் சார்பாக யுத்தத்தில் கலந்து கொண்டான். "நோயாளி" ரஷியா ஜெர்மனியால் நையப் புடைக்கப்பட்டது. உள் நாட்டில் புரட்சி செய்து முடியரசைக் கவிழ்த்து, குடியரசை ஸ்தாபிக்க தக்க சமயத்திற்காக எதிர்பார்த்துக் கொண்டிருந்த ரஷ்யப் பொதுவுடமைக் காரர்கள் ஒன்று கூடினர். நாடு கடாத்தப் பட்டிருந்த ட்ராட்ஸ்கி அமெரிக்காவிலிருந்து ரஷியா வந்து சேர்ந்து, லெனினுடனும், ஸ்டாலினுடனும் ஆலோசித்தார். 12-3-1917-ல் ஜார் துருப்புகளுக்கும் பொதுவுடமைத் துருப்புகளுக்கு மிடையில் கோரப்போர் மூண்டது. ஜெர்மானியர் வேறு ஜார் துருப்புகளை விரட்டி விரட்டியடிக்கத் தொடங்கினர். ஜாருக்கு சரணைவர ஆரம்பித்தது. எனினும் மிகவும் தாமதித்துப் போன விஷயம் 15-9-1917-ம் தேதி ரஷியா ஓர் குடியரசு நாடெனப் பிரகடனப் படுத்தப் பட்டது.

நிக்கலஸ் ஜாரும், அவனது குடும்பத்தினரும், தாயாதிகளும், ரஷ்புட்டினும் சிறையிலிடப்பட்டனர். லெனின் 15-12-1917-ல் ஜெர்மனியுடன் யுத்த நிறுத்த ஒப்பந்தம் செய்து கொண்டார். நிக்கலஸ் 16-7-1918-ல் சுட்டுக் கொல்லப்பட்டான். சிறையிலிடப் பட்டிருந்த மற்றவர்களின் கதியும் இதுதான்.

லெனின் தலைமையில் ரஷியாவின் அரசியல் திருத்தியமைக்கப்பட்டது. இந்தியாவில் சென்னை, வங்காளம், பம்பாய் போன்ற 11 மாகாணங்க ளிருக்கின்றன. ரஷியாவில் இவைகளைவிட மிகப் பெரிய இனியும் எத்தனையோ பல மாகாணங்களிருக்கின்றன. அவையனைத்தையும் கொண்ட 6 சமஸ்தானங்களிலும் குடியரசு ஏற்படுத்தப் பட்டது. அதன்படி சிறு கிராமம் முதல் பெரும் பட்டணம் வரையுள்ள ஒவ்வொரு இடத்திலும் ஓர் சங்கம் திறவப்பட்டது. இச் சங்கத்தில் அங்குள்ள ஆண், பெண் சகலரும் அங்கத்தினராகவேண்டும். தொழிலாளர்களும், போர் வீரர்களும் தான் இச் சங்கத்தில் சேரலாம். இதன் மூலம் ரஷியாவில் முதலாளித்துவத் திற்கு உலைவைக்கப்பட்டது. இச் சங்க அங்கத்

தினர்கள் தம் கிராம நிர்வாகிகளைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளலாம். இவ்விதப் பல கிராம சங்கப் பிரதி நிதிகள் தத்தம் ஜில்லா நிர்வாகிகளையும், பற்பல ஜில்லா பிரதிநிதிகள் தத்தம் மாகாண, சமஸ்தான நிர்வாகிகளையும், ரஷியாவிலுள்ள சகல சமஸ்தானப் பிரதிநிதிகளும் அகில ரஷிய நிர்வாகிகளையும் தேர்ந்தெடுத்துக் கொள்ளலாம். அகில ரஷிய நிர்வாக சபையின் முதலாவது தலைவர் லெனின் என்பது சொல்லாமலே விளங்கும். இதினின்று இன்றைய ரஷியர்கள் தொழிலாளர்களாகவும், போர்வீரர்களாகவுமே இருக்கின்றனரே யன்றி, முதலாளி—தொழிலாளி, ஏழை-பணக்காரன், ஆண்—பெண் என்ற பாகுபாடுகளுக்கோ, அல்லது ஜாதி சமய பூசல் களுக்கோ அங்கு இடமில்லை என்பது புலனாகும். ரஷியாவில் 1917-ம் வருடத்திலிருந்து தொழிலாளர்களதும், போர் வீரர்களதும் பிரதி நிதிகள்தான் ஆக்ஷிபுரிந்து வருகின்றனர். எனவே புத்துயிர் பெற்ற அந் நாட்டிற்கு "சமதர்ம தொழிலாளர்—போர் வீரர் ஆக்ஷிபுரியும் ஐக்கியக் குடியரசு (Union of Socialist Soviet Republics) எனப் பெயர் வந்தது. லெனினது தலைமையில் பொதுவுடமை ரஷியா தீவிர மாறுதலடைந்தது.

உலகில் முதன் முதலாகப் பொதுவுடமை சர்க்கார் ஸ்தாபிக்கப்பட்ட நாடு ரஷியாதான். எனவே அதைக்கண்டு அகில உலகும் நடுங்கிற்று. அதை முளையிலேயே நசுக்கிவிட பிரிட்டன் எவ்வளவோ முயற்சித்தது. சர்வதேச சங்கத்தில் சேர்த்துக் கொள்ள மறுத்தது. போலந்தைத் தூண்டிவிட்டு ரஷியா மீது போர்தொடுக்கச் செய்தது. ருமேனியாவைத் தூண்டி விட்டு சண்டைபோடச் செய்தது. பின்லந்தைத் தூண்டிவிட்டு சமர் புரியச் செய்தது. என்றாலும் லெனின் இவையனைத்தையும் மிகச் சாமர்த்தியமாக சமாளித்து விட்டார். ஆனால் துரதிர்ஷ்டவசமாக அவர் 22-1-1924-ல் உயிர் நீத்து விட்டார்.

அதன் பிறகு ஸ்டாலின் ரஷியாவின் சர்வாதிகாரியானார். அவர்தான் ரஷியாவை இன்று இவ்வளவு உயர் நிலைக்குக் கொண்டுவந்தவர். ஆனால் ரஷியா இவ்வளவு பலம்பொருந்திய நாடாயிருக்குமென் இதற்கு முன்பு ஹிட்லர் கூட எதிர்பார்த்திருந்திருக்க மாட்டார். "ஆசியாவின் நோயாளி" எனக் கருதப்பட்டு வந்த ரஷியா அகில உலகின் தூண்டுகோல் சிகரமாக ஆயிற்று. எங்கெங்கு ஏழைகள் சரண்டப்பட்டு வந்தனரோ அங்

கெல்லாம் பொதுவுடைமை இயக்கம் தாண்டவமாடியது. ரஷிய ஜார்கள் ஆசியாவிலும், ஐரோப்பாவிலும் மண்ணாசை கொண்டிருந்ததால் ஜப்பானும், ஜெர்மனியும் ரஷியாவை எதிர்த்து வந்தது சகஜம். ஆனால் பிரிட்டன் போன்ற இதர நாடுகள் ரஷியா மீது சிற்ற முற்றதற்குத் தத்தம் சுயநலமும், கர்வமும்தான் காரணம். எனினும் அதை இனி உறவாடித்தான்-கெடுக்க முடியுமென்றுணர்ந்த பிரிட்டன் 18-9-1934-ல் ரஷியாவைச் சர்வதேச சங்கத்தில் சேர்த்துக்கொண்டது. ரஷியா பெரிய நாடாயினும் அதன் ஜனத்தொகை இந்தியர் தொகையில் பாதிக்கும் குறைவுதான். அதாவது சுமார் 18 கோடி. ஆனால் அங்குள்ள ஆணும் பெண்ணும் ஏகோபித்து எதிரிகளுடன் சமர் செய்வர். இதுதான் புதிய ரஷ்யா.

## புரட்சியின் பலாபலன்

உலக மக்கள் நாளுக்குநாள் அதிக விழிப்படைந்து வருகின்றனர். இரண்டாவது உலக மகாயுத்தத்தின் விபரீத விளைவால் இதுவரை ஏமாற்றப்பட்டுவந்த மக்கள் வீறிட்டெழுந்திருக்கின்றனர். அவர்கள் எங்களுக்கும் சுதந்திரம்—ஜனநாயகம்—சமத்துவம் எல்லாம் வேண்டுமென்கின்றனர். இவ்விதம் உணர்ச்சி பெற்ற மக்களை ஏகாதிபத்தியம் இனியும் அடக்கி ஒடுக்கி வைக்கப் பகீரதப் பிரயத்னம் செய்து கொண்டிருக்கிறது. ஏகாதிபத்தியத்தின் இந்த அடக்குமுறையை எதிர்த்துப் பேசுபவர்களையும், போராடுபவர்களையும் கிளர்ச்சிக்காரர்கள்—புரட்சிக்காரர்கள்—பொதுவுடைமைக்காரர்கள் என்று ஏகாதிபத்தியவாதிகள் பூச்சாண்டி காட்டுகின்றனர். பொது ஜனங்களை இந்த ஏகாதிபத்தியக் காரர்கள் ஆட்டுமந்தையெனக் கருதுகின்றனர்போலும். அவர்கள் பகுத்தறிவற்றவர்களென ஏகாதிபத்தியம் கருதுமாயின் அது தனக்குத்தான் குழி தோண்டிக்கொள்கிறது.

விழிப்புற்ற மக்களில் பலரை ஏகாதிபத்தியம் சிறையிடலாம்; கணக்கற்றவர்களைக் கொன்று குவிக்கலாம்—ஆனால் அவர்களின் மனோவெழுச்சியை அழிக்க ஏகாதிபத்தியத்தால் முடியாது. பொதுஜன வாழ்க்கை உயர்விற்குப் பத்திரிகைகளும், சஞ்சிகைகளும் மிக அவசியமானவை. அவைகளைப் புரட்சிக்காரர்களுடையது, பொதுவுடைமைக்காரர்களுடையது என்று பொதுஜனங்களுக்கிடையில் ஏகாதிபத்தியவாதிகள் பீதியைக் கிளப்பிவிடலாம். ஆனால் பகுத்தறிவுள்ள பொதுமக்கள் "ஓட்டக்கூத்தன் பாட்டுக்கு

"இரட்டைத் தாழ் போடடி" என்ற மாதிரி ஏகாதிபத்தியத்தை இனியும் அதிகமாய்த்தான் வெறுக்கலாவர்.

ஓர் நாட்டு மக்களின் நன்மையைக் கவனிக்கும் பொறுப்பு அந்த நாட்டுச் சர்க்காருடையதாகும். இன்றைய உலகில் பெரும்பாலும் ஓர் நாட்டு அதிகார வர்க்கம் பிறநாட்டு மக்களை ஆக்ஷி புரிந்து வருகிறது; அல்லது ஜனங்களின் பிரதிநிதிகளல்லாத சில சுயநலமிகளைக்கொண்ட ஓர் சுயநாட்டுச் சர்க்கார் அமுல் செலுத்துகிறது. எனவே பொதுமக்கள் துன்பமடைகின்றனர். இத்தகைய ஏகாதிபத்திய அரசாங்கங்களை எதிர்த்து ஜனங்கள் போராடுகின்றனர். அந்தந்த நாட்டுப் பொது மக்களின் நலனையே கருதும் அந்தந்த நாட்டு மக்களையே கொண்ட சர்க்காரையமைத்துக்கொள்ள ஒவ்வொரு நாட்டு மக்களும் முயற்சித்து வருகின்றனர். இதையே அட்லாண்டிக் சாஸனம் டெஹ்ரான் மகாநாடு, சான்பிரான்ஸிஸ்கோ மகாநாடு போன்றவைகள் உலகிற்குப் பிரகடனப் படுத்தியுள்ளன. எனவே ஷி லக்ஷியத்தையடைய ஜனங்கள் செய்யும் முயற்சியைப் புரட்சியென்றும், பொதுவுடமை என்றும் கூறி வீண் புரளி பேசுவது அறியாத்தன்மையாகும்.

ரஷியா உலகிலேயே மிகப் பெரிய நாடு. அங்கு ஜார் சக்கரவர்த்தியின் தனியரசு மிகவும் கோரமாய் நடந்தது. ஜனங்களின் கஷ்ட நஷ்டங்களை அவன் உணர்ந்தானில்லை. அவன் வாயினின்று வெளியான ஒவ்வொரு வாக்கும் பொது ஜனங்களையடக்கும் ஓர் பயங்கர சட்டந்தான். ஜனங்களின் நலன்களைக் கவனியாது அவன் இடும் சட்டங்களைச் சுயநலங் கருதிய அவனது ஏவலாட்களாகிய அதிகார வர்க்கத்தினர் பன்மடங்காகப்பெருக்கி ஜனங்களைக் கோரப்படுத்தி வந்தனர். முதலாளி தொழிலாளியை வதைத்தான். பணக்காரன் ஏழையைச் சுரண்டினன். ஆஸ்திகன் கடவுள் பெயரையும், மதத்தின் பெயரையும் சொல்லி பாமரனை ஏமாற்றி வாழ்ந்தான். ஏமாறுதவனை நாஸ்திகனென்றும், நரகத்திற்கனுப்புவேனென்றும் பயமுறுத்தினன். முடியாட்சியின் பலனாக மனிதன் மனிதனையே கொன்று புசித்துப் பிழைத்தான். ஜனங்களுக்கு நிர்வாகத்தில் எவ்வித செல்வாக்குமில்லை.

இந்நிலைமையில் 1914—1918-ம் வருட முதலாவது உலக மகாயுத்தம் வீராவேசத்தோடு நடக்கையில் 1917-ம் வருடம்

நவம்பர் மாதம் 17-ந்தேதி ரஷியாவில் புரட்சி சர்க்கார் லெனின், ஸ்டாலின், ட்ராட்ஸ்கி ஆகிய மூவர் தலைமையில் ஸ்தாபிக்கப்பட்டு விட்டது. ரஷியாவில் முடியரசும் தொலைந்தது. தாயற்ற சேய் போலிருந்த ரஷிய ஜனங்கள் ஆனந்தக் கண்ணீர் விட்டனர். கூலி வேலை தவிர வேறு வகையற்றிருந்த ரஷிய ஜனங்கள் விடுதலை பெற்ற வீராவேசத்தால் சுதந்திரத்துடன் சகல துறைகளிலும் உயர்வடைந்தனர். கல்வி வாசனையே இல்லாதிருந்த ரஷியாவில் இன்று எழுதப்படிக்கத் தெரியாதவரேயில்லை. ஏழைகளும், அனுதைகளும் மலிந்திருந்த ரஷியாவில் இன்று ஒரு பிச்சைக்காரனைக் காணக்கூட முடியாது. வேலையில்லாத் திண்டாட்டம் தாண்டவமாடிய ரஷியாவில் இன்று மருந்துக்குக்கூட ஓர் காலியாளில்லை. பட்டம் வானில் பறந்ததைக் கண்டு அதிசயப்பட்ட ரஷியாவில் இன்று விஞ்ஞானம் வேண்டுமென்றவிடத்தில் விரும்பியபோது மழைபொழியச் செய்கிறது. காடுகளும், வனாந்தரங்களும் நிறைந்திருந்த ரஷியாவில் இன்று விவசாயப் பொருட்களும், உலோக சத்துகளும், கைத்தொழில் சாமான்களும் சர்வலோகத்திற்கும் போதிய அளவு உண்டாக்கப்படுகின்றன. ஜாதி—மதம், உயர்ந்தவன்—தாழ்ந்தவன், ஏழை—பணக்காரன், முதலாளி—தொழிலாளி, படித்தவன்—பாமரன், ஆஸ்திகன்—நாஸ்திகன், ஆண்—பெண் போன்ற வித்தியாசங்கள் தலைவிரித்தாடிய ரஷியாவில் இன்று "எல்லோரும் ஓர் குலம், எல்லோரும் மானிடர், எல்லோரும் இந்நாட்டு மன்னர், தனியொருவனுக் குணவில்லையெனில் இந்த ஜகத்தினையழித்திடுவோம்" என்று கிளம்பும் ஆனந்தத் தாண்டவ ஒலி சப்த லோகங்களையும் கிடுகலக்குகிறது. "அட சிவமே! இன்றைப் பொழுதைக் கழிப்பதெப்படி? பிள்ளையைப் படிக்கவைக்க வகையில்லை. தரித்திரம்—பிச்சைக்காரக் கோலமே என் வாழ்க்கை. அந்தக் கடன்காரனுக்கு என்ன பதில் சொல்வேன்? ஆசல் (கிஸ்தி) கட்டாததால் நிலத்தை சர்க்கார் எடுத்துக்கொண்டதே! குத்தகை நில விவசாயம் முழுவதையும் நிலக்காரன் தன் பங்கிற்கே போதாதென எடுத்துச் சென்று விட்டானே! வேலைக்குப்போன மகனுக்கும் கூலி இல்லையென முதலாளி கூறிவிட்டானே! நோய்வாய்ப்பட்ட மனைவிக்கும், பாலுக்கழும் குழந்தைக்கும் விமோசனமில்லையே! வாடகைக் கொடாததால் வீட்டுக்காரன் வெளியேறச் சொல்லி விட்டானே! குளிரின் கொடுமையை நினைக்கின் கட்டத் துணியில்லா நாங்கள் வானத்தின் கீழ் பரந்த வெளியிலும் வாழ முடி

யாதே! பாடுபடுபவன் ஒருவன் பலனனுபவிப்பவன் பிறன். எங்கு பார்த்தாலும் என் போன்றவர்கள்தானே காணப்படுகின்றனர்! என்ன அநீதம்! கேட்கநாதியில்லையா? தலை விதியாம் திருட்டுத்தனம்!'' என்ற தீனக்குரல் மலிந்து கிடந்த ரஷியாவில் இன்று ஒவ்வொருவரும் ஓர் கலைஞன், ஓர் விஞ்ஞானி, ஓர் நிபுணனாக விளங்குகின்றனர். ஒருமுறைகூட ஜெயிக்கமாட்டாது சதா ஜெர்மனியாலும், ஜப்பானாலும் நையப் புடைக்கப்பட்டு, சர்வதேச நோயாளியாகக் கிடந்த முடியரசு ரஷியா இன்று அவ்விரு நாடுகளையும் சர்வ பங்கம் செய்ததற்கு ரஷியப் புரட்சியல்லவா காரணம்? அப்புரட்சியாலடைந்த குடியரசை எப்படியும் தமக்கு சாஸ்வதமாக்கிக் கொள்ளவெண்டுமென்ற ரஷிய ஜனங்களின் திடசங்கற்பமல்லவோ, ஹிட்லர் சர்வாதிகார நாஸிஸத்தை அழித்ததன் மூலம் பிரிட்டிஷ்—அமெரிக்க அதிகார வர்க்கங்களுக்கு வெற்றியை ஏற்படுத்தியது? அங்ஙனமாயின் ரஷியக் குடியரசின் அரசியல் எத்தகையது, சர்வ தேசங்களும் அவ்வித அரசியல் திட்டத்தைக் கையாண்டால் உலக ஜனங்கள் சகல துறைகளிலும் உச்சநிலையடைந்து, யுத்தமின்றி, சமத்துவ சுதந்திரர்களாய் வாழலாமே, அதன் விவரமென்னவோ? என்று அறிய வாசகர்கள் விரும்புவது சகஜம். ஆனால் முதலில் ஏகாதிபத்தியம் இன்னதெனத் தெரிய வேண்டும்.

## ஏகாதிபத்தியம்

ரஷியா ஒன்றைத் தவிர இன்று உலகில் மற்ற வல்லரசுகளனைத்தும் ஏகாதிபத்தியத்தால் நாசமாகி வருகின்றன. ஏகாதிபத்தியம் என்றால் உலகனைத்தையும் தனக்கே ஏகபோகபாத்தியமாகச் செய்துகொள்ள வேண்டுமென்ற பேராசை என்றர்த்தம். இதற்குக் காரணகர்த்தாக்கள் அந்தந்த நாட்டு அதிகாரவர்க்கத்தினர்தான். முடியரசு நடந்த காலத்தில்தான் ஏகாதிபத்தியப் பேய்த் தாண்டவமாடியதென்றால், ஜனநாயக சகாப்தத்திலும் அப்படியேதானிருக்கிறது. ஜனநாயகமென்றால் ஜனங்களின் விருப்பப்படி ஆக்ஷி செய்வதென்று அர்த்தம். பிரிட்டனில் ஜனநாயக அரசியல்தான் அமுலில் இருக்கிறது. ஆனால் இந்தியாவையோ அல்லது இதர நாடுகளையோ அடிமையாக வைத்திருக்க வேண்டுமென பிரிட்டிஷ் ஜனங்கள் விரும்பவில்லை யென்பது உண்மை. ஆனால் அந்த ஜனங்களின் ஓட்டுகளைப் பெற்று

பதவிக்கு வந்திருக்கும் பணக்கார பிரிட்டிஷ் அதிகாரவர்க்கத்தினர்தான் ஏகாதிபத்திய ஆசையால் உலகில் பெரும் பாகத்தை அடிமைப்படுத்தி வைத்திருக்கின்றனர். ஜனநாயகத் தோலைப் போர்த்திக்கொண்டு வேஷமும் போடுகின்றனர். இந்த வீடு யாருடையது? இந்த ஊர் யாருடையது? இந்த நாடு யாருடையது? இந்த உலகம் யாருடையது என்பன போன்ற கேள்விகளுக்குப் பதில் சுலபமாகத் தோன்றினும் உண்மை வேறுதான். எங்களுடைய வீடும், உயிருங்கூட ஐரோப்பிய ஏகாதிபத்திய அதிகார வர்க்கத்தினரின் கையில் சிக்குண்டிருக்கையில், நாடும் உலகமும் யாருடையதாயிருக்கும்? ஜனநாயக அரசியலை அனுஷ்டிப்பதாகக் கூறிக்கொள்ளும் நாடுகளிலேயே அதிகார வர்க்கத்தினர் சர்வாதிகாரம் செய்கின்றனர். அவர்கள் இவ்வுலக நாடுகளும், ஜனங்களும், அவர்களின் சகல, சொத்து சுகங்களும் தமக்கே ஏகபோக பாத்தியதையாக இருக்கவேண்டுமெனும் துராசையால் பொதுஜன நலன்களை மறந்துவிட்டனர். பட்டம், பதவி, பொன், மண் எல்லாம் தமக்கு மட்டிலுந்தான் இருக்க வேண்டும் என்பதுதான் அவர்களின் வாழ்க்கை லக்ஷியம். அமெரிக்கப் பணக்காராதிக்கம், பிரிட்டிஷ் முதலாளித்துவம், பிரஞ்சு ஏகாதிபத்தியம், ஜப்பானிய ராணுவாதிக்கம், இத்தாலிய பாஸிஸம், ஜெர்மன் நாஸிஸம் ஆகியவனைத்தும் வடிகட்டிய ஏகாதிபத்தியந்தான். இவ்வேகாதிபத்தியங்கள் பேராசையால் பிற நாடுகளை அடிமையாக்கிச் சுரண்டுவதில் ஒன்றுக்கொன்று போட்டாபோட்டியிட்டு உலக யுத்தங்களை மூட்டி விடுகின்றன. ஜனநாயகம் எனும் தோலைப் போர்த்திக்கொண்டு இந்தப் புலிகள் கடவுள், மதம், உயர்வு, தாழ்வு, ஏழை, பணக்காரன், விதி, சுயமுயற்சி, நிறம், ஜாதி, பெரும்பான்மை, சிறுபான்மை எனும் பலவித வித்தியாசங்களை ஜனங்களுக்கிடையில் கிளப்பிவிட்டு தம் நிலைமையைப் பலப்படுத்திக் கொண்டுள. ஜனங்கள் சுரண்டப்படுகின்றனர். மேல் கூறியவை பொய்யாயின் இன்று ஆசிய, ஆப்பிரிக்க நாடுகள் அந்தந்த நாட்டு ஜனங்களின் நிர்வாகத்தில் அல்லவா இருக்கவேண்டும்? இந்நிலைமையில் தொழிலாளர் ரஷியக் குடியரசு ஒன்று மட்டிலும் உலக ஜனங்களின் நலனைக்கருதி பொதுவுடமைத் திட்டத்தைப் பரப்புவதில் கண்ணும் கருத்துமாயிருந்து வருகிறது.

## பொதுவுடமை.

"பொதுவுடமை" அரசியல் திட்டம் சட்டசம்மதமானது; சர்வதேச அங்கீகாரம் பெற்றது. இன்றேல் பிரிட்டன், அமெரிக்கா, பிரான்ஸ், சீனு, இந்தியா போன்ற நாடுகளில் பொதுவுடமைக் கக்ஷி என்ற ஓர் அரசியல் ஸ்தாபனமோ அல்லது அக் கக்ஷிப் பிரதிநிதிகளைக் கொண்ட சர்க்காரோ இருக்க முடியாது. புரட்சி என்று சொல்லி வாசகர்களுக்குப் பூச்சாண்டி காட்டும் ஏகாதிபத்திய அதிகாரவர்க்கத்தின் சந்ததியார்கள் "பொதுவுடமை" என்று சொல்லியும் பூச்சாண்டி காட்டுவர். ஆனல் வாசக நேயர்களிடம் இனிமேல் இந்த பாச்சா பலிக்காது. சர்வதேசப்புகழ்வாய்ந்த ஹெச். ஜீ. வெல்ஸ், ஜார்ஜ் பெர்னர்ட்ஷா, புரபஸர் லஸ்கி போன்ற இங்கிலீஷ் இலக்கியாசிரியர்களே "ரஷியக் குடியரசின் அரசியலமைப்பாகிய பொதுவுடமையைச் சர்வதேசங்களும் பூரணமாக அனுஷ்டித்தால்தான் உலகின் ஜனங்களனைவரும் உண்மையில் உச்சநிலையடைந்தும், யுத்த பயமின்றியும், சுதந்திரமாயும் வாழுவர். அன்றே இவ்வுலகம் அதன் ஜனங்களுக்குச் சொந்தமாகும். அன்றுதான் மனிதவாழ்க்கையில் சாந்தியும், திருப்தியும் பிரகாசிக்கும்." என்று கூறி பொதுவுடமைத் திட்டத்தைப் பரப்புவதற்காகப் பெரும்பாடு பட்டு வருகின்றனர். எனவே புரட்சி என்றும், பொதுவுடமை என்றும் அதை இன்னதென அறியாமல் பூச்சாண்டி காட்டும் சுய நலமிகளின் அறிவின்மைக்காக வருந்துகிறோம்.

மனிதவர்க்கம் தோன்றிய நாள்தொட்டு ஒவ்வொரு குடும்பத்திலும் பொதுவுடமைத் திட்டம் இன்றுவரை அனுஷ்டிக்கப் பட்டே வருகிறது. குடும்ப நிர்வாகம் என்ற நியதி இன்றேல் மனிதவாழ்க்கையின் கதி அதோகதிதான். இந்த குடும்ப நிர்வாக முறையே பொதுவுடமைத் திட்டத்திற்கு அஸ்திவாரமாகும். உதாரணமாக வயோதிகத் தாய், தந்தை, ஐந்து குமாரர்கள், இவர்களின் ஐந்து மனைவியர், இவர்களின் பத்து குழந்தைகள் ஆக 22 பேர்களைக் கொண்ட ஓர் குடும்பம் ஏகோபித்து வாழ்கிறதென்று வைத்துப் பேசுவோம். வயோதிகத் தந்தையும், தாயுந்தான் குடும்ப நிர்வாகஸ்தர். ஐந்து குமாரர்களும் அவரவர் சக்திக்கியன்றளவு சம்பாதித்தனர். இடைக்காலத்தில் ஒரு மகன் குருடனுய் விட்டான். ஐந்து மருமகள்களும் வீட்டு வேலை. குழந்தைகளில் சில படிக்கின்றன. சில சின்னஞ்சிறிது

கள். நால்வரது சம்பாத்தியத்தைக் கொண்டே குடும்ப நிர்வாகம் நடைபெற்று வருகிறது. சம்பாதிக்க சக்தியற்றவர்களென்று வயோதிகத் தாய் தந்தை, குருட்டுச் சகோதரன், இவன் மனைவி மக்கள் முதலியவர்களை சம்பாதிக்கும் நால்வரும் கைவிட்டு விடவில்லை. ஒற்றுமையையும், பொது நன்மையையும் லக்ஷியமாகக் கொண்ட இக் குடும்பத்தில் எல்லோரும் சந்தோஷமாகக் கவலையின்றி வாழ்கின்றனர்.

ஷை உதாரணத்தைப்போல் ஒற்றுமையையும், பொது நன்மையையுமே லக்ஷியமாகக் கொண்டு ஓர் கிராமவாசிகளனைவருமே ஒரே குடும்பத்தினரெனக் கருதி வாழ்கின்றனரென்று வைத்துப் பார்ப்போம். அந்தக் கிராமத்திலுள்ள நில பலன்கள் சொத்து சுகங்கள் யாவும் அந்தக் கிராம ஜனங்களுக்குப் பொதுவாகச் சொந்தம். ஜனங்களது பாடும், பலனும், சம்பாத்தியங்களும் அவர்களுக்குப் பொதுவாகச் சொந்தமாகும். இதேபோல் அக்கிராம ஜனங்கள் அனைவரது பராமரிப்பும் அந்தப் பொதுச் சம்பாத்தியத்திலிருந்தே பொதுவாக நடத்தப்படுகிறது. இவ்வித பொது ஜன வரவு—செலவுகளையும், பொது ஜனங்களின் நலன்களையும் பொதுவாகக் கவனிப்பதற்கு அக்கிராமவாசிகளனைவரும் சேர்ந்து தங்களுக்கிடையில் யோக்கியப் பொறுப்பு வாய்ந்த சிலரைத் தர்மக்கர்த்தாக்களாகத் தேர்ந்தெடுக்கின்றனர். நிர்வாகப் பிசகு செய்யும் தர்மக்கர்த்தாவுக்கு ஜனங்கள் உடனே 'கல்தா' கொடுத்து விடுகின்றனர். இப்பிரகாரம் அக்கிராம ஜனங்களின் சொத்து, சுகம், வருமானம் சகலமும் அந்த ஜன நிர்வாக சபைக்குச் சொந்தம். அதேபோல் அந்த ஜனங்களின் ஊண், உடுப்பு, கல்வி, வைத்தியம், வயோதிகக்காலப் பராமரிப்பு, கூன் குருடு பராமரிப்பு, குழந்தைகள் பராமரிப்பு, கிராமத் தற்காப்பு போன்ற சகல விஷயங்களையும் பொதுவாக அந்த ஜனநிர்வாக சபையே கவனிக்கிறது. சக்தியற்ற வயோதிகர்களும், கூன் குருடர்களும் கௌரவமாகப் பராமரிக்கப்படுகின்றனர். குழந்தைகளனைவரும் கல்வி பயிலுகின்றனர். நிலக்கிஸ்தி கட்டவில்லையென்ற பயமோ, கடன்காரர் பயமோ, வேலையில்லையென்ற பயமோ, உணவு துணிமணிக்கென்செய்வதென்ற பயமோ யாருக்குமில்லை. ஜனங்கள் யாதொரு குறையும், கவலையுமின்றி திருப்தியோடு வாழுகின்றனர். அந்தக் கிராமத்தில் ஏழை—பணக்காரன், முதலாளி—தொழிலாளி, உயர்வு—தாழ்வு,

ஜாதி—மதம், ஆண்—பெண், முடிந்தவன்—முடியாதவன், வாலி பன்—வயோதிகன், போறாமை, பேராசை, அடிதடி, கொலை, களவு போன்ற அநீதங்களில்லை.

ஒற்றுமையையும், பொது நலனையும், கூட்டுறவையும் கொண்டு மேலே விவரிக்கப்பட்ட பிரகாரம் உலகிலுள்ள கிராமங்கள், தாலூகாக்கள், ஜில்லாக்கள், மாகாணங்கள், தேசங்கள் ஆகிய எல்லாம் பொதுவாக, அந்தந்தப் பொதுஜனங்களால், தத்தம் பொது நன்மைக்காக நிர்வகிக்கப்படவேண்டுமெனும் ஓர் அரசியல்—பொருளாதார—சமுதாய முற்போக்குத் திட்டத்திற்கு நீங்கள் என்ன பெயர் வேண்டுமானாலும் சூடுங்கள். ஆனால் அதற்கு இன்று பொதுவுடமை—சமதர்மம்—தொழிலாளத்துவம்—பொதுநலக் கூட்டுறவு—ஜனநாயகம் என்பனபோன்ற பலவிதப் பெயர்கள் வழங்கப்படுகின்றன. இத்திட்டம் இன்றைய உலகில் ரஷியாவில் மட்டுந்தான் பூரணமாக அமுலிலிருந்து வருகிறது. இதனால் ரஷிய ஜனங்கள் அடைந்துள்ள உச்சஸ்தானம் பற்றி ஏற்கெனவே கூறப்பட்டுள்ளது. ஆனால் இத்தகைய தெய்வ நீதி நிறைந்த பொதுநலத் திட்டத்தை இன்று அழிக்க விரும்பும் தனிவுடமை வாதிகளைச் சிறிது கவனிப்போம்.

## தனிவுடமையும், உலக யுத்தமும்

"தனிவுடமை" என்றால் ஜனங்கள் ஒவ்வொருவரும் தத்தம் சுயநலனில் கண்ணும் கருத்துமாயிருக்கும்படிக்கும், அத்தகைய சுயநலத்திற்கு இடையூறு செய்பவர்களைக் கொலைசெய்யும்படிக்கும் அவர்களைத் தூண்டி விடும் சக்தி பொருந்திய ஓர்வித அரசியல்—பொருளாதார—சமுதாயத் திட்டம் என்று பெயர். இத்திட்டத்தைப் பின்பற்றுபவர்களுக்கு சுயநலமிகள், ஏகாதிபத்திய அதிகாரவர்க்கத்தினர் என்று பெயர். இத்திட்டத்திற்குத் தனிவுடமை—முதலாளித்துவம்—ஏகாதிபத்தியம்—பணக்காராதிக்கம்—சுயநலம்—பாஸிஸம்—நாஸிஸம்—ராணுவாதிக்கம் என்று பற்பல பெயர்கள் வழங்குகின்றன. இத்திட்டத்தை விவரிப்பதற்கு ஷை 22 பேர்கள் கொண்ட குடும்பத்தையே ஓர் உதாரணமாக எடுத்துக்கொண்டு கவனிப்போம்.

இக்குடும்பத்தில் புருஷனும் மனைவியுமாக ஆறு தனிக்குடும்பங்களிருக்கின்றன. அந்தந்த புருஷனும் மனைவியும் தனித்தனி

குடும்பமாக வாழ்கின்றனர். வயோதிகத் தாயும், தந்தையும் சம்பாதிக்க சக்தியற்றவர். இடைக் காலத்தில் குருடனாய்விட்ட சகோதரனும், அவனது மனைவி மக்களும் அப்படித்தான். இவ்விரு தனித்தனிக் குடும்பத்தினர்களும் சம்பாத்தியமெதுவுமின்றி தத்தளிக்கின்றனர். பிச்சையெடுக்கின்றனர். பிள்ளைகள் கல்வியின்றி சோடைகளாகின்றன. சம்பாதிக்கும் மற்ற நான்கு சகோதரர்களும் அவர்களைக் கவனியாதிருக்கையில் ஊரிலுள்ள இதரர்கள் ஏன் கவனிப்பர்? இவ்விதமாக ஆறில் இரண்டு பாழாயின. மற்ற நால்வரில் ஒருவனுக்கு அளவற்ற வருமானம். மற்றவனுக்குப் போதிய வருவாய். மூன்றாமவனுக்கு அரைகுறை. நான்காமவனுக்கு குடும்பம் பெரிது. ஆனல் வேலையில்லாததால் கடன் வாங்கியும், களவாடியும், ஜனங்களை ஏமாற்றியும் காலம் கழிகிறது. இந்நால்வரும் தனித்தனி அதிகம் சம்பாதிக்க ஒருவரோடொருவர் போட்டி போடுகின்றனர். பொறாமையால் அடித்துக்கொன்டு கொலை களவு செய்கின்றனர். கோர்ட்டில் வழக்காடி எல்லோரும் போண்டியாகின்றனர். ஒற்றுமையையும், பொது நலனையும், கூட்டுறவையும் கவனியாது சுயநலத்தை யெண்ணி ஒரு குடும்பம் தனித்தனியாகப் பிரிந்ததனல் ஏற்பட்ட பலாபலனென்ன? வறுமை, வயோதிகக் கொடுமை, கவலை, கல்வியின்மை, சோடை, பிச்சையெடுத்தல், ஆதாரதையாய்ச் சாவுதல் ஆகியவை ஒரு பக்கம். மறு பக்கமோவெனில், பணத்திமிர், பொறாமை, பேராசை, போட்டா போட்டி, அடிதடி, கொலை களவு, கோர்ட்டுச் செலவு, முடிவில் எல்லோரும் போண்டி.

ஒரு பொதுக்குடும்பம் பிளவு பட்டு ஆறு தனிக்குடும்பங்களானதாலேற்பட்ட பலாபலனே இப்படியென்றால் இனி ஒரு கிராமமே இவ்விதத் தனிக் குடும்ப நியதியை அனுஷ்டித்தால் அதன் பலாபலன் எப்படியிருக்குமென்று சொல்லவும் வேண்டுமா? நிற்க உலகிலுள்ள ஒவ்வொரு தாலூகா, ஜில்லா, மாகாணம், தேசம் ஆகிய எல்லாம் இந்தத் தனிக்குடும்ப நியதியை அனுஷ்டிக்கத் தொடங்கின் பிறகு மனித நிலைமையைச் சொல்ல வேண்டியதில்லை. இன்றைய உலகில் மக்கள் மாக்களாகிவிட்டனர் என்பதற்கு இந்த தனிக்குடும்ப நியதியல்லவோ காரணம். மேலும் இன்று உலக ஜனங்களின் வாழ்க்கை எப்படி நடைபெறுகிறது? எங்கு பார்த்தாலும் கவலை, கல்வியின்மை, எளியாரை வலியார் வாட்டுவது, பஞ்சப்பிணி, வேலையில்லாத் திண்

டாட்டம், கொலைகளவு, சூதுவாது, ஏமாற்றுதல், சண்டை, சச்சரவு, போட்டாபோட்டி ஆகிய பலவித க்ஷீண நிலைமைகள் தானே காட்சியளிக்கின்றன. ஒருவருக்கொருவர் சுய நலனுக்காகப் போராடுவதுபோல் தேசத்திற்கு தேசம் போர் புரிகிறது. பிறகு உலக மகா யுத்தத்திற்கு முடிவுண்டோ? ஒருகாலுமில்லை.

உலகம் அதன் ஜனங்களுக்குச் சொந்தமாயிருக்கவேண்டும். அன்று புலியும், பசுவும் ஒரு துறையில் நீராடும். ஓடுகிற தண்ணீர் தித்திக்கும். காசுக்கு கல அரிசி விற்கும். ஜனங்கள் கலை சிறந்து ஞானிகளாகத் திகழ்வர். இவ்வுலகம் "பூலோக சொர்க்கம்" என்று அதன் ஜனங்கள் சந்தோஷமாக வாழ்வர். உலகம் இவ்வுன்னத நிலையடையும் காலத்தை நிர்ணயிப்பது ஜனங்களின் விருப்பத்தைப் பொறுத்திருக்கிறது. இந்நிலையை விரைவில் அடையப் பொதுவுடமை எனும் கூட்டுறவுத் திட்டம் நல்லதா அல்லது தனிவுடமையெனும் முதலாளித்துவத் திட்டம் நல்லதா என்பதை மேல்கண்டவற்றிலிருந்து தேர்ந்தெடுத்துச் சரியானதைக் கடைபிடிக்கும் பொறுப்பு ஜனங்களின் நன்மையைக் கருதும் ஜனங்களுடையதாகும்.

---

## அத்தியாயம்—3

---

### அச்சு வல்லரசுகள்

[கி. பி. 1934—39-ம் வருடங்களுக்கிடையிலேற்பட்ட அச்சு வல்லரசுகள்—புத்துயிர்பெற்ற ஜெர்மனி—அதன் பூர்வீகம்—ஹிட்லர் ஜெர்மனியும், ஸ்டாலின் ரஷியாவும் செய்துகொண்ட அனுக்கிரமிப்பு ஒப்பந்தம்—முதலிய விஷயங்கள் இதில் விளக்கப்பட்டுள்ளன.]

ஆசியாவில் பிரிட்டன், பிரான்ஸ், அமெரிக்கா, ஹாலந்து ஆகிய நான்கு ஐரோப்பிய நாடுகளும் செய்து வந்த அநீதங்களுக்கு அளவில்லை. மேற்கு ஆசியாவிலிருந்து கொஞ்சங்கொஞ்சமாகச் சுரண்டிக் கொண்டேபோய் இறுதியாக ஜப்பானைக் குரவளையைப் பிடிப்பதுபோல் இந்நாடுகள் சீனாவில் சோரம் செய்து வந்தன. ஐரோப்பியர்களுக்கு சீனா ஓர் விலைமகளின் வீடுபோலாயிற்று. இந்தோ சீனா, கொச்சின் சீனா, கம்போடியா, அன்னம் ஆகியவற்றை 1863-ம் வருட வாக்கில் சீனாவிடமிருந்து

பிரான்ஸ் பிடுங்கி, அவைகளுக்குப் பிரெஞ்சு இந்தோ சீனு எனப் பெயர் வைத்து ஆண்டு வந்தது. சைபீரியாவை ரஷியா 1860-ல் சீனுவிடமிருந்து பிடித்துக்கொண்டது. பூட்டான், நேப்பாளம், பர்மா, ஹாங்காங் ஆகியவற்றை 1850-ம் வருட வாக்கில் பிரிட்டன் சீனுவிடமிருந்து பிடுங்கிக்கொண்டது. இதர வல்லரசுகள் சீனுவில் செய்யாத எதையும் ஜப்பான் அங்கு செய்துவிடவில்லை. இந்தியாவும், மலேயாவும் பிரிட்டன் வசம். ஆஸ்திரேலியாவும், அநேக பஸிபிக் தீவுகளுங்கூட பிரிட்டன் வசம்தான். இந்தோனேஷியத் தீவுகளை ஹாலந்தினர் ஆண்டனர். பிலிப்பைன் தீவுகளை அமெரிக்கர் ஆண்டனர். ஜப்பானைச் சுற்றிலும் வேலி போட்டதுபோல் இந்த ஐரோப்பிய, அமெரிக்க ஏகாதிபத்தியங்கள் ஆசியாவில் குந்திக்கொண்டிருந்தன. இது ஜப்பானுக்குப் பிடிக்கவில்லை.

ரஷியா தனக்கு சைபீரியாவும் போதாதென இனியும் சீனுவைச் சுரண்ட அடிபோட்டுக்கொண்டிருந்தது. இப்படியே விட்டுக்கொண்டு போனுல் இது தனக்கு ஆபத்தாக முடியுமென ஜப்பான் உணர்ந்தது. எனவே சீனுவுக்குள் ரஷியா நுழையாதபடி தடுப்பதாக ஜப்பான் வட சீனுவில் கொரியா, மஞ்சுகோ, மங்கோலியா முதலியவிடங்களைப் பிடித்துக்கொண்டது. ஆனுல் ரஷியா நாளுக்குநாள் பலமிகுந்து வருவதைக் கண்டு ஜப்பான் அதன்மீது ஐயங்கொள்ளலாயிற்று.

ஐரோப்பாவில் ஜெர்மனியும், ஆசியாவில் ஜப்பானும் ரஷியாவை வெறுக்கும் நாடுகளாயின. எனவே இவ்விரண்டும் தத்தம் ஆயுத பலங்களையும், மூலாதாரக் கொள்கைகளையும் பரஸ்பரமாக அறிந்துகொண்டு பொதுவுடமை ரஷியாவின் பெருகிவரும் செல்வாக்கைத் தடுப்பதற்காக 1936-ம் வருடம் நவம்பர் மாதம் "சர்வதேச பொதுவுடமைக் காரர்களைப் பகிஷ்கரிக்கும் ஒப்பந்தம்" (Anti-Comintern Pact—Anti-Communist International) செய்து கொண்டன. இவ்வொப்பந்தத்தைப் பிரிட்டனும் பிரான்ஸும் உள்ளூர மனங்குளிர வரவேற்றதோடன்றி, பொதுவுடமை ரஷியாவை அழிக்கும்படி ஜெர்மனிக்குக் கடனும் கொடுத்தன. ஹிட்லர் இதைக்கொண்டு தன் இராணுவ பலத்தை இனியும் பன்மடங்காக விருத்தி செய்து கொண்டார். இங்ஙனமிருக்க 1937-ம் வருடம் நவம்பர் மாதம் இத்தாலியும் இவ்வொப்பந்தத்தில் சேர்ந்து கொண்டது.

ரஷியாவுடன் ஜெர்மனியும், இத்தாலியும், ஜப்பானும் போர் தொடுத்து ஆதைத் தோற்கடித்து களைப்புற்றிருக்கும் சமயத்தில் தாம் போய் மத்தியஸ்தம் செய்து "பெரிய மனிதன்" பட்டம் வாங்கிக்கொள்வதோடு இம்மூன்று நாடுகளின் கொட்டத்தையும் நயவஞ்சகத்தால்தான் அடக்கவேண்டும் என்று பிரிட்டனும், பிரான்ஸும் இரவு பகலாகக் கனவு கண்டுகொண்டிருந்தன. ஜெர்மனியும், ஜப்பானும், இத்தாலியும் ரஷியாவுக்கு விரோத மாகத்தானே ஒப்பந்தம் செய்து கொண்டிருக்கின்றன; அதனால் நமக்கு நன்மையே ஒழிய தின்மையில்லை என்றும் நினைத்துக் கொண்டிருந்தன. ஆனால் இவ்வொப்பந்தம் தமக்குக் குழி தோண்டுவதற்காகவே செய்யப்பட்டதென்பதை அவைகள் உணர்ந்திருந்தும் எதுவும் செய்ய முடியவில்லை.

ஜெர்மனி, ஜப்பான், இத்தாலி ஆகிய இம்மூன்று நாடுகளுக் கும்தான் அச்சு-வல்லரசுகள் என்று பெயர். ஏனெனில் உலக மெனும் வண்டிக்கு ஜெர்மனி—இத்தாலி—ஜப்பான்—ஆகிய மூன்றும் அச்சாணியைப்போல் பூகோள அமைப்பில் காணப் படுகின்றன.

## பழைய ஜெர்மனி

கி. பி. 1870-ம் வருடத்திற்கு முன்பு ஜெர்மனி யென்றால் என்னவென்று யாருக்குமே தெரியாது. ஏனெனில் இன்று வழங்கப்படும் ஜெர்மனி என்ற பெயர் அன்றிருக்கவில்லை. "ஜெர் மனி" என்ற பதத்திற்கு "ஒரேவம்சம்" அல்லது "அண்டையய வார்" அல்லது "சுற்றுப்புறத்தார்" என்று அர்த்தம். இன்று ஜெர்மனி எனப்படும் பிரதேசம், அன்று பாடன், ஹெஸ்ஸி, பவேரியா, ஊர்ட்டம்பர்க், பிரஷ்யா என்பனபோன்ற இன்னும் பல சிறிய நாடுகளாக இருந்து தனித்தனி நபர்களால் அரசாளப் பட்டு வந்தது. இவற்றினுள் மிகப்பெரியது பிரஷ்யாதான். அதுவே மத்தியிலிருந்தது. மற்றவை அதைச் சுற்றியிருந்தன. எனவே சுற்றியிருந்தவை அனைத்தும் பிரஷ்யாவின் பிரிவுகளாய்த் தான் இருந்திருக்க வேண்டும்.

நிற்க ஜெர்மனி என்ற பெயரைக் கேட்டதும் சரித்திர மாண வர்களுக்கு பிஸ்மார்க்கின் பெயர் ஞாபகத்திற்கு வரும். அவரின் முழுப்பெயர் ஒட்டோ எட்வர்ட் லெப்போல்ட் வான் பிஸ்மார்க் இளவரசர். அவரது காலம் கி. பி. 1815 முதல் 1898 வரை

யாகும். பிரஷ்யாவின் சிறந்த அரசியல்—இராணுவ நிபுணர் அவர்தான். பிரஷ்யாவில் முதலாவது வில்லியம் அரசர் ஆட்சி நடத்தியபோது 1862-ல் பிஸ்மார்க் வெளிநாட்டு மந்திரியாக நியமிக்கப்பட்டார். அதன் பிறகு பிரஷ்ய சாம்ராஜ்ய சர்வாதிகாரியாக நியமிக்கப்பட்டார். பிஸ்மார்க்கின் காலத்தில் பிரஷ்ய சாம்ராஜ்யம் வளர்பிறைச் சந்திரனைப்போல் வியாபித்து வந்ததைக் கண்ட பிரான்ஸிற்கு வயிறு எரிய ஆரம்பித்தது. எனவே அச்சமயம் பிரான்ஸை யரசாண்ட 3-வது நெப்போலியன் (பிரிட்டிஷாரால் செயிண்ட் ஹெலினாவில் சிறைவைக்கப்பட்டு மடிந்து போன நெப்போலியன் போனப்போர்ட்டின் சகோதரன் மகன்) பிரஷ்யா மீது 19-7-1870-ல் யுத்தம் தொடுத்தான். ஆனால் அவ்வமயம் பிரான்ஸிற்கு கிழடு தட்டிவிட்டதென்பதையும், பிரஷ்யா வாலிபத்திலிருந்ததென்பதையும் அவன் ஊகித்தானில்லை. பிஸ்மார்க்குக்கு வெற்றிமேல்வெற்றி. பிரான்ஸிற்குத் தோல்வி மேல் தோல்வி.

1870 செப்டம்பர் முதல் தேதி செடானில் நடந்த யுத்தத்தில் 3-வது நெப்போலியன் சரணாகதியடைந்தான். 2-ம் தேதி 25,000 பிரஞ்சுக்காரர்கள் கைது செய்யப்பட்டனர். 5-ம் தேதி 83,000 பிரஞ்சுக்காரர்கள் பிஸ்மார்க்கிடம் சரணாகதியடைந்தனர்; பிரான்ஸ் ஓர் குடியரசு நாடென பிரஞ்சுத் தலைநகராகிய பாரிஸில் பிரகடனம் செய்யப்பட்டது. 19-ம் தேதி பிரஞ்சு சக்ரவர்த்தினி (மூன்றாவது நெப்போலியனின் மனைவி) இங்கிலாந்துக்குத் தப்பியோடிவிட்டாள். இதே தேதியில் பிஸ்மார்க்கின் துருப்புகள் பாரிஸ் நகரத்தை முற்றுகையிட்டன. இம்முற்றுகை பல மாதங்கள்வரை நடந்தது. இதன் பயனாக பாரிஸ் நகரம் 28-1-1871-ல் பிஸ்மார்க் துருப்புகளிடம் சரணாகதியடைந்தது. இந்த சரித்திரப் புகழ்வாய்ந்த பிரஞ்சுத் தோல்வியினதும், பிரஷ்ய வெற்றியினதும் ஞாபகார்த்தமாக வெர்சயில்ஸ் பட்டணத்தில் (1918-ம் வருட யுத்தமுடிவு சமாதான ஒப்பந்தம் கையெழுத்தான பிரஞ்சு நகரம்) பிரஷ்ய முதலாம் வில்லியம் அரசர் முதலாம் ஜெர்மன் கெய்ஸர் (சக்ரவர்த்தி) என்று பிரகடனம் செய்யப்பட்டது. முடிவில் பிரான்ஸ் தோல்வியுற்றதன் பயனாக இருபது கோடி பவுனை யுத்த நஷ்டயீடாகக் கோரிய பிரஷ்யாவுக்குப் பிரான்ஸ் அல்ஸாஸையும், லோரேய்ன் பகுதியையும் விட்டுக்கொடுத்தது. இவ்விதமாகச் சுற்றியிருந்த சிறுசிறு நாடுகளை ஒன்று படுத்தி

பிரஷ்யாவின் ஏக ஆட்சியின் கீழ்க் கொண்டுவந்து அதற்கு ஜெர்மன் (மேற்கு ஐரோப்பாவில் ஒரே வம்சத்தைச் சேர்ந்தவர்களின்) சாம்ராஜ்யம் என முதன் முதல் பெயரிட்டவர் பிஸ்மார்க்குதான். இதன் பிறகே பிரஷ்ய சாம்ராஜ்யத்தை ஜெர்மன் சாம்ராஜ்யம் என்றும், பிரஷ்ய அரசரை ஜெர்மன் கெய்ஸர் என்றும் உலகோர் வழங்கலாயினர். பிஸ்மார்க்கின் சேவையைப் பெரிதும் போற்றிய முதலாம் வில்லியம் கெய்ஸர் பிஸ்மார்க்கை 1871-ல் இளவரசரெனப் பிரகடனப்படுத்தினர்.

பிறகு 1877-78-ல் ரஷியாவுக்கும் துருக்கிக்குமிடையில் நடந்த யுத்தம் முடிந்து சமாதான மகாநாடு பெர்லினில் 1878-ல் நடந்தது. அதில் சகல ஐரோப்பிய வல்லரசுகளும் கலந்துகொண்டன. அம்மகாநாட்டுக்குத் தலைமை வகித்தவர் பிஸ்மார்க் இளவரசர்தான். இதிலிருந்து அன்றைய ஐரோப்பாவனைத்தும் பிஸ்மார்க் இளவரசரிடம் அதாவது ஜெர்மனியின் சிருஷ்டிகர்த்தாவிடம் எவ்வளவு மதிப்பு வைத்திருந்ததென்பது நன்கு விளங்கும். அவர் சிருஷ்டித்த ஜெர்மன் பார்லிமெண்டுக்கு முதலாவது ரைக்ஸ்ட்ரக் அதாவது "முதலாவது மகா ஜெர்மானியப் பாராளும் மன்றம்" என்று பெயர்.

இங்ஙனமிருக்க முதலாம் ஜெர்மன் வில்லியம் கெய்ஸர் 1888-ல் காலமாய்விடவே அவரது மகன் (1914-18-ம் வருட உலக மகாயுத்தத்தை நடத்திய) இரண்டாம் வில்லியம் ஜெர்மனியின் கெய்ஸரானர். இவர் பிஸ்மார்க் இளவரசரின் சர்வாதிகாரத்தை விரும்பவில்லை. சகலத்தையும் தானே நேரடியாக நடத்தவேண்டுமென்று விரும்பினர். பிஸ்மார்க்குக்கு இது பிடிக்கவில்லை. எனவே இவர் அரசியலிலிருந்து 1890-ல் விலகிக் கொள்ளவேண்டிய நிர்ப்பந்தமேற்பட்டது. இரண்டாம் வில்லியம் கெய்ஸர் தனது ஜெர்மன் சாம்ராஜ்யத்தை இனியும் வலுப்படுத்த ஆசைப்பட்டார். இவரது காலத்தில் ஜெர்மனிக்கு "இரண்டாவது மகா ஜெர்மனி" என்ற பெயர் வரலாயிற்று. ஆனல் இது 1914-18-ம் வருட யுத்தத்தால் சிதைவுற்றது.

## ஹிட்லர் ஜெர்மனி.

ஜெர்மனியின் பலத்தைக் குறைப்பதற்காக வெர்சயில்ஸ் உடன்படிக்கை மூலம் ஜெர்மன் சாம்ராஜ்யம் சிறுசிறு நாடுகளாக சிதைக்கப்பட்டு விட்டதென்பதை வாசகர்கள் மறந்துவிடக்

கூடாது. முதலாவது உலக மாகாயுத்தம் நடந்து கொண்டிருக்கும்போதே யூதர்களின் சூழ்ச்சியால் சகல ஜெர்மன் சர்க்கார் காரியதரிசிகளும் 3-10-1918-ல் ராஜினாமா செய்து விட்டனர். ஜெர்மனியில் புரட்சி இயக்கம் வளரலாயிற்று. 9-11-1918-ல் வில்லியம் கெய்ஸர் ஹாலந்திற்கு ஓடி விட்டார். ஜெர்மன் பிரதிநிதிகளுக்கும், பிரிட்டிஷ் நேசதேசத்தினருக்கு மிடையில் 11-11-1918-ல் யுத்த நிறுத்த ஒப்பந்தம் ஏற்பட்டது. அடால்ப் ஹிட்லர் ஆஸ்திரியாவில் பிறந்து வளர்ந்தவர். அவர் அச்சமயம் ஜெர்மன் படையில் ஓர் சாதாரணப் போர் வீரராயிருந்தார்.

14-3-1920-ல் ஜெர்மனியில் ஓர் இராணுவப் புரட்சி நடந்தது. ஜெர்மனி 1130 கோடி பவுன்களை யுத்த நஷ்டயீடாக 42 வருடங்களில் கொடுக்க வேண்டுமென நேசதேசத்தினர் 7-2-1921-ல் பாரிஸில் நிர்ணயித்தனர். அதற்கிணங்காவிடில் இராணுவ நடவடிக்கை எடுத்துக் கொள்ளப்படுமென்று வேறு ஜெர்மனிக்கு 3-3-21-ல் நேசதேசத்தினர் இறுதி எச்சரிக்கை விடுத்தனர். பல்லை இழந்த சிங்கம்போ லாக்கப்பட்ட ஜெர்மனி திண்டாடிக் கொண்டிருந்தது. எனவே 8-3-21-ல் டஸல்டர்ப், டைஸ்பர்க், ரார்ட் ஆகிய மூன்று ஜெர்மன் பிரதேசங்களையும் நேசதேசத்துருப்புக்கள் பிடித்துக் கொண்டன. 8-1-1923-ல் ரர் பிரதேசத்தைப் பிரஞ்சுத் துருப்புக்கள் பிடித்துக் கொண்டன.

ஜெர்மனி இவ்விதமாக மானபங்கத்தின் மீது மானபங்கம் செய்யப்பட்டு வரும்போது 26-4-1925-ல் ஹிண்டன் பர்க் ஜெர்மன் பிரசிடண்டாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். ஹிட்லர் இச்சமயம் ஓர் பெரும் சமதர்மவாதியாக தொழிலாளர் இயக்கத்தில் அதிக சிரத்தை காட்டி வந்தார். எனினும் அச்சமயம் அவர் அதிக செல்வாக்கு பெற்றிராததால் பொதுத் தேர்தலில் தோல்வியுற்றார். 10-9-1926-ல் ஜெர்மனி சர்வதேச சங்கத்தில் சேர்த்துக் கொள்ளப்பட்டது. ஆனால் அதே தேதியில் ஸ்பெயின் விலகிக் கொண்டது. பீல்ட் மார்ஷல் வான் ஹிண்டன்பர்க் தலைமையில் ஜெர்மனி சிறிது பலமடைந்தது. ஆனால் அவர் தனது 86-ம் வயதில் 2-8-1934-ல் மரணமடையவே அடால்ப் ஹிட்லர் ஜெர்மனியின் பிரசிடண்டாகவும், சான்சலராகவும் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

சாதாரணமாகவே உலகில் ஜெர்மனி விஞ்ஞான ஆராய்ச்சியில் உச்சஸ்தானம் பெற்ற நாடு. கைத்தொழிலில் கரை கண்ட

நாடு. சதா வீராவேசங்கொண்டு விளங்கிய நாடு, இந்நிலைமையில் ஹிட்லர் அதன் சர்வாதிகாரியானது ஜெர்மனியின் அதிர்ஷ்டம் பழம் நழுவிப் பாலில் விழுந்தது போலவும், அதுவும் நழுவி வாயில் விழுந்தது போலவும் ஆகிவிட்டது. அவர் கட்டாயக் கல்வியையும், கட்டாய இராணுவ சேவையையும் அமுலுக்குக் கொண்டுவந்தார். எனவே ஜெர்மனி கைத்தொழில் கல்வி, இராணுவம், பொருளாதாரம் ஆகியவற்றின் சிகரமாகத் திகழலாயிற்று.

சர்வாதிகாரி ஹிட்லர்தான் புத்துயிர் பெற்ற ஜெர்மனியின் தந்தை, அவரின் கீழ் ஜெர்மன் சர்க்கார் இலாக்காக்கள் திருத்தியமைக்கப்பட்டன. மாஜி ஜெர்மன் சாம்ராஜ்யம் மகா பெரிது. ஆனால் அது வெர்சயில்ஸ் உடன்படிக்கைக்குப் பிறகு கழுதை தேய்ந்து கட்டை மாறுனதுபோல் ஆகிவிட்டது. தோல்வியுற்ற ஜெர்மனிக்கு வடக்கில் டென்மார்க், நார்வே, ஸ்வீடன், பின்லந்து ஆகிய நாடுகளும், மேற்கில் ஹாலந்து, பெல்ஜியம், போர்ச்சுகல், பிரிட்டன் ஆகிய நாடுகளும். தெற்கில் ஸ்பெயின், இத்தாலி, பிரான்ஸ், ஆஸ்திரியா, லக்ஸம்பர்க், ரைன்லந்து, ஸ்விட்ஸர்லந்து, கிரீஸ், அல்பேனியா, ருமேனியா, யூகோஸ்லேவியா, பல்கேரியா, ஹங்கேரி, துருக்கி ஆகிய நாடுகளும், கிழக்கில் செக்கோஸ்லோவகியா, போலந்து, எஸ்டோனியா, லட்வியா, லிதுவேனியா, ரஷியா, போன்ற நாடுகளும் எல்லைகளாக இருந்தன.

முதலாவது மகா ஜெர்மனியை பிஸ்மார்க் உருவகப்படுத்தினர். 2-வது மகா ஜெர்மனியை 1914-18-ல் பிரிட்டிஷ்-பிரஞ்சு நேசதேசத்தினர் சிதைத்தனர். கெய்ஸர்கால ஜெர்மனியையும், சிதைக்கப்பட்ட ஜெர்மனியையும் ஹிட்லர் நினைந்து நினைந்தேங்கினர். எனவே மூன்றாவது மகா ஜெர்மனியைச் சிருஷ்டிக்க மனதில் உறுதிகொண்டார். பல வகையாலும் செல்வாக்குற்ற ஸ்பெயின் கலகத்திற்குப் (1936) பிறகு தனது கனவை நனவாக்க முற்பட்டார். சுற்றுப்பக்கங்களிலுள்ள பால்கன், (தென் கிழக்கு ஐரோப்பிய) நாடுகளிலும், பால்டிக் (வட கிழக்கு) ஐரோப்பிய நாடுகளிலும் தனது செல்வாக்கை முதலில் ஸ்தாபித்துக் கொண்டார். ரைன், ஸர், சூடட்டன்லந்து முதலியவைகளை இரத்தம் சிந்தாமலேயே ஜெர்மனியுடன் இணைத்துக் கொண்டார். இறுதியாக 1938 மார்ச்சில் ஆஸ்திரியாவையும் ஆக்ரமித்துக்கொண்டார். பிறகு செக்கோஸ்லோவகியாவையும்

ஆக்ரமித்துக் கொள்ள ஏற்பாடாகி வரும்போது தான் பிரிட்டனுக்கும், பிரான்ஸிற்கும் புத்தி வந்தது.

அச்சமயம் பிரிட்டிஷ் பிரதம மந்திரியாயிருந்த சேம்பர்லேன் ஓர் அப்பாவி. அவர் ஓர் குடையையும், மீன் பிடிக்கும் தூண்டியையும் எடுத்துக்கொண்டு ஜெர்மனிக்கும், செக்கோஸ்லோவகியாவிற்குமிடையில் சமாதானம் செய்வதற்காகப் பிரிட்டனை விட்டுப் புறப்பட்டு ஹிட்லரை வந்து கண்டார். ஹிட்லரின் முகத்தைக் கண்டவுடனேயே எவரும் எதிர்த்து வாதாடும் எண்ணத்தைக் கைவிட்டுவிடுவரென்று கூறப்படுகிறது. எனவே ஜெர்மனி செக்கோஸ்லோவாகியாவில் அடியெடுத்து வைத்தால் பிரிட்டிஷ் நேசதேசத்தினர் அதன்மீது போர் தொடுப்பரென்று ஹிட்லரிடம் சொல்லப்போன சேம்பர்லேன் செக்கோஸ்லோவாகியா வடபாரிசத்திலுள்ள தனது நான்கு ஜில்லாக்களை மட்டிலும் ஜெர்மனிக்குக் கொடுத்துவிட வேண்டுமென்றும், அதன் பிறகு ஹிட்லர் ஐரோப்பாவில் வேறு ஒருஅடி நிலத்தின்மீதுகூட ஆசைப்படலாகாதென்றும், மீறினல் பிரிட்டிஷ் நேசதேசத்தினர் ஜெர்மனிமீது யுத்தம் தொடுப்பரென்றும் 1938 அக்டோபரில் மியூனிக்கில் உடன்படிக்கை செய்துகொண்டு திரும்பியதில் அதிசயமில்லை. இவ்விதம் செக்கோஸ்லோவகியாவைப் பிடுங்கிக் கொடுத்து பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தை சேமபர்லேன் தற்காலிகமாகக் காப்பாற்றிக்கொண்டார். என்றாலும் மீந்திருந்த செக்கோஸ்லோவகியா முழுவதையும் 1939 மார்ச்சில் ஜெர்மனி இணைத்துக்கொண்டது. ஆனால் பிரிட்டிஷ் நேசதேசத்தினர் என்ற சர்வதேச சங்கம் ஜெர்மனி மீது யுத்தப்பிரகடனம் செய்யவில்லை. எனினும் "ஜெர்மனி இனிமேல் இவ்விதம் வேறு நாடுகளைப் பிடிக்குமாயின் பிரிட்டிஷ் நேசதேசத்தினர் அதன் மீது யுத்தப்பிரகடனம் செய்வர். இதுதான் கடைசி எச்சரிக்கை. இதுதான் கடைசி எச்சரிக்கை" என்று மட்டிலும் சொல்லத் தவறியதில்லை.

2-வது மகா ஜெர்மனி வெர்சயில்ஸ் உடன்படிக்கைப்படி சிதைக்கப்பட்டதால்தான் இன்றைய 2-வது உலக மகாயுத்தம் மூண்டது. ஜெர்மனி எத்தனையோ வகைகளில் சிதைக்கப்பட்டதெனினும், பிரஷ்யா துண்டிக்கப்பட்டதுதான் இன்றைய யுத்தத்திற்கு நேரடியான காரணமாகவிருக்க நேர்ந்தது. ஹிட்லர் இதை உணராதவரென்று யாரால் சொல்லமுடியும்? "மூன்றாவது

மகா ஜெர்மனியை" சிருஷ்டிக்க அவர் திடசங்கல்பம் கொண்டு விட்டார். அவரின் மன உறுதிக்கு நிகர் எதுவும் இவ்வுலகிலில்லை. எதையும் பிடிவாதமாகச் சாதிக்கும் தன்மை நிறைந்தவர். கடந்த உலக மகாயுத்தத்தின்போது ஜெர்மனியின் உள்ளிருந்துகொண்டே ஊரைக்கெடுத்து சமுதாய சூழல்களுக்கும், நாட்டின் பொருளாதாரச் சீர்கேட்டிற்கும் காரணகர்த்தாக்களாயிருந்த யூதர்களை ஹிட்லர் முதலில் சரிப்படுத்தினர். உள்நாட்டைச் சரியாகத் திருத்தியமைத்துப் பலப்படுத்திக்கொண்ட பிறகு சுற்றுப்புற நாட்டு விவகாரங்களைக் கவனிக்கலானர். தனது அருகாமையிலுள்ள வெளி நாட்டுப் பிரச்னைகளை ஒரு வாறு தீர்த்துக்கொண்ட பிறகே தூரத்திலுள்ள வெளிநாட்டு விஷயத்தில் தலையிடவேண்டுமென்றும், இதன் மூலமே பிரிட்டிஷ் நேசதேசத்தினரைக் கர்வ பங்கம் செய்வதில் வெற்றிபடைய முடியுமென்றும், ஏக காலத்தில் பல திசைகளிலும் போர் முனைகளை ஏற்படுத்திக்கொண்டால் பிடுங்கல்கள் அதிகமாகி, தனது ஒருமுகமான பலம் சிதைக்கப்படுமாதலின், கெய்ஸரைப்போல் அவ்விதம் செய்யாது ஒவ்வொன்ருகக் கவனித்து வரவேண்டுமென்றும் ஹிட்லர் திட்டம் போட்டிருந்திருக்கவேண்டும்.

அதன் பிரகாரம் 1939 மார்ச்சு மாத முடிவிற்குள் ஸார், ரைன்லந்து, ஆஸ்திரியா, செக்கோஸ்லோவகியா ஆகிய நாடுகளை ஜெர்மனி யுத்தமின்றியே தன்னேடு இணைத்துக்கொண்டது. இத்தாலி அபிஸீனியாவையும், அல்பேனியாவையும் பிடித்துக் கொண்டது. சர்வதேச சங்கம்-பிரிட்டிஷ், பிரஞ்சு நேசதேசங்கள்-எதையும் செய்துவிடவில்லை. செய்யவும் முடியாது. ஹிட்லர் இதை நன்கு உணர்ந்துகொண்டார். ஆயுத உற்பத்தியை இனியும் ஆயிரமடங்கிற்கு அதிகரித்தார். வேலைகள் ரகசியமாகவே நடந்து வந்தன. ஹிட்லரின் திருஷ்டி இப்பொழுது போலந்தின் மீது விழுந்தது. டேன்ஸிக் பாதையைத் திருப்பிக் கொடுத்துவிடவேண்டுமென்பதே ஜெர்மனி போலந்திடம் செய்த கோரிக்கை. ஆனல் பிரிட்டிஷ் நேசதேசத்தினர் சும்மாவிருக்கக் கூடிய பேர்வழிகளா? போலந்து தூண்டிவிடப்பட்டது.

இப்பொழுதுதான் முதன் முதலாகப் படையெடுக்கவேண்டிய நிர்ப்பந்தம் ஹிட்லருக்கேற்பட்டது. போலந்தின் மீது படையெடுத்தால் தாம் ஜெர்மனி மீது கட்டாயம் போர்தொடுக்க நேருமென பிரிட்டனும், பிரான்ஸும் ஹிட்லருக்குப் "பாச்சா"

காட்டினர். ஆனால் ஹிட்லர் இந்த உருட்டு மிரட்டல்களை லட்சியம் செய்யவில்லை யெனினும் ரஷியாவைப்பற்றி கொஞ்சம் சிந்திக்க வேண்டியிருந்தது. ஏனெனில் இது காலம் வரையும் பிரிட்டிஷ் நேசதேசத்தினர் ரஷியாவிற்குத் திரைமறைவிலிருந்து கொண்டு சதி செய்து வந்தனரெனினும் இப்பொழுது அதன் உதவியை நாடி பேச்சுவார்த்தைகள் நடத்திக்கொண்டிருந்தனர். இப்பேச்சுவார்த்தைகளின் விவரம் ஆதாரபூர்வமாக வெளியாகவில்லை. என்றாலும் நாம் சுலபமாக ஊகித்துக்கொள்ளமுடியும்.

பிரிட்டன், பிரான்ஸ், ரஷியா ஆகிய மூன்றும் ஓர் கூட்டு ஒப்பந்தம் செய்து கொள்ளவேண்டும். அதன்படி ஹிட்லர் போலந்து மீது படையெடுப்பாராயின் ரஷியா கிழக்கிலிருந்தும், பிரிட்டன் மேற்கிலிருந்தும், பிரான்ஸ் தெற்கிலிருந்தும் ஜெர்மனியை உடனே தாக்க ஆரம்பிக்க வேண்டுமென்பது பிரிட்டிஷ், பிரஞ்சு அபிலாஷை. தான் ஜெர்மனியை தாக்கினால் ஜெர்மனியின் நண்பனாகவும், பொதுவுடமை ரஷியாவிற்கு விரோதமாக ஒப்பந்தம் செய்துகொண்டிருப்பதுமான ஜப்பான் கிழக்கில் தன்னைத் தாக்குமேயாகில் பிரிட்டனும், பிரான்ஸும் மலேயா, இந்தோ சீனா ஆகியவிடங்களிலிருந்து ஜப்பானைத் தாக்குமா என்பது ரஷியாவின் கேள்வி. போதாக்குறைக்குப் பொதுவுடமைத் துருப்புகள் தம் நாட்டினூடே பிரவேசிக்கலாகாதென்பது போலந்தினரின் ஆக்ஷேபனையெனவும் கூறப்பட்டது. இவ்விதமாக மாதங்கள் பல கடந்தனவேயன்றி பிரிட்டிஷ் நேசதேசத்தினருக்கும், ரஷியாவுக்குமிடையில் ஓர் ஒப்பந்தமட்டிலும் ஏற்படவில்லை. எனினும் மாஸ்கோவில் இனியும் ஒப்பந்தப் பேச்சுவார்த்தைகள் நடந்துகொண்டிருந்தன.

## ரஷிய-ஜெர்மன் ஒப்பந்தம்

இது இங்ஙனமிருக்க ஹிட்லரும் ரஷியாவுடன் அனாக்கிரமிப்பு ஒப்பந்தம் செய்து கொள்ள உத்தேசித்தார். இதற்காக ஜெர்மன் அந்நியநாட்டு மந்திரியான வான் ரிப்பன்ட்ராப் 1939-ம் வருடம் ஆகஸ்ட் மாத இறுதியில் ரஷியா சென்றார். இச்சமயத்திலும்கூட பிரிட்டிஷாருக்கும், ரஷியாவுக்குமிடையில் ஒப்பந்தப் பேச்சுவார்த்தைகள் நடந்துகொண்டிருந்தன. ரிப்பன்ட்ராப் ரஷியாவுடன் அனாக்கிரமிப்பு ஒப்பந்தம் செய்து கொள்ளுவதற்காக மாஸ்கோ வந்தது அங்கு பிரிட்டிஷ்—பிரஞ்சு நாடுகளின்

சார்பாக ஒப்பந்தப் பேச்சுவார்த்தைகளை நடத்திக்கொண்டிருந்த பிரதிநிதிகளுக்கும் நன்கு தெரியும். அப்படியிருந்துங்கூட அவர்கள் சிறிதும் விட்டுக்கொடுக்கவில்லை. தத்தம் சர்க்கார் அவர்களுக்குப் போதிய அதிகாரமளித்தனுப்பாததே இதற்குக் காரணம். மேலும் தலைவிதி அப்படியிருந்தது. ஆனால் ரிப்பன்ட்ராப் ஒரே வாரத்திற்குள் தான் சென்ற காரியத்தில் வெற்றி பெற்றுவிட்டார். ரஷியாவுக்கும் ஜெர்மனிக்குமிடையில் 10 வருடம் வரை அமுலிலிருக்கும்படியான ஓர் அனுக்கிரமிப்பு ஒப்பந்தத்தில் ஜெர்மனியின் சார்பில் ரிப்பன்ட்ராப்பும், ரஷியாவின் சார்பில் ஸ்டாலினும் கையொப்பமிட்டுவிட்டனர். இச்செய்தி வெளியானதும்தான் பிரிட்டிஷ்—பிரஞ்சு சர்க்கார்கள் தம் முட்டாள்தனத்தை முழுதும் உணரலாயின. வீண் பொழுது போக்க ரிப்பன்ட்ராப்புக்கு நேரமில்லை. அவர் ஜெர்மனிக்குத் திரும்பிவிட்டார். இதுநாள் வரையும் ரஷியாவில் ஒப்பந்தப் பேச்சுவார்த்தைகளை நடத்திக்கொண்டிருந்த பிரிட்டிஷ்—பிரஞ்சுப் பிரதிநிதிகளுக்கு இனி அங்கென்ன வேலை? எனவே "காத்திருந்தவன் பெண்டாட்டியை நேற்றுவந்தவன் கொண்டுபோனான்" என்று நினைத்துக்கொண்டு அவர்களும் தத்தம் நாட்டிற்கேகினர்.

ரிப்பன்ட்ராப் பெர்லின் போய்ச்சேர்ந்தார். அவர் மூலமாக ஜெர்மன் சர்வாதிகாரி அடால்ப் ஹிட்லரும், ரஷிய சர்வாதிகாரி ஜோஸப் ஸ்டாலினும் அத்யந்த நண்பர்களாயினர். தான் போலந்தைத் தாக்கினால் ரஷியா தன்னைத் தாக்குமே என்ற பயம் ஜெர்மனிக்கு இனி வேண்டுவதில்லை. ஹிட்லர் போலந்து மீது படையெடுப்பாரென பொதுஜன அபிப்பிராயம் நிலவி வந்தது. இதை உறதிப்படுத்துமாறுபோல் ரஷிய-ஜெர்மன் 10 வருட அனுக்கிரமிப்பு ஒப்பந்தமும் வந்து சேர்ந்தது. இது வரையும் பிரிட்டிஷ், பிரஞ்சினரிடம் அனுதாபம் காட்டி வந்த நாடுகளனைத்தும் அவை ரஷியாவுடன் ஒப்பந்தம் செய்துகொள்ளத் தவறிவிட்டதால் அவற்றை மிகக் கடுமையாக நிந்திக்கலாயின.

---

## அத்தியாயம்—4

### நவீன துருக்கி

[அகிலாண்ட இஸ்லாமிய இயக்கம் என்பதன்மூலம் ஜெர்மன் கெய்ஸரின் நண்பரான துருக்கி சுல்தான் எவ்விதம் முதலாவது உலக மகாயுத்தத்தில் சர்வதேச முஸ்லிம்களின் உதவி கிட்டாது ஏமாந்தார்—முஸ்லிம் நாடுகளின் நிஜ விரோதிகள் ஐரோப்பிய கிறிஸ்தவ ஏகாதிபத்தியங்கள்தான்—துருக்கி சுல்தான் கலீபா அப்துல் ஹமீது முடியிழந்தது—கமால் பாஷா நவீன துருக்கியை சிருஷ்டித்தது போன்ற விவரங்கள் கீழே கூறப்பட்டுள்ளன. இதில் கூறப்பட்டுள்ள சில உண்மைகள் ஸ்ரீ வி. மகாலிங்க ஐயருடைய விளக்கமாகும்.]

அரேபியப் பாலைவனத்தில் இஸ்லாம் மதம் உருவகமாயிற்று. அங்கிருந்து உலகமெங்கும் பரவிற்று. முஸ்லிம் சாம்ராஜ்யங்கள் தோன்றின. ஆனால் வீழ்ச்சிக்குக் காரணம் ஐரோப்பிய கிறிஸ்துவ ஆக்கிரமிப்புதான். எனவே 1800-ம் வருடவாக்கில் அப்துல் வஹாப் என்ற அரேபியர் தலைமையில் "அகிலாண்ட இஸ்லாம் இயக்கம்" தோன்றிற்று. அகில உலகிலுமுள்ள முஸ்லிம்கள் வருடத்திற்கொருமுறை மெக்கா "ஹஜ்" யாத்திரை செல்வர். கிழக்கு உலகம் பூராவையும் தங்கள் வசமாக்கிக் கொள்ளவேண்டிய அரசியல் ஏற்பாடுகள் அங்கு விவாதிக்கப்படும். எனவே மெக்கா "ஹஜ்" யாத்திரீகர்கள் அகிலாண்ட இஸ்லாம் அரசியல் மகா நாட்டிற்குச் செல்பவர்கள் என்று நன்கு புலப்படும். "ஹாஜி" பட்டத்துடன் தத்தம் நாடு திரும்பும் முஸ்லிம்கள் ஆங்காங்கு ஐரோப்பிய கிறிஸ்துவ ஆக்கிரமிப்புக்கு எதிராகப் புரட்சி செய்வர். இவ்வியக்கத்தை-அகிலாண்ட இஸ்லாத்தைப்-பின்பற்றுபவர்களுக்கு வஹாப்பியர் என்று பெயர். 1857-ம் வருடம் இந்திய சுதந்திர யுத்தத்தை வஹாப்பியரும் சேர்ந்தேதான் பிரிட்டிஷாருக்கு எதிராகக் கிளப்பினர்.

ஐரோப்பிய ஆதிக்கம் பெருகுவதைக்கண்ட முஸ்லிம் உலகில் அவநம்பிக்கையும், பகைமையும் பொங்கி எழுந்தன.

1870—80-ம் வருடங்களில் ஆப்ரிக்கா, எகிப்து, ஆப்கானிஸ்தானம், இந்தியா, சீனு, ஜாவா, சுமத்ரா போன்ற சகல இடங்களிலும் கிறிஸ்துவ ஆட்சிக்கு எதிராக முஸ்லீம் புரட்சிகள் கடுமையாக ஏற்பட்டனவெனினும் தோல்வியுற்றன. எனவே நீண்ட தயாரிப்பு, பூரண கட்டுப்பாடு, ஒத்துழைப்பு ஆகியவற்றுடன் திரும்பவும் முயற்சிக்க இரு முக்கிய முஸ்லிம் இயக்கங்கள் தோன்றின. ஒன்று சென்னூஸியால் ஆரம்பிக்கப்பட்டது. இது முஸ்லிம் மதப்பிரசாரத்தில் பெரும் வேலைசெய்து வருகிறது. இதைக்கருதினுல் இதற்கு முன்பு கிறிஸ்துவ மதப்பிரசாரம் உரையிடக்கூட போதாதென்றுதான் சொல்லவேண்டும் இவ்வியக்கத்திற்கு "முஸ்லிம் சகோதர கோஷ்டிகள் இயக்கம்" என்று பெயர்.

2-வது இயக்கத் தலைவர் ஜமாலுதீன் ஆப்கானிஸ்தானத்தில் பிறந்தவர். பாரசிகத்தில் வதிந்தவர். அரசியலில் இவருக்கு ஆர்வம் அதிகம். கிறிஸ்துவ சர்க்கார்கள் இவரைக்கண்டஞ்சின. இந்தியாவில் இவர் கொஞ்சகாலம் பிரிட்டிஷாரின் சிறை விருந்தாளியாயிருந்தார். 1880-ல் எகிப்துக்குப்போனுர். அங்கு ஐரோப்பியருக்கு விரோதமாக தீவிர வேலையிலீடுபட்டார். ஆனுல் 1882-ல் ஆங்கிலேயர்கள் எகிப்தை ஆக்கிரமித்துக்கொண்டதும் ஜமாலுதீனை நாடுகடத்தினர். அவர் ஊரூராய்ச் சுற்றித்திரிந்து இறுதியில் கான்ஸ்டாண்டிநோபிள் போய்ச் சேர்ந்தார். அங்கு துருக்கி சுல்தான் கலீபா அப்துல் ஹமீது தனது அகிலாண்ட இஸ்லாம் இயக்க பிரங்கியைப் பிரயோகித்துக்கொண்டிருந்தார். ஜமாலுதீனைக் கண்டதும் சுல்தான் மோகம் கொண்டுவிட்டார். ஜமாலுதீன் 1896-ல் வயோதிக பருவத்தில் பாடுபட்டுக்கொண்டே மரணமெய்தியபோது முஸ்லிம் உலகிற்கு உயில் எழுதி வைத்தாற்போல் பின்வரும் உபதேசங்களைச் செய்துவிட்டுச் சென்றுர்:—

1. "கிறிஸ்துவ உலகில் நாட்டுக்கு நாடு பேதங்களும், சச்சரவுகளும் இருந்தபோதிலும்—கிழக்கு உலகத்தை—அதிலும் விசேஷமாக முஸ்லிம் உலகத்தை—சகல முஸ்லிம் ராஜ்யங்களையும் கிறிஸ்துவ உலகம் விழுங்கவே காத்துக்கொண்டிருக்கிறது.

2. 800 வருடங்களுக்கு முன் இஸ்லாத்திற்கெதிராக பீட்டர் சந்நியாசி விதைத்தவிதை இன்றைக்கும் சளைக்காமல் முளைக்

துக்கொண்டே யிருக்கிறது. மதப்படையெடுப்புகள் இன்னும் ஓய்ந்தபாடில்லை. அந்தரங்கத்தில் கிறிஸ்துவ உலகம் இஸ்லாத்தின் மீது வெறிபோன்ற பகைமையையும், உதாசினத்தையும் கொண்டிருக்கிறது. இந்த மனப்பான்மை எத்தனையோ விதங்களில் வெளியாகிறது. சர்வதேச சட்டங்களில் முஸ்லிம் நாடுகளை அதம நாடுகளாகக் கருதி வருகிறார்கள். கிறிஸ்துவ நாடுகளுக்குச் சமமாக மதிப்பதில்லை.

3. கிறிஸ்துவ சர்க்கார்கள் முஸ்லிம் ராஜ்யங்களின் மீது குவிக்கப்படும் அவமானங்களை எல்லாம், தாக்குதல்களை எல்லாம் மன்னித்து விடுகின்றன. முஸ்லிம் நாடுகள் அவ்வளவு அநாகரிகமான பிற்போக்கான நிலைமையில் இருக்கின்றனவாம். ஆனால் முஸ்லிம் நாடுகளில் சீர்திருத்தம் செய்ய முயற்சிப்பவர்களுக்கு இதே கிறிஸ்துவ சர்க்கார்கள் இடையூறு செய்து வருகின்றன.

4 இஸ்லாத்தின் மீது பகையென்பது சகல கிறிஸ்துவ தேசங்களுக்கும் பொதுவான குணமாகும். சில நாடுகளுக்குத்தான் அந்த துர்க்குணம் என்று நினைத்துவிடவேண்டாம். இப்படிப் பரவிக்கிடக்கும் துர்க்குணத்தின் காரணமாக இஸ்லாத்தை அடியோடு அழித்துவிடும்பொருட்டு ஓசைப்படாமல் இடைவிடாது முயற்சி நடந்து வருகிறது.

5. ஒவ்வொரு முஸ்லிம் உணர்ச்சியையும், ஆவலையும் முயற்சியையும் கிறிஸ்துவ உலகம் கேலி செய்து வருகிறது. அல்லது அதற்காகப் பழியைச் சுமத்தி வருகிறது. மனிதனைக் குரங்காகச் சித்தரிப்பதுபோல் நமது முயற்சிகளைச் சித்தரிக்கிறது. இந்த ஐரோப்பியர்கள் தம் சொந்த நாட்டில் 'தேசியம்' என்பதையே நமது கிழக்கு உலகில் 'மதவெறி' என்கிறார்கள். தம் சொந்த நாட்டில் 'சுயமரியாதை' என்பதை மற்ற நாட்டில் 'அகங்காரம்' 'தடித்தனம்' என்கிறார்கள். தம் சொந்த நாட்டில் 'தேசத்தின் கௌரவம்' என்பதை நமது 'சண்டித்தனம்' என்கிறார்கள்.

6. இவற்றிலிருந்து கற்றுக்கொள்ளவேண்டிய பாடம் என்ன? அடியோடு நாசமாய்ப் போகாமல் முஸ்லிம் நாடுகள் பிழைக்கவேண்டுமானால் முஸ்லிம் உலகம் முழுதும் ஒன்றாகச் சேரவேண்டும். தற்காப்பு ஒப்பந்தங்களையும் செய்துகொள்ளவேண்டும். மேலும் மேல் நாட்டு இராணுவ நாகரிகத்தைக் கற்

றுக்கொண்டுவிடவேண்டும். ஐரோப்பிய வல்லமையின் ரகசியத்தை நமதாக்கிக் கொள்ளவேண்டும்.''

இவ்விதமாக லோகமெங்குமுள்ள முஸ்லிம்களை ஒன்ருகத் திரட்டி ஐரோப்பியக் கிறிஸ்துவ நாடுகளை அழிக்கவேண்டுமென்பதுதான் அகிலாண்ட இஸ்லாம் இயக்கத்தின் நோக்கம். முஸ்லிம்கள் அனைவரும் ஒன்றுபடவேண்டுமென்பது முகமது நபியின் கொள்கை.

இஸ்லாமிய உலகின் சிகரமாக அன்று துருக்கி விளங்கியது' அதன் சாம்ராஜ்யம் கிழக்கு ஐரோப்பாவையும், மேற்கு ஆசியாவையும், வடக்கு ஆப்பிரிக்காவையும் கொண்டு வியாபித்திருந்தது. எனினும் இவ்வளவு பெரிய சாம்ராஜ்யத்தை கிறிஸ்துவ சர்க்கார்கள் கொஞ்சங்கொஞ்சமாக கறையான் அரிப்பதுபோல் மென்று விழுங்கி விட்டன. எனவே இஸ்லாமியத் தலைவர் 'கலீபா'' என்ற் ஹோதாவில் துருக்கி சுல்தான் அப்துல் ஹமீது அகிலாண்ட இஸ்லாம் இயக்கத்தை எட்டுத் திசைகளிலும் வியாபிக்கச் செய்தார். கான்ஸ்டிடாண்டிநோபிள் ஓர் அரசியல் மெக்காவாக விளங்கியது.

ஆனல் அசல் துருக்கியின் முற்போக்கிற்காகப் பாடுபட்டு வந்த "இளந்துருக்கியர்களுக்கு'' சுல்தான் மீது துவேஷம் ஏற்பட்டது. அவர்கள் அவருடைய முயற்சிகளில் குறுக்கே விழுந்தனர். மேலும் வஹாப்பியர்கள் துருக்கியை "ஹராகக்'' கருதினர். ஏனெனில் இஸ்லாத்தின் ஆதிக்கத்தை அராபியரிடமிருந்து துருக்கிப் பிடுங்கிக்கொண்டது. இந்தப் பிளவை ஐரோப்பிய நாடுகள் பயன்படுத்திக் கொண்டன. 1911-ல் காரணமெதுவுமின்றி திரிபோலியின் மீது இத்தாலி படையெடுத்துப் படுகொலைகள் செய்தது. 1912-ல் பால்கன் (தென் கிழக்கு ஐரோப்பிய) நாடுகள் துருக்கியைத்தாக்கி, அதை முடமாக்கி, அதன் மரணத்தை ஊர்ஜிதம் செய்தன. இதே வருடத்தில் இங்கிலாந்தும், ரஷியாவும் பாரசிகப் புரட்சியைக் கிள்ளியெறிய முன்வந்தன. இரண்டே இரண்டு வருடங்களுக்குள் இவ்வளவு பெரிய ஆக்கிரமிப்பு. அகிலாண்ட இஸ்லாமுக்கு ஆத்திரமூண்டது. துருக்கிக்கு விரோதமாகத் தான் கொண்டுள்ள மனப்பான்மையை உடனே மாற்றிக்கொள்ளாவிடில் பலகோடிப் பிரஜைகளின் சாபம் கிடைக்குமெனக் கிறிஸ்துவ சர்க்கார்களை சர்வதேச முஸ்லிம்கள் எச்சரித்தனர். அதோடு தமக்குதவி புரியும்படி முஸ்

லிம்கள் ஹஜ்ஜுக்களையும், பௌத்தர்களையும் அழைத்தனர். அவ்வழைப்பிற்கும் நல்ல பலன் கிடைத்தது.

முஸ்லிம்களிடையே கோபமும், உணர்ச்சியும் கொந்தளித்த போதிலும் செயலில் அவர்கள் ஒன்றும் செய்ய முடியவில்லை. எனவே ஐரோப்பிய வல்லரசுகளுக்குள்ளேயே சண்டை ஏற்பட்டு ஒன்றையொன்று பட்சித்து விடாதோ என்று எதிர்பார்த்துக் கொண்டிருக்கையில் 1914-ல் ஐரோப்பிய யுத்தம் ஆரம்பித்தது. பாரசீகத்தை ரஷியா, எகிப்தையும், இந்தியாவையும். பிரிட்டன், திரிபோலியை (லிபியாவை) இத்தாலி, அல்ஜீரியாவையும், மொராக்கோவையும், ட்யூனிஸியாவையும், பிரான்ஸ், மற்றதை பல்கேரியா, மற்றதை ஸ்பெயின்—இவ்விதமாக முஸ்லிம் உலகை ஆக்கிரமித்துக்கொண்ட கிறிஸ்துவ உலகில் ஜெர்மனி மாத்திரம் தான் இஸ்லாத்தைப் பிரமாதமாகத் தீண்ட வில்லை. ஜெர்மன் கெய்ஸரின் மோகன வலையில் துருக்கி சுல்தான் கலீபா அப்துல் ஹமீது சிக்கிக்கொண்டார். கெய்ஸரின் தூண்டுதல்படி ஜீஹாத் என்ற புண்ணிய போரை இஸ்லாமிய நாடுகளை ஆக்ரமித்திருக்கும் நேசதேசங்கள் மீது ஆரம்பிக்கும்படி ஆங்காங்குள்ள முஸ்லிம் களுக்கு கலீபா என்ற ஹோதாவில் துருக்கி சுல்தான் ஸ்ரீமுகம் விடுத்தார்.

ஆனல் பிரிட்டிஷ் நேசதேச பிரித்தாளும் தந்திரம் உலகப் பிரசித்திபெற்றதல்லவா? எனவே நேசதேச ஆட்சிக்குட்பட்ட நாடுகளில் செல்வாக்குற்றிருந்த முஸ்லிம் தலைவர்கள் நேசதேசங் கள் மீது ஜீஹாத்தை நடத்தாததோடு துருக்கி ஜெர்மனியோடு சேர்ந்து கொண்டதையே கண்டித்தனர். துருக்கி சுல்தான் கலீபா அப்துல் ஹமீது விடுத்த ஜீஹாத் ஸ்ரீமுகத்தை ஜெர்மன் ஸ்ரீமுக மென வர்ணித்து, இது ஜீஹாத் அல்லவெனப் போதித்து ஆவே சம் பூண்ட முஸ்லிம் ஜனத்திரளைத் தாங்களாகவே சாந்தப்படுத்தி விட்டனர். அசல் துருக்கிக்கும், நேசதேசப் பிரதேசங்களுக்கும் வெளியிலுள்ள முஸ்லிம்களைப் பிரிட்டிஷ்—பிரெஞ்சு நாட்டினர் வஞ் சகமாகத் தம்பக்கம் சேர்த்துக்கொண்டனர். இதுமட்டிலுமல்ல. பொய் வாக்குத் தத்தங்களைக் கொடுத்து அரேபியர்களைக் கொண்டு துருக்கிக்கு விரோதமாக 1916 நவம்பரில் புரட்சி செய்யும்படியும் செய்து விட்டனர். ஆனல் யுத்த இறுதியில் சுதந் திர அரேபிய சாம்ராஜ்யத்தைக் காணமுடியாது அரேபியர்கள்—இலவுகாத்த கிளிபோல் பிரிட்டிஷ்—பிரெஞ்சுக்காரரிடம் ஏமாந்த

னர். துருக்கிக்குப் பதிலாக பிரிட்டிஷ் நேசதேசத்தினர் இப்போது அரேபிய நாடுகளுக்கு எஜமானராயினர். ஆனால் ஐரோப்பிய கிறிஸ்துவ சர்க்கார்களுக்கு எதிராக ஆரம்பிக்கப்பட்ட அகிலாண்ட இஸ்லாம் இயக்கம் இன்று ஆங்காங்கு பாகிஸ்தான் கோரிக்கையில் லயித்திருக்கிறது.

மேற்கண்ட சம்பவங்களிலிருந்து ஐரோப்பிய கிறிஸ்துவ சர்க்கார்களின் சூழ்ச்சிகளுக்கு முஸ்லிம் உலகம் எவ்விதம் இரையாகியதென்று நன்கு புலப்படும். இச் சூழ்ச்சிகளிலிருந்து தப்ப இளந்துருக்கியினர் என்ன செய்தனரென்ற விஷயம் கீழே விவரிக்கப்படும்.

நவீன துருக்கி:—துருக்கி சாம்ராஜ்யம் எவ்வளவு பெரியதென்பதையும், அதன் செல்வாக்கையும் பற்றி மேலே கூறியிருக்கின்றோம். பலவித சீர்கேடான முறைகளை அனுஷ்டித்து வந்ததால் அது 1920-ம் வருடத்திற்குள் நசித்து விட்டது. துருக்கிக்கு "ஐரோப்பாவின் நோயாளி" என்பது சரித்திரப் புகழ் வாய்ந்த பெயர். உள்நாட்டு அபிவிருத்தியைச் சிறிதும் கருதாது சுல்தான் கலீபா அப்துல் ஹமீது சதா அகிலாண்ட இஸ்லாம் இயக்கத்திற்காக காசை வாரி இறைத்துக் கொண்டிருந்தார். எனவே இளந்துருக்கியர் இயக்கமொன்று சுல்தானுக்கு விரோதமாக நீண்டகாலமாக வேலைசெய்துவரலாயிற்று. கடந்த உலக மகா யுத்தத்தின்போது வெளிநாட்டு முஸ்லிம்கள் துருக்கி சுல்தானுக்கு சகாயம் செய்யாததோடு மேற்கொண்டு உபத்திரவத்தையும் விளைவித்ததன் பயனாக இளந்துருக்கியர் சுல்தான் மீது முன்னிலும் அதிகமாக துவேஷப்படலாயினர். தம் நாடுதான் பெரிதேயன்றி அகிலாண்ட இஸ்லாம் இயக்கம் துருக்கியின் காசுக்கு வீண் செலவென்பதையுமுணர்ந்தனர். எனவே இளைஞர் இயக்கம்—துருக்கி தேசிய இயக்கம்—நாளொருமேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்தது. யுத்தத்தின்போது சாதாரணப் போர்வீரராயிருந்த கமால் பாஷா இவ்வியக்கத்திற்குத் தலைவரானார். பிறகு படைத்தலைவரானார். பிரிட்டிஷ் நேசதேசத்தினருக்கு அச்சமுண்டாயிற்று. கமால் பாஷா ஓர் மாபெரும் அரசியல் நிபுணர். அவரது தலைமையில் 3-11-1922-ல் துருக்கியில் ஓர் பெரும் இராணுவப்புரட்சி நடந்தது. சுல்தான் கலீபா அப்துல் ஹமீது சிம்மாசனத்தினின்றும் தூரத்தப்பட்

டார். அன்றே அவர் ஓர் பிரிட்டிஷ் யுத்தக் கப்பலிலேறி துருக்கியை விட்டு ஓடி விட்டார்.

இவ்விதமாக துருக்கியும் ஓர் குடியரசு நாடாகியது. கமால் பாஷா அதன் முதலாவது தலைவரானர். அவரின் ஆக்ஷியில் அநேக சீர்திருத்தங்களேற்பட்டன. சமுதாயம், அரசியல், பொருளாதாரம் ஆகிய சகல துறைகளும் நவீன முறையில் திருத்தியமைக்கப்பட்டன. இஸ்லாமிய மாதர்கள் வீட்டை விட்டு வெளிவருவதில்லை. வந்தாலும் தலை முதல் பாதம் வரை நீண்ட அங்கிகளால் மூடிக்கொண்டுதான் வருவர். இதனுல் திருடர்கள் மலிந்து தப்பிவந்தனர். கமால் பாஷா இந்த "கோஷா" பழக்கத்தை முதன் முதலாக ஒழித்தார். தாடி வைத்திருப்பவர்களுக்கு சர்க்காரில் வேலையில்லையென்முர். வெள்ளிக் கிழமைக்குப் பதிலாக ஞாயிற்றுக் கிழமைகளில் விடுமுறை அனுஷ்டிக்க வேண்டுமென உத்தரவிட்டார். வலது புறத்திலிருந்து இடது புறத்தை நோக்கி எழுதும் பழக்கத்தை மாற்றியதுடன் ரோமன் எழுத்துக்களையே துருக்கிய பாஷையில் உபயோகப்படுத்தச் செய்தார். எனினும் அவர்களும் விசுவாசமுள்ள முஸ்லிம்களாகவே திகழ்கின்றனர். கமால் பாஷா கட்டாயக் கல்வியையும், இராணுவ சேவையையும் ஆண்களுக்கும் பெண்களுக்கும் ஏற்படுத்தினர். அதன் பயனக "ஐரோப்பாவின் நோயாளி" என்ற பெயர் போய் துருக்கி "ஐரோப்பாவின் திலகம்" என்று சர்வ லோகத்தினராலும் போற்றப்படலாயிற்று.

இரண்டாவது உலக மகாயுத்தத்தில் கலந்து கொள்ளாது உலகில் உண்மையான நடுநிலைமையாய் நின்ற சுதந்திர நாடு துருக்கி ஒன்றுதான். இதிலிருந்தே நவீன துருக்கியின் மகாத்மியம் நன்கு விளங்கும். நவீன துருக்கியை ஜெர்மனிக்கோ அல்லது ரஷியாவுக்கோ ஒப்பிடுவதுமிகையாகாது.

---

## அத்தியாயம்—5

---

## பிரிட்டிஷ் நேசதேசங்கள்

[இதில் தென் ஐர்லந்து சுதந்திரமடைந்தது எப்படி—பிரிட்டிஷாருக்குள்ள இடையூறுகள்—நேசதேசங்கள் என்றால் எவை. போன்ற தகவல்கள் அடங்கியுள்ளன.]

## ஐர்லந்து பிரச்சினை

"சொல்வது சுலபம். ஆனால் செய்வது கஷ்டம். கலியாணம் செய்து பார்த்தால் தெரியும். குடும்பத்தை நடத்திப் பார்த்தால் தெரியும்". என்று உலகோர் சகஜமாகச் சொல்லிக் கொள்வதுண்டு. இதே இப்படியாயின் இனி ஓர் ஊரைக் கட்டியாளுவதென்றால் லேசான காரியமா? ஓர் ஊரைக் கட்டியாளுவதே இங்ஙனமாயின் இனி உலகைக் கட்டியாளுவது சாதாரண விஷயமாவெனக் கேட்கின்றோம்.

உலகில் பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தில் 1939-ம் வருடம் வரை சூரியன் அஸ்தமிப்பதில்லை. இலங்காபுரி மீது சூரியன் செல்வதில்லையென்றும், ஏனெனில் சூரியனுக்கு இராவணனிடத்தில் அவ்வளவு பயமென்றும் புராணம் கூறுகிறது.

ஆனால் பிரிட்டிஷ் மன்னரிடமுள்ள பிரியத்தால்தான் சூரியன் இந்த சாம்ராஜ்யத்தில் அஸ்தமிக்காதிருந்ததென யாரும் நினைத்துவிடவேண்டாம். பிரிட்டிஷ் சாம்ராஜ்யம் அவ்வளவு பரந்து வியாபித்திருந்ததால் அதில் சூரியன் ஒரு மூலையில் இல்லாவிட்டாலும் மற்றோர் மூலையிலாவது பிரகாசித்துக்கொண்டிருக்குமென்பதுதான் இதன் கருத்து.

பிரிட்டிஷ் சாம்ராஜ்யம் அவ்வளவு பெரியது. அதற்கடுத்தபடி பெரிய சாம்ராஜ்யங்கள் முறையே அமெரிக்கா, பிரான்ஸ், ஹாலந்து ஆகியவைகளாகும். ஜெர்மனிக்கும், இத்தாலிக்கும் ஆசியாவில் எவ்வித ஆதிக்கமுமில்லை. ஆசியாவில் ஆதிக்கம் கொண்டிருந்த மேனாடுகளில் பிரிட்டன், பிரான்ஸ், ஹாலந்து, அமெரிக்கா ஆகிய நான்குந்தான் முக்கியமானவை. ஜப்பான், சீனா, தாய்லந்து, ஆப்கானிஸ்தானம், ஈரான், சௌதி அரேபியா ஆகிய ஆறே ஆறு நாடுகள்தான் ஆசியாவில் சுதந்திர நாடுகளாயிருப்பவை. அதுவும் ஜப்பான் ஒன்றைத்தவிர மற்ற ஐந்தும் பெயரளவில்தான் சுதந்திர நாடுகள். ஏனைய ஆசிய நாடுகளனைத்தும் பிரஸ்தாப மேனாட்டினருக்கு அடிமைகள்தான்.

ஆங்கிலோ, அமெரிக்க, டச்சு, பிரஞ்சு நாட்டினர் இந்தியா, மலேயா, இந்தோனேஷியத் தீவுகள், இந்தோ சீனா, ஹாங்காங், ஷேங்காய் சர்வதேசப் பிரதேசம், பிலிப்பைன் தீவுகள், ஆஸ்திரேலியா போன்ற சகல பஸிபிக் பிரதேசங்களையும் அடிமைப்படுத்திச் சுரண்டி வந்த தோடன்றி சீனா

விலும் வியாபாரிகளைப் போலவும், பாதிரிமார்களைப் போலவும், யாத்திரீகர்களைப் போலவும் நுழைந்து கொண்டு ஜப்பானுக்குத் தலைமேல் தொங்கும் கற்களைப்போல் பேராபத்தை விளைவித்து வந்தனர். ஜப்பான் இவ்வாபத்தினின்றும் நீங்கும் பொருட்டு, சீனாவிலுள்ள மேனாட்டுச் செல்வாக்கைப் போக்க எவ்வளவோ சமாதானமான முறைகளைக் கையாண்டும் அவையனைத்தும் சீனக் குடியரசுத் தலைவரான சியாங்கை ஷேக்கிடம் செவிடன் காதில் சங்கூதிய கதைக்கொப்பாயின. மேலும் ஆங்கிலோ—அமெரிக்கரின் பேச்சைக் கேட்டுக்கொண்டு சியாங்கைஷேக்கோஷ்டியினர் சதா ஜப்பானை அலட்சியம் செய்து வந்ததோடன்றி 7-7-1937-ல் பெக்கிங் என்ற ஸ்தலத்திற்கருகில் மார்க்கோ போலோ என்னுமிடத்தில் ஜப்பானியருக்கு ஒரு விபத்தையுமுண்டாக்கி விட்டனர். அன்று ஆரம்பித்த சீனா-ஜப்பான் யுத்தம் 1945 வரையும் முடியவில்லை. இதற்குள் வட சீனாவில் ஜப்பான் வாங் செங் வே தலைமையில் நாங்கிங் சீன தேசிய சர்க்காரை ஸ்தாபித்து விட்டது.

மேனாட்டினர் சீன-ஜப்பான் யுத்தத்தில் பகிரங்கமாகக் கலந்து கொள்ள முடியவில்லை. ஏனெனில் அங்ஙனமாயின் ஜெர்மனியும், இத்தாலியும் தம்மீது பாய்ந்துவிடுமென்ற பயம். குற்றமுள்ள நெஞ்சம் குறுகுறுக்கும், குறும்பியுள்ள காது தினவெடுக்கும். வெர்சயில்ஸ் உடன்படிக்கையின் மூலம் ஜெர்மனிக்குத் தாம் செய்திருக்கும் அநீதங்களுக்காக ஹிட்லர் கட்டாயம் தம்மை பழிவாங்காது விடாரென்று இவைகள் நன்கறிந்திருந்தன. என்றாலும் ஆசியாவில் சீனாவிற்கு ரகசியமாகவாவது உதவி செய்யாவிடில் தமக்காகப்போராடும் சீனர்கள் தோல்வியுறுவதோடன்றி, அங்கு தமக்கு இருக்கும் செல்வாக்கும் தொலைந்துவிடும். எனவே இருதலைக்கொள்ளி எறும்பு போலான பிரிட்டிஷ் நேசதேசத்தினர் ஆசியாவில் ஜப்பானுக்கு விரோதமாக சீனாவிற்கு ரகசியமாக ஆயுத—பொருளாதார உதவிசெய்தும், ஐரோப்பாவில் இனி ஜெர்மனி எக்நாட்டையாவது ஆக்ரமித்தால் அதன்மீது உடனே தொடுப்போம் யுத்தமென்று கூறியுமே 1939-ம் வருடம் ஆகஸ்ட் மாதம் முடியும் வரைக் காலத்தைக் கடத்திவந்தனர். இதற்கிடையில் சிறிது ஆயுத பலத்தையும் சேகரித்துக்கொண்டனர்.

இங்கிலந்து, ஸ்காட்லந்து, ஐர்லந்து ஆகிய மூன்றும் சேர்ந்ததே கிரேட் பிரிட்டன். பிரிட்டிஷ் சாம்ராஜ்யத் தலை நகராகிய லண்டன் இங்கிலாந்தில் இருக்கிறது. ஸ்காட்லந்தையும், ஐர்லந்தையும் இங்கிலந்து போர்கள் பல புரிந்தே தன்னோடு இணைத்துக்கொண்டது. இங்கிலந்தும், ஸ்காட்லந்தும் ஒரே தீவாகும். ஆனால் ஐர்லந்து தனித்தீவாகும். ஐரிஷ் ஜனங்களுக்கும், மற்ற பிரிட்டிஷாருக்கும் அதிக வித்தியாசமுண்டு. முன்னவர்கள் பெரும்பாலும் கத்தோலிக்க கிறிஸ்துவர்கள். பின்னவர் பெரும்பாலும் ப்ரோட்டஸ்டண்ட் கிறிஸ்துவர்கள். 700—800 வருடங்களாகப் போராடி இறுதியாக 1800-ம் வருடம் பிரிட்டன் ஐர்லந்தை நிரந்தரமாக அடிமைப்படுத்திக் கொண்டுவிட்டதெனினும், அதன் பிறகும் ஐர்லந்தினர் சுதந்திரம் வேண்டுமென்று பலகாலமாக போராடிவந்தனர். முதலாவது உலகமகா யுத்தத்தின்போது அப்போராட்டம் தீவிரமடைந்தது. பயங்கர இயக்கத்தில் கைதேர்ந்தவர்கள் ஐரிஷ்காரர்கள். இவ்வியக்கத்திற்கு தலைவர் ஈமன் திவேலரா.

பிரிட்டிஷாருக்கு ஐர்லந்திலும், இங்கிலந்திலும் திவேலரா இயக்கத்தினர் சொல்லொணாத் தொந்தரவுகளைக் கொடுத்து வந்தனர். கட்டிடங்கள் தீக்கிரையாயின. பிரிட்டிஷார் கொலை செய்யப்பட்டனர். சர்க்கார் கட்டிடங்களில் தானாகவே குண்டுகள் வெடிக்கும். இத்தகைய பயங்கர இயக்கத்தை அடக்க பிரிட்டன் எவ்வளவோ முயற்சி செய்து பார்த்தும் பலனில்லை. எனவே ஐர்லந்தின் வட பாகத்தைத் தன் வசம் வைத்துக் கொண்டு தென் பாகத்திற்கு 1922-ல் டொமினியன் ஸ்டேட்டஸ் கொடுத்தது. அதன் பிரகாரம் தென்னயர்லந்து தற்காப்பிற்காக ஓர் சிறு படையை வைத்துக்கொள்ளலாம். தன் விஷயங்களைத் தானே நிர்வகித்துக் கொள்ளலாம். அதற்கு சொந்த பார்லிமெண்டும் அனுமதிக்கப்பட்டிருந்தது. தென்னயர்லந்திற்கு டப்ளின் தலை நகர். இனியும் பிரிட்டிஷார் வசமிருக்கும் வட ஐர்லந்திற்கு பெல்பாஸ்ட் தலை நகர்.

26-10-1922-ல் ஐரிஷ்காரர்கள் ஐர்லந்தைக் குடியரசு நாடெனப் பிரகடனப்படுத்தி, திவேலராவைத் தலைவராக்கிக் கொண்டனர். இதனால் பிரிட்டனுக்கும், ஐரிஷ் குடியரசிற்கும் எஜமான், தோட்டி என்ற உறவு அறவே இல்லாதொழிந்தது. திவேலராவின் தலைமையில் ஐரிஷ் குடியரசு அதிபலமடைந்தது.

கட்டாய இராணுவசேவை நடைமுறைக்குமேற்பட்டது. பிரிட்டன் ஒன்றும் செய்துகொள்ளமுடியாமற் போய்விட்டது. ஏதாவது செய்யவேண்டுமானால் இரண்டிற்குமிடையில் யுத்தந்தான். வட ஐர்லந்தையும் தன்னிடம் விட்டுவிடும்படி திவேலரா சர்க்கார் பிரிட்டனைக் கேட்டுக்கொண்டிருந்தது. ஆனால் பிரிட்டன் இனியுமா ஏமாறும்? எனவே மழுப்பிக்கொண்டிருந்தது.

இந்நிலைமையில் இன்றைய யுத்தம் ஆரம்பித்ததும் பிரிட்டன் வட ஐர்லந்தில் கட்டாய இராணுவசேவை சட்டத்தை அமுலுக்குக் கொண்டுவர ஆயத்தம் செய்தது. பிரிட்டன் அவ்விதம் செய்யுமாயின் ஐரிஷ் குடியரசு மௌனம் சாதித்துக்கொண்டிராதென திவேலரா ஒரு போடுபோட்டார். பிரிட்டன் பின்பேன் அங்கு கட்டாய இராணுவசேவை சட்டத்தைக் கொண்டுவர உத்தேசிக்கிறது? இன்று வரையும் வட ஐர்லந்துப் பிரச்னை தீர்ந்தபாடில்லை. பெல்பாஸ்ட்டிலும், சுற்றுப்புறங்களிலும், இங்கிலந்திலும் இன்றும்கூட பிரிட்டிஷாருக்கு எதிராக ஐரிஷ் குடியரசுப் படைகள் ரகசியமாக பயங்கர வேலைகளைக் கையாண்டு வருகின்றன. பிரிட்டனுக்கு இது ஓர் பெரும் கஷ்டம்தான் என்பதில் சந்தேகமில்லை.

இவ்விதமாகப் பிரிட்டிஷ் நேசதேசத்தினருக்கு மூலைமுடுக்குகளிலெல்லாம் பிடுங்கல்கள் இருந்து வந்ததால் "பல மரம் கண்ட தச்சன் ஒரு மரம் கூட வெட்டமாட்டான்" என்ற மாதிரி அவைகள் 1943 வரை எந்த ஒரு குறிப்பிட்ட போர்முனையிலும் வெற்றிகரமாகப் போர் புரிய வசதியில்லாதுபோயிற்று.

ஆனால் ஜெர்மனிக்கும், இத்தாலிக்கும் வேறு பிடுங்கல்கள் இல்லாததால் அவைகள் ஒரே இடத்தில் கருத்தைச் செலுத்தி 1943 வரை ஊக்கமாகப் போர்புரியும் வலிமைபெற்றிருந்தன. இதற்கிடையில் இந்தியா, பர்மா, இலங்கை, பிலிப்பைன் தீவுகள் போன்ற சகல கிழக்காசிய நாடுகளிலும், பாலஸ்தீனம் போன்ற மேற்காசிய நாடுகளிலும் மேனாட்டு ஆக்ஷிக்கு எதிராக சுதந்திர இயக்கங்கள் வலுத்து வந்தன. அதனாலும் பிரிட்டிஷ் நேசதேசத்தினரின் |பலம் அபரிமிதமாய்க் குறைவாக இருந்தது. ஆனால் இது அச்சு நாடுகளுக்குச் சாதகமாக முடிந்தது.

## பிரிட்டிஷ் நேசதேசங்கள்

சரித்திர சம்பந்தமான ஓர் விஷயத்தைக் கூறப்புகின் அது சாதாரண காரிமல்ல. ஏனெனில் ஒரு விஷயத்தைப் பிரஸ்தாபிக்க வேண்டுமாயின் அதற்கு அனந்தங் கோடி தொடர்புகள் இருக்கும். அவ்வனைத்தையும் கூறவேண்டுமாயின் விஷயம் வளர்ந்துகொண்டே போய்விடுமென்பது ஒருபுரம். சரித்திரத்தில் அதிக பிரியமில்லாதவர்களுக்கு அதனுல் சலிப்பேற்படுமென்பது மற்ருேர்புறம். எனவே ஈண்டு நேசதேசங்களைப் பற்றி சுருக்கமாகவே கூறுவோம். நேசதேசங்களென்ருல் முக்கியமாக பிரிட்டன், பிரான்ஸ், அமெரிக்கா, ஹாலந்து ஆகிய நான்கு நாடுகளையே குறிக்கும். "மற்றவை சில்லுவண்டிகள்."

முதலில் பிரிட்டனைக் கவனிப்போம். அதில் என்னென்னவோ பலபட்டறைகள் குடியேறின. விரட்டப்பட்டன. போர் புரிந்தன. அதன் மீது படையெடுத்துக் குடியேறிய ஒவ்வொருவரும் அதற்குப் பலவிதப் பெயர்களைக் கொடுத்திருந்தனர். ஸ்காட்லந்து, இங்கிலந்து, வேல்ஸ், ஐர்லந்து ஆகிய பலவும் இருந்தன. அங்கு பல ஜாதியார் இருந்தனர். ஒருவருக்கொருவர் சதா சண்டைபோட்டுக் கொண்டனர்.

நாளாவட்டத்தில் அப்பிரதேசங்கள் அனைத்தும் ஆங்கிலோ சாக்ஸனியர் என்ற ஒரே வகுப்பினரின் ஆக்ஷியின் கீழ் வந்தது. இவர்கள் அப்பிரதேசங்கள் அனைத்தையும் ஒன்றுபடுத்தி தம்மையும் பிரிட்டிஷார் என்ற ஒரே சமூகத்தினரெனப் பிரகடனப் படுத்திக்கொண்டனர். கி. பி. 1660-ம் வருடம் மே மாதம் 8-ம் தேதி வரை பிரிட்டனில் ஜாதிச்சண்டை, சமயச்சண்டை, உள்நாட்டுச்சண்டை, ராஜா-பிரஜை சண்டை எல்லாம் நடந்தன.

மேல்கண்ட தேதியில் இரண்டாம் சார்லஸ் பிரிட்டிஷாரின் பொம்மை ராஜாவாக நியமிக்கப்பட்டான். பார்லிமெண்டு உருவகப்படுத்தும் சட்டதிட்டங்களில் கையெழுத்துப் போடவேண்டியதுதான் அந்த ராஜாவுக்கு வேலை. பிரிட்டிஷ் ராஜாக்களின் நிலைமை இன்று வரையும் அப்படியேதான் இருந்து வருகிறது. உள்நாட்டு விவகாரம் இவ்விதம் ஒரு வழியாக முடிவடைந்ததும் பிரிட்டிஷார் வெளிநாட்டு விஷயங்களில் தலையிடலாயினர். வெளி நாடுகளில் வியாபாரம் செய்யவும், மதத்தைப் பரப்பவும், குடியேற்றநாடுகளைப் பிடிக்கவுமாக இதர சமூகத்தினரை அடி

மைப்படுத்தவும் தலைப்பட்டனர். ரஷியா, பிரஷ்யா, ஹாலந்து, போர்த்துகல், ஸ்பெயின், இத்தாலி, பிரான்ஸ், பிரிட்டன், துருக்கி ஆகிய இந்தப் பாழாய்ப்போன ஒன்பது ஐரோப்பிய நாடுகளுந்தான் சதா உலகில் ஓய்வில்லா சண்டைகளுக்கு ஆணி வேர்களாக இருந்து வந்திருக்கின்றன. உதாரணமாக இவை களில் சில வியாபாரம் செய்து பஞ்சம் பிழைக்க இந்தியாவுக்கு வந்தன. வந்தவிடத்தில் நான் பெரிது நீ பெரிதென்று ஒன் றுக்கொன்று சண்டை போட்டுக்கொண்டன. இதேபோல் ஐரோப்பியர்கள் அமெரிக்கா, ஆப்பிரிக்கா, ஆஸ்திரேலியா, துரு வங்கள் ஆகிய உலகின் சந்து பொந்துகளிலெல்லாம் நுழைந் தனர். போனபோன இடங்களிலெல்லாம் சண்டை போட்டுக் கொண்டனர். அதனால் ஐரோப்பாவிலும் கலகம். ஐரோப்பா வில் கலகமுண்டானால் உலகமெங்கும் கலகம். நண்டு கொழுத்தால் வளையிலிருக்காதாம். அதேபோல் வெளி நாடுகளில் அதிதனம் தேடிய பிரான்ஸ், பிரிட்டன் போன்ற நாடுகள் ஐரோப்பாவை விட்டு வெளியில் செல்லாதிருக்கும் பிரஷ்யா போன்ற நாடுகள் மீது வம்புச் சண்டைக்குப் போனதுமுண்டு. அல்லது இவை களின் செல்வாக்கைக் கண்டு வாழப்பொருந்தாது அவைகள் இவைகளின்மேல் போர்தொடுத்ததுமுண்டு. இவ்விதம் ஓர் மூலையில் இல்லாவிட்டால் இன்னொரு மூலையிலாவது நாள்தவ றாது கடந்த பல நூற்றுண்டுகளாகவும் யுத்தம் நடந்துகொண்டே வருவதற்குக் காரணம் இந்த ஐரோப்பிய நாடுகள்தான்.

இங்ஙனமிருக்க பிரிட்டன் மற்ற ஐரோப்பிய நாடுகளை ஒருவாறாக மட்டந் தட்டிக்கொண்டு தலைதூக்கிவிட்டது. ஆனால் இதைக்கண்டு ஸ்பெயின், ஹாலந்து, போர்த்துகல், பிரான்ஸ் ஆகிய நான்கும் பிரிட்டனை ஒருகைபார்க்க உத்தேசித்துக் கொண்டிருந்தன. இச்சமயத்தில் வட அமெரிக்காவில் குடி யேறியிருந்த பிரிட்டிஷார்களில் ஒருபகுதியார் பிரிட்டிஷ் பார் லிமெண்டு அதிகாரத்தை ஏற்றுக்கொள்ள மறுத்து சுதந்திரம் கோரினர். பிரிட்டன் மீது சினங்கொண்டிருந்த மேல்கண்ட நாடுகள் அந்த அமெரிக்கப் பிரிட்டிஷாருக்கு "சாம்பிராணி தூபம் போட்டு சாமிவரவழைத்துக்கொண்டிருந்தன." அதன் பயனாக பிரிட்டிஷாருக்கும், அமெரிக்க பிரிட்டிஷாருக்குமிடை யில் 1773-ல் யுத்தமாரம்பித்து 1783-ல் முடிந்தது. இதில் பிரிட்டன் படுதோல்வி யடைந்ததன் பயனாக அமெரிக்கக்

குடியரசு (U.S.A.) 3-9-1783-ல் ஜனித்தது. இதனால் பிரிட்டன் ஏறக்குறைய 37 லட்சம் சதுர மைல் விஸ்தீரணமுள்ள குடியேற்ற நாட்டை இழந்தது. ஆயிரக்கணக்கான மைல்களுக்கப்பாலுள்ள ஸ்பெயின் பிலிப்பைன் தீவுகளை அடிமைப்படுத்தி ஆண்டுவந்தது. ஆனால் 1898-ல் அமெரிக்கா (U.S.A.) ஸ்பெயினோடு போரிட்டு பிலிப்பைன் தீவுகளைப் பிடுங்கிக்கொண்டது.

நிற்க பிரான்ஸின் கதையைக்கவனிப்போம். பிரிட்டனுக்கு விரோதமாகப் போராடி வந்த பிரான்ஸில் 1789-ல் 16-வது லூயி அரசனாயிருந்தான். அவனது எதேச்சாதிகார முடியாட்சியை எதிர்த்து உலகையே அதன் பின் கிடுகலக்கிய நெப்போலியன் போனபோர்ட்டின் தலைமையில் 28-4-1789-ல் புரட்சி ஆரம்பமாயிற்று. இப்புரட்சி நீண்டகாலமாக நடந்து வந்தது. 20-6-1791-ல் பிரஞ்சு மன்னன் 16-வது லூயி யாருக்கும் தெரியாமல் பாரிஸைவிட்டு தப்பித்துக்கொண்டோடி விட்டபோதிலும், புரட்சிக்காரர்கள் அவனை அடுத்த நாளே தேடிப்பிடித்துக் கொண்டு வந்து காவலில் வைத்தனர். பிறகு அரச வம்சத்தினர் அனைவரையும் 21-8-1792-ல் கைது செய்து, பிரான்ஸில் முடியாட்சியை விலக்கி, அதை ஓர் குடியரசெனப் புரட்சிக்காரர்கள் பிரகடனப் படுத்திவிட்டனர். 21-9-1793-ல் 16-வது லூயி மன்னன் புரட்சிக்காரர்களால் சிரச்சேதம் செய்யப்பட்டான். அன்று முதல் பிரான்ஸில் பயங்கர இயக்கம் தாண்டவமாடி வந்தது. பிரிட்டனும் சமயத்தோடு சமயமாய்த் தனது வஞ்சத்தைத் தீர்த்துக் கொள்வதற்காக வேண்டி, இதேசமயத்தில் பிரான்ஸைத் தாக்கிவந்தது. ஆனால், நெப்போலியன் அடைந்தது வெற்றியே தவிற வேறில்லை. ஹாலந்து நெப்போலியன் சார்பில் போரிட்டது. பிரஷ்யாவும் நெப்போலியனுக்கு எதிராக நடக்கவில்லை. ஆனால் எதிராக நடந்த பெல்ஜியம், இத்தாலி, துருக்கி, ஸ்விட்ஸர்லந்து, ரஷியா, எகிப்து, டென்மார்க், சிரியா, மால்டா ஆகிய சகல நாடுகளையும் நெப்போலியன் பிடித்துக்கொண்டான். அவன் பிடிபட்ட நாடுகள்—ஐரோப்பா—முழுவதிற்குமே ஏகச்சக்ராதிபதியாக 2-12-1804-ல் பாரிஸில் போப்பரசரால் முடிசூட்டப்பட்டான். பிறகு 1812-ம் வருடம் முடியும்வரை அவனுக்கு உக்கிர தசையிருந்து வந்தது.

ஆனால் 1814-ல் பிரிட்டிஷாரால் நெப்போலியன் சிறைபிடிக்கப்பட்டான். எல்பா தீவிலிருந்து தப்பிவந்து பிரிட்டனு

டன் திரும்பவும் சண்டை செய்தான். எனினும் 15-7-1815-ல் மீண்டும் பிரிட்டிஷாரால் பிடிக்கப்பட்டு செயிண்ட் ஹெலினா தீவில் ஆயுள் பரியந்தம் சிறை வைக்கப்பட்டிருந்தான். அங்கேயே 1821-ல் நெப்போலியன் இறந்தான். அமெரிக்காவை இழந்த பிரிட்டனுக்கு வேறு எங்காவது குடியேற்ற நாடு தேவைப்பட்டது. எனவே இந்தியாவின் மீது பிரிட்டனுக்கிருந்த பேராசை தீவிரமடைந்தது. ஆனால் இதற்கும் பிரான்ஸ் எதிரியாக இருந்தது. இந்தியாவில் யார் சட்டாம் பிள்ளையாக இருப்பதென்ற கர்வத்தால்தான் பிரிட்டனும், பிரான்ஸும் இவ்விதம் இடைவிடாது போராடின. நெப்போலியனுக்கு பிறகு பிரிட்டிஷார் 18-வது லூயியைப் பிரஞ்சு மன்னனாகச் செய்தனர். எனவே பிரான்ஸின் எதிர்ப்பின்றி இந்தியா முழுவதையும் பிரிட்டிஷார் இச்சமயத்தில் தம்வசப்படுத்திக்கொள்ள முடிந்தது. 16-9-1824-ல் 18-வது லூயி மாளவே 10-வது சார்லஸ் பிரான்ஸின் அரசனானான். 30-7-1830-ல் திரும்பவும் பிரான்ஸில் புரட்சி தாண்டவமாடியது. 10-வது சார்லஸ் மன்னன் ஓடிவிட்டான். பிறகு 9-8-1830-ல் லூயி பிலிப் அரசனானான்.

நெப்போலியன் பிடித்த நாடுகளிலெல்லாம் தனது குமாரர்களையும், சகோதரர்களையும் அரசர்களாக நியமித்திருந்தான். ஆனால் அவன் தோற்கடிக்கப்பட்டதும் இந்நிலைமைக்கு ஆபத்து வந்தது. அவனது இரண்டாவது மனைவியான மேரியா லூயிஸாவுக்குப்பிறந்த 2-வது நெப்போலியன் இத்தாலி மன்னனாயிருந்து 21-ம் வயதில் 1832-ல் இறந்துவிட்டான்.

நெப்போலியனின் சகோதரன் லூயி போனபோர்ட் ஹாலந்திற்கு அரசனாக்கப்பட்டிருந்தான். அவனுக்குப் பிறந்த மகனுக்கு 3-வது நெப்போலியன் என்று பெயர். இந்த 3-வது நெப்போலியன் பிரஞ்சு சிம்மாதனத்திற்கு வாரிசு கொண்டாடினான். 1836-ல் பிரான்ஸில் ஒரு புரட்சிக்கும் எற்பாடு செய்தான். ஆனால் கைது செய்து அமெரிக்காவுக்கு நாடுகடத்தப்பட்டான். 1840-ல் திரும்பவும் வந்து பிரான்ஸில் தனது இச்சையை நிறைவேற்ற முயற்சித்தான். ஆனால் இம்முறை பிடிபட்டு ஆயுள் காலச் சிறைத்தண்டனை விதிக்கப்பட்டானெனினும், 6-வது வருடத்தில் தப்பித்துக்கொண்டு லண்டனுக்கு ஓடிவிட்டான். 1848-ல் பிரான்ஸில் திரும்பவும் புரட்சி எற்பட்டது. 3-வது நெப்போலியன் பிரான்ஸிற்குள் வந்தான். லூயி பிலிப் லண்ட

னுக்கு ஓடிவிட்டான். 10-4-1848-ல் பிரான்ஸ் திரும்பவும் குடியரசு நாடெனப் பிரகடனப்படுத்தப்பட்டது. 3-வது நெப்போலியன் 20-12-1848-ல் பிரஞ்சுக் குடியரசின் தலைவனாகத் தேர்ந்தெடுக்கப்பட்டான். பிறகு 2-12-1852-ல் பிரஞ்சு சக்ரவர்த்தியானான்.

3-வது நெப்போலியன் காலத்தில்தான் பிரான்ஸும், பிரிட்டனும் நண்ப நாடுகளாயின. இதற்குக் காரணம் ரஷியா ஐரோப்பாவிற்குள் மேற்கு நோக்கி ஆக்கிரமிப்பை நடத்தி வந்ததும், பிரஷ்ய பிஸ்மார்க் இளவரசர் ஐரோப்பாவில் ஜெர்மன் சாம்ராஜ்யத்தை ஸ்தாபித்ததும்தான். எனவே பிரிட்டனும், பிரான்ஸும் ரஷிய—பிரஷ்ய வளர்ச்சியைத் தடுக்க ஒன்று சேரவேண்டியதாயிற்று. இதற்கிடையில் இந்தியாவில் பிரிட்டனே எஜமானாக இருக்கலாமென 3-வது நெப்போலியன் ஒப்புக்கொண்டுவிட்டான். இதுமுதல் பிரிட்டனும், பிரான்ஸும் நேசதேசங்களாயின. 23-10-1852-ல் ரஷியாவுக்கும், துருக்கிக்குமிடையில் கிரிமிய யுத்தமாரம்பித்தது. பிரிட்டனும், பிரான்ஸும் துருக்கியுடன் சேர்ந்து ரஷியாவை மட்டந்தட்டின.

பிறகு பிரஷ்ய பிஸ்மார்க் ஸ்தாபித்து வந்த ஜெர்மன் ஐக்கிய நாடுகளை எதிரி நாடுகளென பிரிட்டனும், பிரான்ஸும் 15-6-1861-ல் பிரகடனப்படுத்தின. 3-வது நெப்போலியன் 19-7-1870-ல் பிரஷ்யாமீது யுத்தப் பிரகடனம் செய்தான். ஆயிரக்கணக்கான துருப்புகளையும் பறிகொடுத்து நெப்போலியனும் பிஸ்மார்க்கிடம் சரணாகதியடைந்தான். பிரஷ்யர்கள் பாரிஸ் நகரை முற்றுகையிட்டு பிரான்ஸைத் தோற்கடித்துவிட்டனர். நெப்போலியன் தப்பிக்கொண்டு இங்கிலாந்துக்கு ஓடிவிட்டான். தோல்வியுற்ற பிரான்ஸில் திரும்பவும் புரட்சி ஏற்பட்டது. பிரஞ்சுப் பொதுவுடமைக்காரர்கள் சர்க்காரைக் கைப்பற்ற முயற்சித்தனர். ஆனால் இதற்கிடையில் குடியரசு சர்க்கார் ஸ்தாபிக்கப்பட்டு, அத்துருப்புகள் வந்து பொதுவுடமைக்காரர்களை அடக்கிவிட்டன. 1871-ம் வருடத்திலிருந்து இன்றுவரையும் பிரான்சில் குடியரசே நிலவிவருகிறது. அதேபோல் 3-வது நெப்போலியன் காலத்திலிருந்தே பிரான்ஸும் பிரிட்டனும் நேசதேசங்களாய் இருந்து வருகின்றன.

குடியேற்ற நாடுகளைப் பிடித்து தனம் தேடுவதில் பிரிட்டன், பிரான்ஸ், அமெரிக்கா, ஹாலந்து ஆகிய நான்கும் ஒரே

கொள்கையுடையவை. எனவே அவைகள் நேசநாடுகளாயின. இவைகள் 1860-ம் வருடத்திலிருந்தே ரஷ்ய—பிரஷ்ய நாடுகளை நேர்முகமாகவோ அல்லது மறைமுகமாகவோ, தனித்தோ அல்லது ஏகோபித்தோ எதிர்த்தே வந்திருக்கின்றன. கடந்த உலக மகாயுத்தத்தின்போதும் இந்நான்கு பழம் பெருச்சாளிகளும் சேர்ந்தேதான் ஜெர்மனிக்கு எதிராகப் போராடின.

---




---

## அத்தியாயம்—6

## ஹிட்லர் ஆரம்பித்தார்

[இரண்டாவது உலக மகாயுத்தத்திற்குத் தூபதீப மேற்றி 1-9-1939-ல் ஆரம்பித்த ஜெர்மன், போலந்து போர்—ரஷியா போலந்தில் பிரவேசித்தது—ரஷியா ஏன் பின்லந்தின் மீது போர் தொடுத்தது—ருமேனியா ரஷியாவுடன் ஒப்பந்தம் செய்து கொண்டது போன்ற விஷயங்கள் இவ்வத்தியாயத்தில் சித்தரிக்கப்பட்டுள்ளன.]

### தோன்றி மறைந்த போலந்து

இன்றைய உலக மகா யுத்தம் மூண்டதற்குப் போலந்து தான் மூலகாரணம். எனவே இவ்வளவு முக்கியமான போலந்தைப் பற்றிச் சிறிது கூறுவது ஈண்டு மிகையாகாது. ஓர் காலத்தில் போலந்து ரஷியாவின் பிரதேசமாயிருந்தது. பிறகு தனி நாடாயிற்று. ஆனல் இதன் விதி என்றுமே ஆபத்தானது. உரலுக்கு ஒருபுறம் இடி. மத்தளத்திற்கு இருபுறமும் இடி. ஆனல் போலந்துக்கு எப்புறமும் இடி. மேற்கில் பிரஷ்யா, கிழக்கில் ரஷியா, தெற்கில் மாஜி ஆஸ்திரியா—ஹங்கேரி பலமிகுந்த வல்லரசுகளுக்கு நடுவில் சிக்கிய போலந்தும், உரலுக்கும் உலக்கைக்குமிடையில் சிக்கிய தானியமும் ஒன்று. ரஷியாவிடமிருந்து பிரிந்தபிறகு போலந்து பலமுறை பூகோளபடத்திலிருந்து விலக்கப்பட்டது. பிறகு உற்பத்திபாக்கப்பட்டது. இவ்விதமே சாவதும், பிறப்பதுமாயிருந்த போலக்கிடமிருந்து லிதுவேனியா, லேட்வியா, எஸ்டோனியா என்ற இடங்களும் பிரிந்து தனித்தனி குடியரசுகளாகிவிட்டன.

1918-ம் வருட வெர்செயில்ஸ் உடன்படிக்கைப்படி பிரஷ்யா மூன்ருகப் பிரிக்கப்பட்டு நடுப்பாகம் போலந்திற்குக் கொடுக்கப்பட்டது. பிரஷ்யாவை இவ்விதம் துண்டாக்கிய பிரதேசத்திற்கு "போலந்து நெடும் பாதை" என்று பெயர். இப்பிரிவினேயே இன்றைய யுத்தத்திற்கு மூலகாரணம். இது பிரஷ்யர்களேயும், போலந்தினர்களேயுமட்டுமின்றி பிரிட்டிஷாரையும் பாதிக்கிறது. சுருக்கக் கூறின் சர்வ ஐரோப்பாவையும் பாதிக்கிறது. ஏனெனில் 1914-ம்

வருடத்திற்கு முன்பு "போலந்து நெடும்பாதை" என்ற ஒன்றே கிடையாது. வெர்சயில்ஸ் உடன்படிக்கையின் எஜமானர்கள் போலன் போன்ற மேற்குப் பிரஷ்யாவின் பெரும்பாகத்தைப் பிடுங்கிப்போலந்துக்கு கொடுத்து விட்டதோடு, கிழக்குப் பிரஷ்யாவிற்கும், ஜெர்மனிக்குமிடையில் ஓர் நெடும்பாதையை ஏற்படுத்தி அதையும் போலந்திடம் கொடுத்து விட்டனர். இதனால் ஜெர்மனிக்கேற்பட்ட நஷ்டமொருபக்கமிருக்க, கிழக்கு பிரஷ்யா அதனிடமிருந்து துண்டிக்கப்பட்டு விட்டதுதான் இன்று ஆபத்தாக முடிந்தது. கிழக்கு பிரஷ்யாவையும், ஜெர்மனியையும் பிரிக்கும் நிலப்பரப்பிற்குத்தான் "போலந்து நெடும்பாதை" அல்லது "டேன்ஸிக் நெடும்பாதை" என்று பெயர்.

போலந்துக்கு இந்நெடும்பாதைக் கொடுக்கப்பட்டது எதற்கென்றால் அதற்கு நேரடியாகக் கடல் மார்க்கம் இருக்க வேண்டுமென்பதற்காகதான். அப்படி இருந்தால்தான் பிரிட்டனுக்கும், போலந்திற்குமிடையில் நேரடியான ஏற்றுமதி, இறக்குமதிகள் நடக்கும். இன்றேல் முடியாது. மேலும் வெர்சயில்ஸ் உடன்படிக்கை ஏற்பட்ட காலத்தில் போலந்து இந்த நெடும்பாதை தனக்குக்கிடைக்க வேண்டுமென உரிமைகொண்டாடிய போது பழைய சரித்திர சாட்சியங்களைப் புரட்டிக்காட்டிற்று.

அதன் பிரகாரம் 17-ம் நூற்றாண்டில் இன்று போலந்து நெடும் பாதை எனப்படும் பிரதேசமும், லிதுவேனியா, எஸ்டோனியா, லேட்வியா போன்ற பால்டிக் (வடகிழக்கு ஐரோப்பிய) நாடுகளும் போலந்துக்குச் சொந்தமாயிருந்தன. என்றாலும் 1772-லும், 1795-லும் ரஷியா, பிரஷ்யா, ஆஸ்திரிய—ஹங்கேரி ஆகிய நாடுகள் போலந்தை மாற்றி மாற்றி பங்கு போட்டுக்கொண்டன. அதன் பயனாக கழுதைபோல் பெருத்திருந்த போலந்து தேய்ந்து கட்டெறும்பின் உருவத்தையடைந்துவிட்டது. இதுவும் போதாதென ரஷியா 26-2-1832ல் மீந்திருந்த போலந்திலும் ஒரு பகுதியை தன்னோடு இணைத்துக் கொண்டது. என்றாலும் அதன் தேசாபிமானம் வளர்ந்து வந்தது. எனவே தனது பழைய பிரதேசமாகிய நெடும்பாதை தனக்குக் கிடைக்கவேண்டியது நியாயமென போலந்து பிடிவாதம் செய்தது.

ஜெர்மனியின் பலத்தை எவ்விதத்திலும் குறைக்கவேண்டுமெனக் கருதிய வெர்செயில்ஸ் உடன்படிக்கை சிருஷ்டி கர்த்தாக்களுக்கு போலந்தின் கோரிக்கை ஓர் வரப்பிரசாதம் போலாயிற்று. மேலும் போலந்தின் கோரிக்கையை அங்கீகரிப்பதன் மூலம் ரஷியாவை ஐரோப்பாவிற்குள் மேற்கு நோக்கி பாயாமல் தடுக்க முடியும் என்றும் கருதினர். எனவே போலந்துக்கு நெடும் பாதை கிடைத்து விட்டது.

ஆனல் இது சம்பந்தமாக ஜெர்மனியின் கருத்தென்னவென்றும் பார்ப்போம். அல்ஸாஸும், லோரெய்னும் பிரான்ஸிற்குக் கொடுக்கப்பட்டதை ஜெர்மனி மனதார ஒப்புக்கொண்டது. எப்படியெனில் அப்பிரதேசங்களில் வசித்த ஜனங்களிடம் ஓட்டெடுக்கப்பட்டது. அவர்கள் பிரான்ஸுடன் சேர்ந்து கொள்ளவிரும்பினர். எனவே இவ்விரு பிரதேசங்களையும் மூச்சுப்பேச்சின்றி ஜெர்மனி பிரான்ஸிடம் கொடுத்துவிட்டது. ஆனல் இதேபோல் "போலந்து நெடும்பாதை" விஷயத்தில் நடைபெறவில்லை. டேன்ஸிக் நெடும்பாதையில் வசித்தவர்களில் 100-க்கு 70 ஜெர்மனியர்களாயிருந்துங்கூட அங்கு வசித்தவர்களின் அபிப்பிராயத்தைக் கேட்காமலேயே அப்பிரதேசம் போலந்துக்குக் கொடுக்கப்பட்டு விட்டது. வெர்சயில்ஸ் ஒப்பந்தத்தில் இது சம்பந்தமாகக் குறிப்பிடப் பட்டிருக்கும் நிபந்தனைகளை எந்த ஒரு ஜெர்மன் அரசியல்வாதியும் என்றுமே ஏற்றுக்கொள்ளவில்லை. தான் இழந்த மேற்குப் பிரஷ்ய பிரதேசத்தைத் திரும்பப் பெறுவதன் மூலம் கிழக்குப் பிரஷ்யாவை ஜெர்மனியுடன் ஒட்டவைக்க ஜெர்மனி முயற்சித்து வரும்போது, போலந்து தனக்குக் கிடைத்த நெடும்பாதையில் க்டீனியாவில் ஓர் பெருந்துறைமுகத்தை ஸ்தாபித்துக்கொண்டது. பேச்சுவார்த்தை நடத்துவதன் மூலம் "போலந்து நெடும்பாதை" தனக்குக் கிடைக்காதென ஹிட்லரும் நன்குணர்ந்துகொண்டார். ரஷியா தன் மீது படையெடுக்காதவாறும் செய்துகொண்டார்.

1939-ம் வருடம் செப்டம்பர் மாதம் முதல் தேதி அதிகாலையில் உலகமெங்கும் ஓர் பெரும் பரபரப்பு. "ஹிட்லர் சண்டை துவங்கிவிட்டார். ஹிட்லர் சண்டை துவங்கிவிட்டார். விசேஷ வெளியீடு 5 காசு." என்று பத்திரிகை விற்கும் பையன்கள் தெருக்களில் போட்ட ஓலம் கூச்சம் தெளிந்த பகிரங்கக் காதலர்களையும் திடுக்கிடச்செய்துவிட்டது. ஜெர்மன் துருப்புகள்

அன்று அதிகாலையில் போலந்திற்குள் பிரவேசித்துவிட்டன வென்ற செய்தி கொட்டை எழுத்துகளில் பத்திரிகைகளின் முதல் பக்கங்களில் பிரசுரிக்கப்பட்டிருந்தது.

எங்கும் ஒரே கொந்தளிப்பு. "பிரிட்டனும், பிரான்ஸும் ஜெர்மனி மீது யுத்தப் பிரகடனம் செய்யுமா அல்லது இனியும் செய்யாவா என்பதுதான் பேச்சு. ஐந்தடிகளிலும், காப்பிக்கடை களிலும், தெருக்களிலும், மூலை முடக்கு சந்து பொந்து சகல விடங்களிலும் யுத்தம், யுத்தமென்பதுதான் பேச்சும், நினைப்பும். வேறு வேலை செய்ய யாருக்கும் நிம்மதியில்லாது போயிற்று. உலகனைத்திலுமுள்ள ரேடியோக்களின் விசைமுட்கள் லண்டன் ஒலிபரப்பு நிலைய எல்லைக்குத் தள்ளப்பட்டன. பிரிட்டிஷ் மன்னரும், பிரெஞ்சுக் குடியரசுத் தலைவரும் ஜெர்மனிக்கு 24 மணி நேர இறுதி எச்சரிக்கைக் கொடுத்துவிட்டனர். இந்த 24 மணி நேரம் முடிவதற்குள் ஜெர்மனி தனது துருப்புகளைப் போலந்தி லிருந்து வாபீஸ் வாங்கிக்கொள்ளாவிடில் ஜெர்மனி மீது அவ் விரு நாடுகளும் போர் தொடங்குமென்பதே அவ்விறுதி எச்ச ரிக்கை.

இந்த உருட்டுமிரட்டலுக்கெல்லாம் ஹிட்லர் அஞ்சியதாகத் தோன்றவில்லை. அவர் வெர்சயில்ஸ் உடன்படிக்கையின் அநீ தங்களைத் திருத்தவேண்டியது தெய்வ சம்மதமென்றும், மேலும் மற்றோர் நாட்டிற்கும், தனக்குமிடையிலுள்ள விவகாரத்தைத் தீர்த்துக்கொள்ளும்போது பிரிட்டனும், பிரான்ஸும் அதில் குறுக்கிடுவது நேசதேசக் குறும்பென்றும், அவ்விதம் அவர்கள் குறுக்கிடுமுன்பே தாம் தாம் அடிமைப்படுத்தி வைத்திருக்கும் இந்தியாபோன்ற நாடுகளுக்கு நியாயம் வழங்கிவிட்டு வந்தால் ஒழுங்காயிருக்குமென்றும் தனது கட்சியை உலகிற்கெடுத் துரைத்தார். எனவே பிரிட்டனும், பிரான்ஸும் ஜெர்மனி மீது 3-9-1939-ம் தேதி யுத்தப்பிரகடனம் செய்தன.

யுத்தமாரம்பித்த ஒரு வாரத்திற்குள் அதாவது செப்டம்பர் மாதம் 7-ம் தேதி மாலை 5 மணி சுமாருக்கு ஜெர்மன் துருப்பு கள் போலந்தின் தலை நகராகிய வார்ஸாவையடைந்துவிட்டன. போலந்து சர்க்கார் ருமேனியாவிற்கு ஓட்டம் பிடித்தது. பாட் டிக்காலத்து போலந்து துருப்புகள் நவீன ஜெர்மன் இராணு வத்தை எதிர்த்துநிற்க முடியாமல் திணறிக்கொண்டிருக்கையில்

செப்டம்பர் மாதம் 17-ம் தேதி ரஷியத் துருப்புகள் போலந்திற்குள் பிரவேசித்து 18-ம் தேதியன்று, வார்ஸாவிற்குக் கிழக்கிலுள்ள பிரஸ்ட் லிட்டோவ்ஸ்க் என்னுமிடத்தில் ஜெர்மன் துருப்புகளைச் சந்தித்தன. இதன் மூலம் ரஷியா போலந்தில் தனக்குச் சொந்தமாயிருந்த பிரதேசத்தைப் பிடித்துக்கொண்டது.

ஜெர்மன் முற்றுகையிலிருந்து வார்ஸாவைக் கட்டிக்காத்துக் கொண்டிருந்த போலந்து துருப்புகள் செப்டம்பர்-மீ 27-ம் தேதி ஜெர்மனியிடம் சரணகதியடைந்தன. செப்டம்பர்-மீ 29-ம் தேதியன்று போலந்தில் ரஷிய-ஜெர்மன் எல்லை வரையறை செய்யப்பட்டது. இத்தோடு போலந்து யுத்தமும் முடிந்தது. போலந்தும் பூகோள படத்திலிருந்து மறுபடியும் அடியோடு மறைந்துவிட்டது.

## வம்புக்கார பின்லந்து

போலந்து யுத்தம் முடிவடைந்ததும் ரஷிய—பின்லந்துப் போர் ஆரம்பமாயிற்று. புராதன ரஷிய சாம்ராஜ்யம் மகா பெரியது. அதன் விஸ்தீரணம் சுமார் 82½ லட்சம் சதுரமைல்கள் என்று மதிப்பிடப்பட்டது. அது அசல் ரஷியாவும் போலந்தும், பின்லந்து, காக்கேஷியா, காஸ்பியப் பிரதேசம், மத்திய ஆசியா, சைபீரியா எனும் ஆறு பகுதிகளைக் கொண்டிருந்தது. பின் காலத்தில் போலந்து எவ்விதம் ரஷியாவிடமிருந்து பிரிந்து தனி நாடாயிற்றோ அதேபோல் பின்லந்தும் பிரிந்து தனி நாடாயிற்று. இவ்விதம் ரஷியாவிடமிருந்து விலகிய பின்லந்துக்கு மேற்கில் ஸ்வீடனும், வடக்கில் நார்வேயும், ரஷியாவும், கிழக்கில் ரஷியாவும், தெற்கில் பால்டிக் கடலும் எல்லைகளாயிருந்தன. ரஷியாவினிடமிருந்து பிரிந்தபோது அதற்கும் ஆர்க்டிக் மகாசமுத்திரத்திற்கும் தொடர்பில்லாதபடி வடக்கில் நார்வேயும், ரஷியாவும் வியாபித்திருந்தன. அதனல் பின்லந்து அன்று தெற்கிலுள்ள பால்டிக் கடல் வழியாகவே வெளிநாடுகளுடன் கப்பல் போக்குவரத்துகளை ஏற்படுத்திக்கொள்ளவேண்டியிருந்தது. ஆனல் அது பிரிட்டிஷ் நேசதேசத்தினரின் தூண்டுதலின்பேரில் ரஷியா மீது 1918-ல் யுத்தம் தொடுத்ததென்றும், லெனின் பெட்சாமோ ஜில்லாவை 20 வருடக் குத்தகைக்குக் கொடுத்து பின்லந்துடன் சமாதானம் செய்துகொண்டாரென்றும் ஏற்கனவே கூறியிருக்கின்றோம்.

இந்த பெட்சாமோ ஜில்லாவைப்பற்றி இங்கு சிறிது விவரம் தேவைப்படும். நார்வேயின் வடகிழக்குக் கோடிக்கும், ரஷியாவின் வடமேற்குக் கோடிக்குமிடையில் பின்லந்தின் வடகிழக்கிலுள்ள குறுகிய பூப்பிரதேசந்தான் பெட்சாமோ ஜில்லா. இப்பிரதேசத்தின் வடகோடியில் அழகிய பெட்சாமோ துறைமுகம் இருக்கிறது. இப்பிரதேசம் பின்லந்துக்கில்லாவிடில் பிறகு அது ஆர்க்டிக் மகா சமுத்திர வழியாய் போக்குவரத்து நடத்த முடியாது. இதர நாடுகளும் அதற்குள் வந்து ரஷியாவுக்கு ஆபத்தை விளைவிக்கவுமுடியாது. பின்லந்துக்கும், இதர நாடுகளுக்கும் பால்டிக் கடல் வழியாகவும் தொடர்பேற்படலாம். ஆனால் டென்மார்க், நார்வே, ஸ்வீடன், ஜெர்மனி ஆகிய நாடுகள் இவ்வழியில் குறுக்கே இருக்கின்றன. யுத்தமேற்படுங் காலத்தில் இந்நாடுகள் எதிர்க்கட்சியாயிருக்கும் பட்சத்தில் பிரிட்டிஷ் நேசதேசங்கள் பின்லந்துடன் தொடர்புகொள்ள பெட்சாமோவைத் தவிர வேறு வழியில்லை. மேலும் பெட்சாமோ ஜில்லாவில் நிக்கல் உலோகம் நிரம்பவிருக்கிறது. அதை வெட்டி யெடுக்கப் போதிய மூலதனமோ அல்லது மூளையோ பின்லந்துக்கில்லை. எனவே அமெரிக்காவும், இதர ஐரோப்பிய நாடுகளும் அந்த ஜில்லாவிலுள்ள நிக்கலை வெட்டி எடுக்க பின்லந்திடம் ஒப்பந்தம் செய்துகொண்டு கொள்ளை லாபந்தட்டி வந்தன. ரஷியா பலமிகுந்து வருவதைக்கண்டு இந்நாடுகள், "என்றைக்கிருந்தாலும் ரஷியா இந்த ஜில்லாவை எடுத்துக்கொள்ளும்போல் தெரிகிறது. அதனால் நமது பிழைப்பும் போய்விடும். எனவே ரஷியா திரும்பவும் எடுத்துக்கொள்ளாதபடி இதைச் சாஸ்வதமாக பின்லந்தின் சொத்தாகச் செய்துவிட்டால்தான் நாம் என்றும் சுரண்டிக்கொண்டிருக்கமுடியும்." என்று யோசித்து பின்லந்துக்குத் துற்புத்தி புகட்டலாயின. எனவே ஜெர்மனிக்கும், பிரான்ஸிற்குமிடையில் மேஜினட் அரணும், ஸீப்கிராட் அரணும் கட்டப்பட்டதுபோல ரஷியாவுக்கும் பெட்சாமோ ஜில்லாவுக்குமிடையில் ஓர் அரண் நிறுவப்பட்டு, அதற்குப் பின்லந்து தலைவராகிய மன்னர் ஹிம்மின் பெயர் சூட்டப்பட்டது. அவ்வரணை ரஷியாவுக்கும், பெட்சாமோ ஜில்லாவுக்குமிடையில் கட்டுவது நியாயமல்லவென்றும், ஆனால் பெட்சாமோ ஜில்லாவுக்கும், பின்லந்துக்குமிடையில் கட்டிக்கொள்வதுபற்றி தனக்கு ஆட்சேபணையில்லையென்றும், அங்ஙனமானால்தான் குத்தகைக்காலம் முடிவடைந்ததும் பெட்சாமோவைத் தன்னோடு இணைத்துக்கொள்வ

தற்கு வசதியாயிருக்குமென்றும் ரஷியர் கூறியதைப் பின்லந்து லட்சியமே செய்யவில்லை.

குத்தகைக்காலம் பூர்த்தியானதும் ரஷியா பின்லந்திடம் 1938-ல் தன் ஜில்லாவைத தன்னிடம் ஒப்படைத்து விடும்படிக் கேட்டது. ஆனால் பின்லந்து என்ன பதிலளித்திருக்குமென்பதை வாசக நேயர்கள் ஊகித்துக்கொள்ளலாம். சர்வதேச நெருக்கடியை உண்டுபண்ணியதென்ற அபவாதத்தை ஏற்றுக் கொள்ள ரஷியா விரும்பவில்லைபோலும். அல்லது பின்லந்துடன் அதற்காகப் போர் தொடுத்தால் அங்கு ஜீவித்துவரும் அமெரிக்காவும், இதர ஐரோப்பிய நாடுகள் சகலமும் தன் மீது ஓர் வேளை போர் தொடுக்குமென ரஷியா கருதியிருந்திருக்கலாம். எங்ஙனமாயினும் சரி. அது ஓர் நல்ல சந்தர்ப்பத்திற்காக எதிர்பார்த்துக்கொண்டிருந்திருக்கவேண்டும்.

1939 ஆகஸ்டில் ரஷிய—ஜெர்மன் அனுக்கிரமிப்பு ஒப்பந்தமேற்பட்டது. அதையொட்டி இத்தாலியும், ஜப்பானும் கூட ரஷியாவுடன் அனுக்கிரமிப்பு ஒப்பந்தங்களைச் செய்து கொண்டன. பிரிட்டனும், பிரான்ஸும் ஜெர்மனிக்கெதிராக யுத்தத்திலீடுபட்டிருந்தன. அமெரிக்கா நெடுந்தூரத்திலிருந்தது. ரஷியா இப்பொழுது பின்லந்துடன் சமரசமாக விஷயத்தைத் தீர்த்துக்கொள்ள எண்ணி பேச்சு வார்த்தைகளை நடத்தியது. ஜெர்மனியும், இத்தாலியும் இவ்விஷயத்தில் குறுக்கிடவில்லையெனினும், மற்ற மூன்று பெரிச்சாளிகளும் பின்லந்தைத் தூண்டிவிட்டுக்கொண்டிருந்தன. ரஷியா தம்முடன் உடன்படிக்கை செய்துகொள்ளாமல் ஜெர்மனியுடன் செய்து கொண்டதே என்ற ஆத்திரத்தை மனதில் வைத்துக் கொண்டு, ரஷியா பின்லந்திடம் நடந்துகொள்ளும் முறை அநீதமாயதெனக் கண்டித்ததோடு, ரஷியா பின்லந்து மீது யுத்தம் தொடுக்குமாயின் தாம் பின்லந்துக்குச் சகாயம் செய்யவும் நேரும் என்று பிரிட்டிஷ் நேசதேசங்கள் கூறின. எனவே ரஷிய—பின்னிஷ் சமரசப் பேச்சுவார்த்தைகள் முறிவுபட்டு அவ்விருநாடுகளுக்குமிடையில் 30-11-1939-ம் தேதி யுத்தமாரம்பித்தது.

இந்தியாவும், இலங்கையும் உருவத்திலும், இதர விஷயங்களிலும் எவ்விதமோ அவ்விதம்தான் ரஷியாவும், பின்லந்தும் உருவத்திலும், இதர விஷயங்களிலும். ரஷியாவின் பலம்

அச்சமயம் யாருக்கும் தெரியவில்லை. "நான் அடிக்கிறாற்போல அடிக்கிறேன். நீ அழுகிறாற்போல அழு" என்ற மாதிரி ரஷிய—பின்னிஷ் யுத்தம் கிட்டத்தட்ட நான்கு மாதங்கள் வரை நடந்தது. ரஷியா விரும்பி இருந்தால் அந்த யுத்தத்தை நொடிப் பொழுதில் முடித்திருக்கமுடியுமென்பதை 1942-ம் வருடம் செப்டம்பர் மாதத்திற்குப் பிறகுதான் உலகம் ஒப்புக்கொண்டது. நிற்க பிரிட்டிஷ் நேசதேசங்கள் முன்பு கூறிய மாதிரி பிரமாத சகாயம் எதையும் செய்துவிடவில்லை. எனவே ஸ்வீடன் மூலமாக ரஷியா விடுத்த சமாச நிபந்தனைகளைப் பின்லந்து ஒப்புக்கொள்ள வேண்டிய நிர்பந்தமேற்பட்டது. அதையாட்டி ரஷியாவுக்கும், பின்லந்துக்குமிடையில் யுத்த நிறுத்த ஒப்பந்தம் 12-3-1940-ல் மாஸ்கோவில் கையெழுத்திடப்பட்டது.

இவ்விதமாக பின்லந்து யுத்தம் முடிந்ததும் தன்னையொட்டி வடமேற்கிலுள்ள லீத்துவேனியா, லேட்வியா, எஸ்டோனியா ஆகிய மூன்று சிறுநாடுகளிலும் ரஷியா தன் செல்வாக்கை ஏற்படுத்திக்கொண்டது.

இனி ரஷியாவுக்கு ருமேனியாவிடம்தான் கொஞ்சம் பாக்கி இருந்தது. இதற்கு முன்பு நிகழ்ந்திருக்கும் விஷயங்கள் அனைத்தையும் நேரில் பார்த்த பிறகு இனியும் பிரிட்டிஷ்-பிரஞ்சு வார்த்தைகளைக் கேட்டு தானும் நாசமாக வேண்டுமென ருமேனியா விரும்பவில்லை போலும். எனவே 28-6-1940-ல் ரஷியாவுக்கும், ருமேனியாவிற்குமிடையில் ஓர் ஒப்பந்தமேற்பட்டது. அதன்படி யுத்தமின்றியே ரஷியா தனது மாஜிப்பிரதேசமாகிய பெசரேபியாவையும், வட புக்கோவினாவையும் ருமேனியாவிடமிருந்து திரும்ப அடைந்து விட்டது. இவ்விதமாக ஐரோப்பாவில் ரஷியாவின் செல்வாக்கும் நாளுக்கு நாள் அதிகரித்துக் கொண்டே வந்தது.

---

## அத்தியாயம்—7

---

## ஜெர்மன் வெற்றி

[12-3-1940-லிருந்து 24-6-40 முடிய 102 நாட்களுக்குள் நார்வே, டென்மார்க், ஹாலந்து, பெல்ஜியம், லக்

ஸம்பர்க், பிரான்ஸ் ஆகிய நாடுகள் ஜெர்மனியிடம் சரணுகதியடைந்தது—இத்தாலிய முஸோனி யுத்தத்தில் கலந்து கொண்டது—பல்கேரியா, கிரீஸ், யூகோஸ்லேவியா, ருமேனியா போன்ற தென் கிழக்கு ஐரோப்பிய நாடுகள் ஜெர்மனி வசமானது முதலியன விவரிக்கப் பட்டுள்ளன.]

3-9-1939-ம் தேதியே பிரிட்டனும், பிரான்சும் ஜெர்மனி மீது யுத்தப் பிரகடம் செய்தனவென்பதுண்மைதான். எனினும் நேரடியாக ஜெர்மனிமீது போர் தொடுத்துவிடவில்லை. அல்லது போலந்துக்கும் இராணுவ உதவி அனுப்பிவிடவில்லை. இதற்குப் பதிலாக வெளிநாடுகளிலிருந்து ஜெர்மனிக்கு மூலப்பொருள்கள் போகாதவாறு கடல் மறியல் செய்யவாரம்பித்தன. இதன் மூலமாக ஜெர்மன் யுத்ததளவாட உற்பத்தியைக் குறைத்து, உள்நாட்டில் பஞ்சத்தை ஏற்படச் செய்து, அதை அடிபணியச் செய்துவிடமுடியுமென்பது பிரிட்டிஷ்—பிரஞ்சு உத்தேசம். நேசதேசக் கடல் மறியல் ஜெர்மனிக்கு எதுவும் போகாதபடி செய்ய ஏற்பட்டதே யொழிய கரையோர நடுநிலைமை நாடுகளைப் பாதிப்பதல்ல. நடுநிலைமை நாடுகளுக்கு வெளியுலகிலிருந்து சகலமும் வழக்கம் போல் வந்து கொண்டு தானிருந்தன. ஜெர்மனி, பிரிட்டன், பிரான்ஸ், ஜப்பான், சீனு, ரஷியா ஆகிய ஆறு நாடுகளையும் தவிர உலகிலிருந்த சகல நாடுகளும் வெளிப்பார்வைக்கு நடுநிலைமை நாடுகளெனப் பசப்பிக்கொண்டிருந்தபோதிலும், உள்ளூற ஏதாவதொரு சார்பில் அனுதாபங் கொண்டு உதவி புரிந்துதான் வந்திருக்கின்றன. இத்தாலி, ஸ்பெயின் ஆகியவற்றின் வழியாக ஜெர்மனிக்கு மூலப்பொருள்கள் எதுவும் கிடைக்கவில்லையாயினும், ஜெர்மனியின் சொந்த சேமிப்புகளும், செயற்கை மூலப் பொருள்களும் அதற்கு பல ஆண்டுகள்வரை இருந்திருக்கும். ஏனெனில் ஹிட்லர் பதவிக்கு வந்த 1934-லிருந்தே ஜெர்மனியை இதற்காகத் தயார் செய்து வந்திருக்கிறுர்.

நிற்க போலந்து யுத்தம் முடிந்த பிறகும் சில மாதங்கள் இவ்விதம் கடல்மறியலோடு மந்தமாகக்கழிந்தன. மழை பேய்ந்து ஓய்ந்த மாதிரி தோன்றியது. எனினும் இதற்கிடையில் ஐரோப்பாவில் மேற்கு கடற்கரையோரமாயுள்ள நார்வே, டென்மார்க், ஹாலந்து, பெல்ஜியம் ஆகிய நடுநிலைமை நாடுகளையும் யுத்தமேடை

யாகச்செய்ய இருதாப்பாரும் அந்தரங்க வேலைகளைச் செய்து வந்திருக்கின்றனர். ஆனால் ஹிட்லர் இதில் முந்திக்கொண்டார்.

## டென்மார்க்

9-4-1940-ல் மேற்கு ஐரோப்பிய யுத்த மாரம்பமாயிற்று. அன்று 914 ஜெர்மன் துருப்புகள் டென்மார்க்கிற்குள் பிரவேசித்தன. அங்கு ஜெர்மன் துருப்புகளுக்கு எதிர்ப்பெதுவும் ஏற்படவில்லை. எனவே டென்மார்க் ஜெர்மன் பாதுகாப்பில் வந்தது.

## நார்வே

அதே தினத்தில் ஜெர்மன் துருப்புகள் நார்வேயிக்குள்ளும் பிரவேசித்தன. ஆனால் அங்கு கடுத்த எதிர்ப்பிருந்தது. எனினும் ஜெர்மானியர்கள் அன்றே நார்வே தலைநகரான ஆஸ்லோவையும், இதர முக்கிய ஸ்தலங்களையும் ஆக்கிரமித்துக் கொண்டனர். பிரிட்டிஷ் படைகளுக்கும், ஜெர்மன் இராணுவத்திற்குமிடையில் நார்வேயில் கோரயுத்தம் நடந்தது. நார்வே அரசர் லண்டனுக்கு ஓடிவிட்டார். அதை தொடர்ந்து நார்வே சர்க்காரும் லண்டனுக் கோடியது. இதன் பிறகு நார்வேயிக்கும், ஜெர்மனிக்குமிடையில் 9-6-1940-ல் யுத்த நிறுத்த ஒப்பந்தமேற்பட்டது. எனவே நார்வேயும் ஜெர்மன் மேற்பார்வையை ஒப்புக்கொண்டது.

## ஹாலந்து, பெல்ஜியம், லக்ஸம்பர்க்

நார்வேயில் பிரிட்டிஷாரடைந்த மானங்கெட்ட தோல்வியைப் பற்றி பிரிட்டிஷ் பாராளுமன்றத்தில் எள்ளுப்போட்டால் பொரிந்து விடுகிறமாதிரி கடுத்த விவாதங்கள் நடந்து கொண்டிருந்தன. ஜெர்மனி மீது 3-9-1939-ல் யுத்த பிரகடனம் செய்த பிரிட்டிஷ் பிரதம மந்திரி சேம்பர்லேன் அப்பதவிக்கு லாயக்கற்றவர் என்று ஆளாளுக்கு ஓலமிட்டனர். அதன்பயனாக அவரும் ராஜிநாமா செய்தார். பிறகு வின்ஸ்டன் சர்ச்சில் பிரதம மந்திரியானார். அவரது தலைமையில் புதியமந்திரி சபையமைக்கப்பட்டது. ஆனால் இதை யெல்லாம் உத்தேசித்து ஹிட்லர் எதிரிகளுக்கு சாவகாசம் கொடுத்துக் கொண்டிருப்பாரா?

எனவே 10-5-1940-ல் ஜெர்மன் துருப்புகள் ஹாலந்து, பெல்ஜியம், லக்ஸம்பர்க் ஆகிய மூன்று நாடுகளின் மீதும் ஏக

காலத்தில் பாய்ந்தன. ஜெர்மன் யந்திரப்படைகள் ஹாலந்தை ஊடுருவிச் சென்றுவிட்டன. அதே சமயத்தில் ஜெர்மன் கடற் படைகள் வட கடற்கரையில் இறங்கிவிட்டன. அதன் பயனாக அன்றே ஹாலந்து சர்க்காரின் இருப்பிடமாகிய ஹேக் நேரடியாகத் தாக்குண்டது. ஜெர்மன மின்னல் விமானப்படை மேலும் அதே தினத்தில் பிரஸ்ஸல்ஸையும், அண்ட்வர்ப்பைக் கூடக் கடுமையாகத்தாக்கி விட்டது. இப்பொழுது பார்க்க வேண்டுமே பிரிட்டிஷ், பிரஞ்சு தடபுடல்களை! பிரிட்டிஷ்—பிரஞ்சுத் துருப்புகள் கடல்மடை திறந்தாற்போல் அன்று மத்தியானம் ஹாலந்திற்குள்ளும், பெல்ஜியத்திற்குள்ளும் பிரவேசித்தன. எனினும் பயனில்லை. ஹாலந்து சக்ரவர்த்தினி வில்ஹெல்மினா தனது குடும்ப சகிதமாய் லண்டனுக்கு எழுந்தருளினார். அதோடு ஹாலந்து சர்க்காரும் லண்டனுக்கு ஓட்டம் பிடித்தது. எனவே 15-5-1940-ல் அதாவது ஐந்தே ஐந்து நாட்களுக்குள் ஹாலந்து ஜெர்மனியிடம் சரணாகதியடைந்தது. ஹாலந்திலிருந்து கொஞ்சநஞ்சம் தப்பியோடிய பிரிட்டிஷ்—பிரஞ்சுத் துருப்புகள் பெல்ஜியத்திற்குள் ஒதுக்கிடம் தேடின.

கடந்த உலக மகாயுத்தத்தின்போது கெய்ஸர் துருப்புகள் நடந்துகொண்டமாதிரிக்கும், இந்த யுத்தத்தில் ஹிட்லர் துருப்புகள் நடந்துகொண்டமாதிரிக்கும் பூனைக்கும் யானைக்குமுள்ள வித்தியாசமுண்டு. ஹிட்லரின் படைகள் மின்னல் வேகத்தில் தான் விஷயங்களை முடிப்பது. எனவே மேற்கு ஐரோப்பிய யுத்தத்தில் ஜெர்மன் படைகள் பகுதிபகுதியாகப் பிரிக்கப்பட்டு, ஒவ்வொன்றிடமும் ஒவ்வொரு வேலை ஒப்படைக்கப்பட்டிருந்தது. நார்வே, டென்மார்க், ஹாலந்து, பெல்ஜியம் லக்ஸம்பர்க் ஆகியவற்றைக் கவனிப்பதற்காக அனுப்பப்பட்ட ஜெர்மன் படைகள் தத்தம் வேலைகளைச் சரிவரப்பார்த்துக்கொண்டு வரும்போது ஒரு ஜெர்மன் படைப்பகுதி பிரான்ஸைக் கவனிக்கவாரம்பித்தது. உலகம் ஒன்றுகூடிவந்தாலும் அசைக்கப்படமுடியாதெனப் பிரமாதப்படுத்தப்பட்டு பிரான்ஸிற்கும், ஜெர்மனிக்குமிடையில் நிறுவப்பட்டிருந்த பிரஞ்சு மேஜினட் அரணை ஜெர்மன் துருப்புகள் 14-5-1940-ல் நொடிப்பொழுதில் தூசிபோல் ஊதிவிட்டு, பிரான்ஸிற்குள் நுழைந்து, பிரஞ்சுத் தலைநகராகிய பாரிஸிற்கு 100 கிலோமீட்டருக்கருகில் சென்றுவிட்டன.

17-5-1940-ல் ஜெர்மன் படைகள் பெல்ஜியம் தலைநகராகிய பிரஸ்ஸல்ஸைப் பிடித்துக்கொண்டு, அடுத்த நாள் அண்ட்வர்ப்பை நோக்கிப் புறப்பட்டன. 19-5-1940-ல் டோவர் ஜலசந்தியை அடைந்துவிட்டன. அதன் பயனாக பிரான்ஸின் வடமேற்கிலிருந்த பெல்ஜியம், பிரஞ்சு, பிரிட்டிஷ் துருப்புகளனைத்தும் சுற்றி வளைத்துக்கொள்ளப்பட்டன. இனியும் தொடர்ந்து ஜெர்மன் துருப்புகளை எதிர்த்து வந்தால் ஐந்து லக்ஷம் பெல்ஜியம் துருப்புகளின் கதியும் அதோகதியாகிவிடுமென்றறிந்த பெல்ஜியம் அரசரான மூன்றும் லெப் போல்ட் 28-5-1940-ல் ஜெர்மனியிடம் எவ்வித நிபந்தனையுமின்றி சரணாகதியடைந்துவிட்டார்.

## டங்கர்க் படுதோல்வி

பிரிட்டனும், பிரான்ஸும் "ஐயோ இந்தப் பாவிப்பயலை நம்பியல்லவோ எங்கள் துருப்புகளை அனுப்பினோம். ஆனால் இவன் இப்பொழுது இப்படிச் செய்துவிட்டானே? இப்படிச் செய்வானென்று முன்னமேயே தெரிந்திருந்தால் நாங்கள் எங்கள் அளவற்ற துருப்புகளையும், தளவாடங்களையும் அங்கு அனுப்பியிரோமே?" என்று இன்னும் பலவிதமாய் 'லபோலபோ' வென்று வாய்வாயாய் அடித்துக்கொண்டன. ஆனால் பெல்ஜியம் துருப்புகள் சரணாகதியடைந்ததால் உற்சாகமதிகமடைந்த ஜெர்மன் துருப்புகளோவெனில் ஆஸ்டெண்டிற்கும், டங்கர்க்கிற்குமிடையில் அணிவகுக்கப்பட்டிருந்த நேசதேசப் படைகளைச் சுற்றிப் பிடிப்பதில் தம் நடவடிக்கைகளை 29-5-1940-ல் இனியும் தீவிரப்படுத்தி ஆஸ்டெண்டையும் கைப்பற்றிக்கொண்டன. 4-6-1940-ல் பிரிட்டிஷ் துருப்புகள் மிகப்பரிதாபகரமாக டங்கர்க்கிலிருந்து ஓட்டம் பிடித்தன. ஓடுகிற நாயைக்கண்டால் துரத்துகிற நாய்க்குத் தொக்கு என்ற மாதிரி பிரிட்டிஷ் துருப்புகளை அஷ்ட திக்குகளிலிருந்தும் ஜெர்மன் தரை, கடல், விமானப் படைகள் துவம்சம் செய்தன. இதில் தப்பிய பிரிட்டிஷார் இங்கிலந்து போய்ச்சேர்ந்தனர். பிரிட்டன் தனது சரித்திரத்திலேயே இதுபோன்ற தோல்வியை இதற்குமுன்பு அடைந்ததேயில்லை. எனினும் இச்சம்பவத்தைக் கீழே விழுந்தும் மீசையில் மண் ஒட்டவில்லை என்பதுபோல் "வெற்றிகரமாகப் பின்வாங்கல்" என்று பிரமாதப்படுத்திக்கொண்டது. ஜெர்மானியர்கள் அன்றே டங்கர்க்கை ஆக்கிரமித்துக்கொண்டனர்.

## இத்தாலி யுத்தப்பிரகடனம்

பிரத்தியக்ஷமான யுத்தம் 1-9-1939-ல் ஆரம்பித்தும், இத்தாலி ஜெர்மனியின் நண்ப நாடாயிருந்தும்கூட அது இதுவரையும் யுத்தத்தில் எந்தப்பக்கத்திலும் பகிரங்கமாகக் கலந்துகொள்ளவில்லை. மதில்மேல் பூனைபோல் இருந்து வந்தது. பிரிட்டன் அதை நடுநிலைமை நாடென மதித்து தனது கடல்மறியல் ஆயுதத்தை அதன் மீது பிரயோகிக்கவில்லை. பிரயோகித்தால் ஒருவேளை அதன்பயனாக இத்தாலி ஜெர்மனியோடு சேர்ந்துகொண்டால் பிறகு என்செய்வதென்ற பயம் மற்றொரு பக்கம் பிரிட்டனுக்கிருந்துவந்தது. நிற்க ஜெர்மன் துருப்புகள் அடைந்துவந்த அமோக வெற்றிகள் இத்தாலியை வசீகரித்தன. அங்ஙனமில்லையாயின் பிரான்ஸ் முழுவதையும் ஜெர்மனி தன் வசப்படுத்திக்கொள்வதோடு தனக்கு எவ்வித மரியாதையும் இல்லாதுபோக நேருமெனவும் ஒருவேளை இத்தாலி கருதி இருக்கலாம். இது எப்படியிருப்பினும் சரியே. 10-6-1940-ல் அதாவது ஜெர்மனி, பிரஞ்சு மேஜினாட் அரணை தகர்த்துக்கொண்டு பிரான்ஸிற்குள் பிரவேசித்த 27-ம் நாள் இத்தாலி ஜெர்மன் சார்பாக பிரிட்டிஷ் பிரஞ்சு நாடுகளுக்கு எதிராக யுத்தப்பிரகடனம் செய்துவிட்டு பிரான்ஸைத் தென்கிழக்கிலிருந்து தாக்கவாரம்பித்தது.

பிரிட்டிஷ்—பிரஞ்சுத் துருப்புகள் ஜெர்மனியிடம் தோல்வி மேல் தோல்வியடைந்து வந்தன. நார்வே, ஹாலந்து, பெல்ஜியம் ஆகிய மூன்றும் சரணாகதியடைந்தன. போதாக்குறைக்கு டங்கர்க் படுதோல்வி. எரிகிற நெருப்பில் எண்ணெய் வார்த்தது போல் இத்தாலியும் ஜெர்மனியோடு சேர்ந்து கொண்டது. ஜெர்மன் தரை விமானப்படைகள் பிரஞ்சுத் துருப்புகளை வளைத்துப் பிடித்து கிட்டிபோட்டடிப்பது போல் முன்னும், பின்னும், மேலும், கீழுமாகத் தாக்கின. எனவே ஜெனரல் வேகாண்ட் தலைமையில் போராடிவந்த பிரஞ்சுத் துருப்புகள் அலைமலர்ந்து போய்விட்டன.

## பிரஞ்சு சரணாகதி

13-6-1940-ல் தலைநகராகிய பாரிஸ் பட்டணத்தைக் காலி செய்துவிட்டதாக பிரஞ்சு சர்க்கார் அறிவித்தது. அடுத்த நாளே

ஜெர்மன் யந்திரப்படைகள் உலகின் மிகஅழகிய தலைநகரங்களில் ஒன்றான கர்விசெய்யப்பட்ட பாரிஸின் தெருக்களில் உலாவலாயின. உலகமே கிடுகலங்கிவிட்டது. 1770-ல் பிஸ்மார்க்கின் துருப்புகள் பாரிஸில் நுழைந்தன. அதன் பிறகு அந்நிய துருப்புகள் பிரான்ஸிற்குள் நுழையவில்லை. கடந்த உலக மகா யுத்தம் நடந்த 4 வருடங்களில் ஒரு நாளாவது ஜெர்மானியர்கள் எட்டிக்கூட பார்க்க முடியாத பாரிஸ் நகருக்குள் இப்பொழுது பிரான்ஸின் மீது யுத்தமாரம்பித்த 31-ம் நாளிலேயே எதிர்ப்பின்றி பிரவேசித்து விட்டனர். எங்கும் ஒரே கொந்தளிப்பு. எனவே அன்று பிரஞ்சு பிரதம மந்திரியாயிருந்த ரெய்னுடும், தனது சகாக்களும் கனத்த விவாதங்களுக்குப் பிறகு 16-6-40-ல் ராஜிநாமா செய்துவிடவே அடுத்த நாளே மார்ஷல் பெத்தேன் அப்பதவியை ஏற்று மந்திரி சபையொன்றை அமைத்தார். உடனே பெத்தேன் சர்க்கார் ஜெர்மனியோடு யுத்த நிறுத்த ஒப்பந்தப் பேச்சுவார்த்தைகளை நடத்த ஆரம்பித்தது.

இதற்கிடையில் இத்தாலியப் படைகள் பிரான்ஸில் மேஜினட் அரணைத் தாண்டிவந்து ஆல்ப்ஸ் பிரதேசத்தில் ஜெர்மன் துருப்புகளை 18-6-40-ல் சந்தித்தன. அதேதினத்தில் ஹிட்லரும், முஸோலினியும் சந்தித்து, பிரான்ஸுடன் யுத்தம் செய்வதை நிறுத்தவேண்டுமாயின் அதற்காக அச்சு வல்லரசுகள் பிரான்ஸிற்கு என்னென்ன நிபந்தனைகளை விதிக்கவேண்டுமென்பதைப்பற்றி ஆலோசித்தனர். 21-6-40-ல் ஜெர்மன் நிபந்தனைகள் பிரஞ்சு பிரதிநிதிகளிடம் கொடுக்கப்பட்டன. அடுத்த நாள் பிரான்ஸிற்கும், ஜெர்மனிக்குமிடையில் யுத்தநிறுத்த ஒப்பந்தமேற்பட்டது. இதில் ஓர் வேடிக்கை என்னவெனில் 11-11-1918-ல் எந்த ரயில் கோச்சியிலிருந்துகொண்டு பிரிட்டிஷ் பிரஞ்சு நேச நாடுகள் ஜெர்மனிக்கு நிபந்தனைகளை விடுத்தனவோ, இப்பொழுது அதே கோச்சியிலிருந்துதான் ஹிட்லர் பிரான்ஸிற்கு நிபந்தனைகளைவிடுத்து தனது ஆத்திரத்தைத் தீர்த்துக்கொண்டாரென்பதுதான். இதேபோன்ற மற்றோர் ஒப்பந்தம் பிரான்ஸிற்கும் இத்தாலிக்குமிடையில் 24-6-1940-ல் கையொப்பமாயிற்று. இதுவரை பிரான்ஸில் பெய்துகொண்டிருந்த யுத்தமழை அடுத்த நாள் பிற்பகல் அறவே நின்றது. இவ்விதமாக தலைவணங்கா சாம்ராஜ்யமென உலகப் பிரசித்திப்பெற்ற பிரான்ஸ் சரியாக 40 நாட்கள்கூட கழியுமுன்பே சரணாகதியடைந்துவிட்டது. இத்

தோடு மேற்கு ஐரோப்பிய யுத்தமும் முடிவுற்றது. ஷெ ஒப்பந்தப்படி பிரான்ஸில் அன்றுவரை ஜெர்மன் துருப்புகளால் பிடிபட்ட பிரதேசம் ஜெர்மன் சர்க்காராலும், பிடிபடாது மீந்திருந்த பிரதேசம் பிரஞ்சு சர்க்காராலும் நிர்வகிக்கப்பட்டு வந்தது. ஆனால் பிரஞ்சுத் தலைவர்கள் துரோகம் செய்ததை முன்னிட்டு, மீந்திருந்த பிரான்ஸையும் 11-11-1942-ல் ஜெர்மன் துருப்புகள் பிடித்துக்கொண்டன. (இதன் விவரம் ஆப்ரிக்க யுத்த அத்தியாயத்தில் கூறப்பட்டிருக்கிறது.)

## தென்கிழக்கு ஐரோப்பியப்போர்

1940-ம் வருடம் ஜூன் மாத முடிவிற்குள் மேற்கு ஐரோப்பா முழுதும் ஜெர்மன்—இத்தாலிய ஆதிக்கத்திற்குட்பட்டுவிட்டது. ஆப்ரிக்காவில் பிரிட்டன் கை வலுத்திருந்தது. அடுத்தபடியாக யுத்தம் எந்த இடத்தில் ஆரம்பிக்குமென அகில உலகும் எதிர்பார்த்துக்கொண்டிருந்தது. இவ்விதமாக 1941-ம் வருடம் பிப்ரவரி மாதம் முடிய 8 மாத காலம் மழை பெய்ந்து ஓய்ந்ததுபோலிருந்து வந்தது. மேற்கு ஐரோப்பாவில் பிரிட்டன் காலடி யெடுத்துவைக்கமுடியாதபடி ஜெர்மனி செய்துவிட்டது. பிரிட்டன் ஐரோப்பாவிற்குள் புகுந்தால்தான் ஜெர்மனியைத் தோற்கடிக்கமுடியும். எனவே பிரிட்டிஷ் அந்நியநாட்டு மந்திரியாயிருந்த அந்தோனி ஈடன் மேல்கண்ட மந்த காலத்தில் எகிப்து, துருக்கி, பல்கேரியா, கிரீஸ், யூகோஸ்லேவியா, ருமேனியா போன்ற தென்கிழக்கு ஐரோப்பிய (பால்கன்) நாடுகளில் சுற்றுப்பிரயாணம் செய்து வந்தார். எதற்காக சுற்றுப்பிரயாணமென்பதுபற்றி கூறவே வேண்டியதில்லை. தென்கிழக்கு ஐரோப்பாவிலிருந்தாவது ஜெர்மனி மீது பாயலாமென்பதுதான் பிரிட்டனின் உத்தேசம். ஜெர்மனியும் இத்தாலியும் இதைப்பார்த்துக்கொண்டு பேசாதிருக்குமா? ஜெர்மன் கெஸ்டாப்போ (இரகசியப்போலீஸ்) வேலையும் பால்கன் நாடுகளில் தீவிரமாக நடந்து வந்தது.

ரஷியாவுக்கும் அஸ்தியில் ஜுரம் கண்டுவிட்டது. ஏனெனில் தென்கிழக்கு ஐரோப்பாவில் யுத்தம் மூண்டால் அது ரஷியாவையும் பாதிக்கத்தான் செய்யும். எனவே ரஷியாவும் படைதிரட்டுவேலையில் தீவிரமாக, ஆனால் மிகமிக அந்தரங்கமாக ஈடுபட்டது.

இதற்கிடையில் 1-3-1941-ம் தேதி பல்கேரியா முக்கூட்டு ஒப்பந்தத்தில் சேர்ந்துகொண்டது. அதன் பிரகாரம் ஜெர்மன் துருப்புகள் பல்கேரியாவிற்குள் பிரவேசித்தன. ருமேனியாவி லும் யூகோஸ்லேவியாவிலும் இராணுவப்புரட்சிகள் ஏற்பட்டன. கரோல் மன்னர் ஓட்டம் பிடித்தார். ஜெர்மன் நண்பரான ஜென ரல் அண்டனஸ்கு ருமேனியாவில் சர்வாதிகாரியானார். 6-4-1941-ம் தேதியன்று ஜெர்மன் துருப்புகளும் யூகோஸ்லேவி யாவிலும் புகுந்து விட்டன. 17-ம் தேதியன்று யூகோஸ்லே வியா ஜெர்மனியிடம் சரணகதியடைந்தது.

நிற்க, அக்தோனி ஈடனின் அந்தரங்க ஏற்பாட்டின்படி கிரீ ஸிற்குள் பிரிட்டிஷ் இராணுவ சாதனங்கள் இரகஸியமாக வந்து கொண்டிருந்தன. இத்தாலிக்கு கிரீஸின் மீது எப்போதுமே திருஷ்டியிருந்துவந்தது. அது இப்பொழுது கிரீஸிற்குச் சில நிபந்தனைகளை விடுத்தது. ஆனல் கிரீஸ் அதற்கிணங்க மறுக் கவே இத்தாலியத் துருப்புகள் அல்பேனியாவிலிருந்து கிரீஸிற் குள் பிரவேசித்துவிட்டன. ஆரம்பத்தில் இத்தாலியின் பாடு கொஞ்சம் ஆபத்தாகத்தானிருந்தது. ஏனெனில் பிரிட்டிஷ் படைகளும் கிரீஸில் இத்தாலியரை எதிர்த்துப்போராடிவந்தன. இங்ஙனமிருக்க 6-4-1941-ம் தேதியன்று ஜெர்மன் துருப்புகளும் கிரீஸிற்குள் பிரவேசித்துவிட்டன. பிறகு பிரிட்டிஷ்—கிரீக் துருப்புகளின் கதியைச் சொல்லவேண்டியதில்லை. 20-4-1941-ம் தேதி இரண்டு லட்சம் கிரீக் துருப்புகள் எவ்வித நிபந்தனையு மின்றி ஜெர்மன் படைகளிடம் சரணகதியடைய நேர்ந்தது. எப்ரல் மாதமும் முடிந்தது. கிரீஸூம் தீர்ந்தது. கிரீஸிலிருந்து உயிருக்குப் பயந்தோடிய கிரீக் துருப்புகளும், பிரிட்டிஷ் துருப் புகளும் கிரீஸிற்குத் தெற்கேயுள்ள கிரீட் எனும் தீவிற்குள் நுழைந்தன. ஆனல் ஆங்கிலேயரின் ஆதிக்கத்தை ஐரோப்பாவி லிருந்து அறவே அகற்ற விரும்பிய ஜெர்மனி கிரீஸைப் பிடித்துக் கொண்டதோடு திருப்தியடையவில்லை. எனவே ஆங்கிலேய ருக்கு கடைசியோ கடைசியாக ஐரோப்பாவில் காலடியாக இருந்த கிரீட் தீவு முழுவதையும் ஜெர்மன் துருப்புகள் 1-6-1941-ம் தேதிக்குள் பிடித்துக்கொண்டன. ஐரோப்பா வில் அதுவரை கிரீட் யுத்தத்தைப்போல் பயங்கரமாக எதுவும் நடந்ததில்லை. கிரீஸிலும், கிரீட்டிலும் பிரிட்டனுக்கேற்பட்ட நஷ்டமும், தோல்வியும் டங்கர்க்கில் அதற்கேற்பட்டதைவிட

பெரிதும் சகிக்கமுடியாதவை. ஆனால் ஜெர்மனிக்கு இங்கு கிடைத்த வெற்றியும், பிரதாபமும் இணையற்றவையாகும்.

மேற்கு ஐரோப்பிய யுத்தத்தின் விளைவாக நார்வே, ஹாலந்து, பெல்ஜியம், லக்ஸம்பர்க், பிரான்ஸ் ஆகிய நாடுகள் அனைத்தும் ஜெர்மன் ஆதிக்கத்திற் குட்பட்டதோடு அவற்றில் முடியாட்சி நடத்திய மன்னர்களும் முடியிழந்தனர். பால்கன் யுத்தத்தின் விளைவாக கிரீஸ், பல்கேரியா, ருமேனியா, யூகோஸ்லேவியா, ஹங்கேரி போன்ற தென் கிழக்கு ஐரோப்பிய நாடுகள் அனைத்தும் ஜெர்மன் செல்வாக்கிற்குட்பட்டதோடு அவற்றின் முடியாட்சி நடத்திய மன்னர்களும் முடியிழந்தனர். இவ்விதமாக 1-6-1941-ம் தேதிக்குள் ஐரோப்பா முழுதும் ஜெர்மன் வசமாய்விட்டது.

ஐரோப்பாவில் சூந்த இடமின்றி இறுதியாக கிரீட்டிலிருந்து விரட்டியடிக்கப்பட்ட பிரிட்டிஷ் துருப்புகள் அரேபியா, சிரியா, ஈராக் (மெஸபெட்டோமியா) ஈரான் (பாரசீகம்) போன்ற மேற்காசிய நாடுகளில் கவனம் செலுத்தலாயின. பிரான்ஸ் ஜெர்மனியுடன் தனியாக யுத்த நிறுத்த ஒப்பந்தம் செய்துகொண்டதற்காக அதைபழிவாங்குமுகத்தான் அதற்கு மேற்காசியாவில் சொந்தமாயிருந்த சிரியாவைப் பிரிட்டிஷ் துருப்புகள் பிடித்துக்கொண்டன. இதற்கிடையில் ஈரானில் ஜெர்மன் செல்வாக்கு அதிகரித்து வந்தது. ஆனால் 22-6-1941-ல் ரஷிய—ஜெர்மன்யுத்தம் ஆரம்பித்ததும் ரஷியாவும், பிரிட்டனும் சேர்ந்து ஈரானை வேலை முடித்துவிட்டன. எனவே மேற்காசியாவில் ஜெர்மனிக்கு செல்வாக்கு இல்லாது போயிற்று. பாலஸ்தீனம் அரேபியா, ஈராக் போன்ற நாடுகள் ஏற்கனவே பலகாலமாக பிரிட்டிஷ் ஆதிக்கத்திற்குட்பட்டிருந்தன.

எனவே ஐரோப்பா முழுதும் ஜெர்மன் வசமெனினும், மேற்காசியா முழுவதிலும் அதற்கு செல்வாக்கே இல்லாதொழிந்தது. என்றாலும் மேற்காசிய நாடுகளில் பிரிட்டனுக்கு விரோதமாக சதா கலகங்களும், ஆர்பாட்டங்களும், புரட்சிகளும் நடந்துகொண்டே வந்தன; வருகின்றன; பிரிட்டன் மேற்காசிய முஸ்லிம் நாடுகளை முஸ்லிம்களிடம் ஒப்படைக்கும் வரை அவை இனியும் நடந்துவரும்.

---

# ஆரம்ப சூரப்புலிகள்!



இத்தாலிய சர்வாதிகாரி
பெனிட்டோ முஸோலினி



ஜெர்மன் சர்வாதிகாரி
அடால்பு ஹிட்லர்



ஜப்பானிய பிரதமர்
ஜெனரல் ஹிடகி டோஜோ

## அத்தியாயம்—8

## ஆப்பிரிக்க—ரஷிய—ஜெர்மன்—போர்

[இதில் ஐரோப்பிய யுத்தம் எப்படி ஆப்பிரிக்கா வுக்கும் பரவிற்றென்றும், அதனல் 24-6-1940-ல் ஜெர்மனியால் ஆக்கிரமிக்கப்படாது விஷி பிரஞ்சு சர்க்காரிடம் மீந்திருந்த அசல் பிரான்ஸ் எவ்விதம் க்ஷீணித்த தென்றும், இதுநாள்வரையும் நண்ப நாடுகளாயிருந்த ஜெர்மனியும், ரஷியாவும் ஏன் போரிலிறங்கினவென்றும் விவரிக்கப்பட்டிருக்கின்றன.]

1918-ம் வருடத்தில் ஜெர்மனிக்கும் ஆப்ரிக்காவில் குடியேற்ற நாடு இருந்தது. ஆனல் 1914—18-ம் வருட முதலாவது உலகமகா யுத்தநிறுத்த (வெர்சயில்ஸ்) ஒப்பந்தப்படி அதை பிரிட்டன் எப்பம் விட்டுவிட்டது. அபிஸீனியா (எதியோபியா) வையும், லைபீரியாவையும் தவிர ஆப்பிரிக்காவில் மீந்திருந்த சகல பிரதேசமும் பிரிட்டன், பிரான்ஸ், பெல்ஜியம், இத்தாலி, ஸ்பெயின், போர்த்துகல் ஆகிய ஆறு ஐரோப்பிய நாடுகளின் குடியேற்ற நாடாயிருந்தது. அபிஸீனியாவும், லைபீரியாவும் மட்டிலும் சுதந்திர நாடுகள். அபிஸீனியாவின் சக்ரவர்த்தி ஹெயிலி செலாஸி என்ற கிறிஸ்துவர். அதனல்தான் ஆப்ரிக்கா முழுமையையும் அடிமையாக்கிக்கொண்ட ஐரோப்பிய கிறிஸ்துவ நாடுகள் அபிஸீனியா ஒன்றை மட்டிலும் தொடவில்லை போலும். என்ருலும் அந்த அபிஸீனியாவையும் 1936-ல் இத்தாலி அடிமையாக்கிக்கொண்டதென்றும், அதன்சக்ரவர்த்தி ஹெயிலி செலாஸி லண்டனுக்கு ஓடிவிட்டாரென்றும் ஏற்கனவே கூறியுள்ளோம். 1937-ல் ஆப்ரிக்காவில் லைபீரியா ஒன்றைத்தவிர வேறு அங்கு ஒரு அங்குல நிலங்கூட சுதந்திரமாயிருக்கவில்லை. ஆப்ரிக்காவில் அதிகம் நிலம் பிடித்த பெரும்பங்காளிகள் பிரிட்டனும், பிரான்ஸும்தான். மற்ற ஐரோப்பிய நாடுகள் அங்கு குட்டிஎஜமானர்களாயிருந்தன. டாஞ்சியர்ஸும், ரயோடி வோரோவும் ஸ்பெயினுக்கு. கினி, அங்கோலா, மொஸாம்பிக் ஆகிய மூன்றும் போர்த்துக்கலுக்கு. மொராக்கோ, அல்ஜிரியா, டூனிஸியா, வடமேற்காப்ரிக்கா, அடமாவா, கிரகூரைகை ஆப்ரிக்கா, மெகாஸ்கர்

ஆகியவை பிரான்ஸுக்கு. காங்கோ பெல்ஜியத்துக்கு. லிபியா, எரிட்ரியா, சோமாலிலந்து, அபிஸீனியா ஆகியவை இத்தாலிக்கு. ஆப்ரிக்காவில் மீந்த சகல பிரதேசமும் (எகிப்து, சூடான், பிரிட்டிஷ் சோமாலிலந்து, பாதர்ஸ்ட், சிராலியோன், கோல்டு கோஸ்ட், நைஜீரியா, தென்மேற்காபிரிக்கா தென்னாப்ரிக்கா ஐக்கியம், பசுவானுலந்து, ரோடிஸியா, நியூஸ்லந்து, கென்யா,) பிரிட்டனுக்கு. லைபீரியா ஒன்று மட்டிலும் இந்த ஐரோப்பிய நாடுகளால் ஆக்கிரமிக்கப்படாது நீக்ரோவர்களின் குடியரசு நாடாக மீந்திருந்தது. இன்றைய யுத்தம் ஆரம்பிக்கு முன்பு ஆப்ரிக்காவின் நிலைமை மேற்கண்டவாறு இருந்தது.

10-6-1940-ல் இத்தாலி பிரிட்டிஷ் நேசதேசங்களுக்கு எதிராக யுத்தத்தில் இறங்கியதாலும், அதற்கு ஆப்ரிக்காவில் நாடுகள் இருந்ததாலும், இத்தேதியிலிருந்து யுத்தம் ஆப்ரிக்காவுக்கும் பரவலாயிற்று. எரிட்ரியா, அபிஸீனியா, இத்தாலிய சோமாலிலந்து ஆகிவற்றிலிருந்த இத்தாலியப் படைகள் பிரிட்டிஷ் சோமாலிலந்தை 1940-லேயே பிடித்துக்கொண்டன. லிபியாவிலிருந்த இத்தாலியப்படைகள் எகிப்தின் மீது பாய்ந்து சோலம், சிடிபரானி போன்ற பிரதேசங்களை மாயத்தில் பிடித்துக்கொண்டன. இத்தாலி ஆப்ரிக்காவில் ஆரம்பசூரப்புலியாக இருந்ததெனினும் அதன் கதி "வரவர மாமியார் கழுதைப்போலானாள்" என்ற மாதிரியாய்விட்டது.

ஜெனால் ஆர்க்கிபால்ட் வேவலின் (தற்சமயம் இந்தியாவில் பிரிட்டிஷ் வைஸிராயாக இருப்பவர்) தலைமையில் ஆப்ரிக்காவில் பிரிட்டிஷ் படைகள் திருத்தியமைக்கப்பட்டன. லண்டனில் அஞ்ஞாதவாசம் செய்துவந்த மாஜி அபிஸீனிய சக்ரவர்த்தியான ஹெயிலி செலாஸிக்குப் பிரிட்டன் ஆள், பொருள், பண உதவிகள் புரிந்தது. இத்தாலி அபிஸீனியா, சோமாலிலந்து, எரிட்ரியா ஆகிய சகலத்தையும் இழந்தது. இத்தாலியின் விதி இதோடும் நின்றுவிடவில்லை. எகிப்திலிருந்த பிரிட்டிஷ் படைகள் ஜெனரல் வேவலின் தலைமையில் லிபியாவிற்குள்ளும் பாய்ந்தன. சிடிபரானி, சோலம், பார்டியா, டோப்ருக், டெர்ணு, பெங்காஸி ஆகிய சகல இத்தாலியப் பிரதேசங்களையும் வேவல் துருப்புகள் கைப்பற்றிவிட்டன. இவ்வளவும் 1941-ம் வருட முதற்பகுதியில் நிகழ்ந்தது. காரணமென்னவெனில் இக்காலத்தில் இத்தாலி பால்கன் யுத்தத்தில் சிக்கிக்கொண்டதால் அது ஆப்ரிக்

காவில் தன் நிலைமையைச் சமாளிக்க முடியாது போயிற்று. அதன்பயனாக அது ஆப்ரிக்காவில் திரிபோலி சுற்றுப்பிரதேசத்தைத் தவிர இதர சகலத்தையும் இழந்துவிட்டது. இந்நிலைமையில் ஜெனரல் வேவல் இந்தியாவுக்கு பிரிட்டிஷ் பிரதம சேனாதிபதியாக மாற்றப்படவே ஜெனரல் அக்கின்லெக் ஆப்ரிக்காவில் பிரிட்டிஷ் துருப்புகளின் சேனாதிபதியானார்.

நிற்க 1941-ம் வருடம் மே மாதமும் முடிந்தது; பால்கன் யுத்தமும் முடிந்தது. அதன் பயனாக பிரிட்டிஷ் நேசதேசத் துருப்புகளுக்கு ஐரோப்பாவில் குந்தக்கூட இடமில்லாது போய் விட்டது. இறுதியாகக் கிரீட் தீவிலிருந்து ஓட்டம்பிடித்த அத்துருப்புகள் மேற்காசியாவில் நடவடிக்கைகளை எடுத்துக்கொள்ள வாரம்பித்தனவேயன்றி ஆப்ரிக்காவில் இத்தாலிக்கு விரோதமாக மேற்கொண்ட நடவடிக்கைகள் எதையும் எடுத்துக்கொள்ளவில்லை. பெங்காஸி வரை பிடிபட்டதிலேயே அதிக திருப்தியடைந்துவிட்டனபோலும். இவ்விதமாக ஆப்ரிக்கப் போர் முனை பலமாதங்களாகத் தூங்கிக்கொண்டிருந்தது. எனினும் அச்சுத் துருப்புகள் ஜெர்மன் ஜெனரல் எர்வின் ரோமல் தலைமையில் திரிப்போலியிலும், பிரிட்டிஷ் நேசதேசத் துருப்புகள் பிரிட்டிஷ் ஜெனரல் அக்கின்லெக் தலைமையில் எகிப்திலுமாகத் திரண்டுவந்தன. எனவே இதுவரை உறங்கிக்கொண்டிருந்த ஆப்ரிக்கப் போர்முனையில் 26-5-1942-ல் திரும்பவும் சுறுசுறுப்புத்தோன்றலாயிற்று. பெங்காஸி, டெர்னா, டோப்ருக், பார்டியா, சோலம், சிடிபரானி ஆகியவற்றையும் பிடித்துக்கொண்டதோடு மெர்ஸா மாத்ருவையும் 29-6-1942-க்குள் ரோமலின் படைகள் பிடித்துக்கொண்டன. பிரிட்டிஷாருக்கு இதனாலுண்டான கஷ்டநஷ்டங்களுக்கு அளவேயில்லை. டோப்ருக்கை 22-6-1942-ல் கைப்பற்றியதற்காக எர்வின் ரோமலை அடால்பு ஹிட்லர் பீல்ட் மார்ஷல் பதவிக்கு உயர்த்தினர். ஆனல் பிரிட்டிஷ் ஜெனரல் அக்கின்லெக்கிற்குப் பதிலாக ஜெனரல் அலக்ஸாண்டரைப் பிரிட்டிஷ் துருப்புகளின் பிரதமசேனாதிபதியாகப் பிரிட்டிஷ் சர்க்கார் நியமித்தது. இதன் பிறகு ஆப்ரிக்க யுத்த நிலைமையில் ஓர் மாற்றமேற்பட்டது. அச்சு முன்னேற்றவேகம் தணிந்துவிட்டது. நேசதேசத்தினர் யுத்தம் செய்த எல்லா முனைகளிலும் தோல்விமேல்தோல்வியடைந்து இறுதியில் ஓட்டம் பிடிப்பர். ஆனல் இங்கு அவர்கள் அதுவும் இந்த இறுதிநோக்

தில் கொஞ்சம் ஜாக்கிரதையாக இருப்பதாகத் தெரிந்தது. இத்தோடு அச்சு முன்னேற்றம் ஸ்தம்பித்து நின்றுவிட்டதெனினும் இருதரப்பினரும் எல் அலாமின் பகுதியில் ஜாடைமாடையாகப் பொருதிக்கொண்டுதானிருந்தனர். நேசதேசத்தினர் எகிப்தில் அதிக வலுவடைந்துவந்தபோதிலும், அச்சுப்படைகள் அலக்ஸாண்டிரியா, கெயிரோ, சூயஸ் போன்ற பிரிட்டிஷ் பிரதேசங்களை நொறுக்கிக்கொண்டுதானிருந்தன. எனினும் 1942 ஜுலை ஆரம்ப முதல் நவம்பர் மாத ஆரம்பம் வரை ஆப்ரிக்கப் போர்முனை திரும்பவும் கும்பகர்ண சேவையிலீடுபட்டிருந்ததென்றுதான் சொல்லவேண்டும்.

## டார்லன் துரோகம்

இங்கு தோல்வியுற்ற பிரான்ஸைக் குறித்து கொஞ்சம் கூற வேண்டிய அவசியமேற்படுகிறது. ஏனெனில் பிரான்ஸ் தோல்வியுற்றபோதிலும் உலகெங்குமிருந்த அதன் குடியேற்ற நாடுகளின் கதி இரண்டாட்டில் பட்ட குட்டியின் நிலையை ஒத்திருந்தது. மேஜினட் அரண் அச்சுப்படைகளால் துளைக்கப்பட்டுவிட்டதன் விளைவாக பிரஞ்சு மந்திரி சபையில் நெருக்கடியேற்பட்டு, மார்ஷல் பெத்தேன் தலைமையில் நிறுவப்பட்ட புதிய பிரஞ்சு மந்திரி சபை ஹிட்லரோடும், முஸோலினியோடும் யுத்த நிறுத்த ஒப்பந்தம் 26-4-1940-ல் செய்துகொண்டதென ஏற்கனவே கூறியுள்ளோம். அவ்வொப்பந்தப்படி அன்று வரை ஜெர்மன் வசமான (பிரஞ்சுத் தலைநகராகிய பாரிஸ் பட்டணம் உள்பட) பிரஞ்சுப் பிரதேசம் ஜெர்மனியிடமும், அதுவரை ஜெர்மனியால் ஆக்கிரமிக்கப்படாது மீந்திருந்த பிரஞ்சுப் பிரதேசம் மார்ஷல் பெத்தேன் சர்க்காரிடமுமாக இருந்துவந்தன. பெத்தேன் சர்க்காருக்கு விஷி என்ற பிரஞ்சுப்பட்டணம் இருப்பிடமாகியது. அதனால் பெத்தேன் பிரஞ்சு சர்க்காரை விஷி பிரஞ்சு சர்க்கார் என்றும் கூறுவதுண்டு. விஷி சர்க்காரின் தரை, கடல், விமானப் படைகளின் பிரதம தலைவராக பிரஞ்சு அட்மிரல் டார்லன் நியமிக்கப்பட்டிருந்தார். அசல் பிரான்ஸ் தோல்வியுற்றபோதிலும், அதன் குடியேற்ற நாடுகளைக்கொண்ட அதன் சாம்ராஜ்யத்தை நிலைகுலையாதபடி பாதுகாக்க வேண்டுமென்பது விஷி சர்க்காரின் கருத்து. ஆனால் பிரிட்டன் சும்மா இருக்கக்கூடிய நாடா? தன்னைத் தனியாகப் போர்புரியும்படிவிட்டுவிட்டு, பிரான்ஸ் அச்சு

நாடுகளுடன் யுத்த நிறுத்த ஒப்பந்தம் செய்துகொண்டதற்கு விஷி சர்க்கார்தான் காரணமென்பதை நன்கறிந்து, அதற்கு அதாவது தனது மாஜி நண்ப நாடாகிய பிரான்ஸிற்கு எதிராக நடக்கப் பிரிட்டன் தீர்மானித்தது. டன்கர்க்கிலிருந்து இங்கிலந்துக்குத் தப்பியோடிய எண்ணற்ற பிரிட்டிஷ், பிரஞ்சுத் துருப்புகளில் பிரஞ்சு ஜெனரல் டிகாலேயுமிருந்தார். அவர் தலைமையில் லண்டனில் ஓர் "சுதந்திர பிரஞ்சு சர்க்காரை" பிரிட்டன் சிருஷ்டித்தது. இருதரப்பிலுமே பிரசாரம் வேகமாயிருந்தது. பிரஞ்சுக் குடியேற்ற நாடுகள் அனைத்தும் தன் பக்கமாகச் சேர்ந்து ஜெர்மனிக்கெதிராகப் போர்புரிய வேண்டுமென்றார் "சுதந்திர பிரஞ்சுத் தலைவர்" ஜெனரல் டிகாலே. ஆனால் தனது சுயநலத்திற்காகப் பிரிட்டன் நடத்தும் இந்த யுத்தத்தில் பிரஞ்சுக்குடியேற்ற நாடுகள் கலந்துகொள்ளக்கூடாதென்றும், அவைகள் தாய் நாட்டின் துரோகியாகிய டிகாலேயின் வார்த்தைகளுக்குச் செவி சாய்க்காது விஷி சர்க்காரிடம் விசுவாசமாயிருப்பதுதான் பிரஞ்சு கௌரவத்திற்கு அழகென்றும் மார்ஷல் பெத்தேன் விளம்பரப் படுத்தினர். என்றாலும் டிகாலேயின் வார்த்தைகளும் சில பிரஞ்சுக்காரர்களை வசீகரித்து விட்டன. பிரஞ்சு இந்தியா டிகாலே பக்கம். ஏனெனில் அதைச் சுற்றியிருப்பது பிரிட்டிஷ் பலமல்லவா? ஆனால் இந்தோ சீனா, சிரியா, மொராக்கோ, அல்ஜீரியா, டுனிஸியா, வடமேற்கு ஆப்ரிக்கா, நிரக்ஷரேகை ஆப்ரிக்கா, மெடகாஸ்கர், மார்ட்டினிக், குடிலோப் போன்ற ஆசிய—ஆப்ரிக்க—மேற்கிந்தியதீவுப் பிரஞ்சுக் குடியேற்ற நாடுகள் விஷி சர்க்காரிடம் தங்கள் விசுவாசத்தை உறுதிப்படுத்தின.

எனவே பிரிட்டன் டிகாலேயைப் பயன்படுத்திக்கொண்டு பிரஞ்சுக் குடியேற்ற நாடுகளைக் கபளீகரம் செய்யும் பணியில் ஈடுபடலாயிற்று. பிரான்ஸ் தோல்வியுற்றதும் முதன்முதலாக பிரஞ்சு மேற்காப்பிரிக்காவைப் பிடித்துக்கொள்ள எண்ணி பிரிட்டன் அதன் தலைநகராகிய டாக்கரைத் தாக்கியது. . ஆனால் அங்கிருந்த பிரஞ்சுப் படைகள் பிரிட்டிஷ்—டிகாலே படைகளைக் கடுமையாகத்தாக்கி விரட்டியடித்தன. ஆனல்கிரீட்டில்தோற்றோடிய பிரிட்டிஷ் துருப்புகளும், டிகாலே துருப்புகளும் மேற்காசியாவிலிருந்த பிரஞ்சு சிரியாவைப் பிடித்துக்கொண்டன. இதற்கிடையில் மேற்கிந்தியத் தீவுகளிலிருந்த பிரஞ்சுக் குடியேற்ற நாட்டு கவர்னர்களும் பிரிட்டிஷ்-டிகாலே-அமெரிக்கக் கம்பெனியின்

தேனுெழுரும் வார்த்தைகளைச் சிரமேற்கொண்டதாகத் தெரியவந்தது. இவ்வளவும் 1940-ல் பிரஞ்சு சாம்ராஜ்யத்திற்கேற்பட்ட சித்திரவதைகளாகும். ஜப்பான் இனிமேல் மௌனம் சாதித்துக்கொண்டிருந்தால் அதன்பாடு ஆபத்தாகி விடும்போலிருந்தது. ஏற்கனவே ஜப்பானைச் சுற்றிவேலிகட்டிவரும் ஆங்கிலோ-அமெரிக்கர்களின் திருஷ்டி அடுத்தபடியாக பிரஞ்சு-இந்தோ சீனுவின் மீதுதான் கட்டாயமாக விழநேருமென்பதை ஜப்பான் நன்குணர்ந்து கொண்டது. எனவே 1941-ம் வருட மத்தியில் விஷி சர்க்காரின் ஆலோசனைக்கிணங்க பிரஞ்சு-இந்தோ சீனுவின் கவர்னர் ஜெனரலாகிய அட்மிரல் டிக்கா இந்தோ சீனுவை ஜப்பானின் பாதுகாப்பில் விட்டுவிட ஒப்புக்கொண்டார். அதன் பிரகாரம் ஜப்பானிய துருப்புகள் பிரஞ்சு இந்தோ சீனுவிற்குள் பிரவேசித்து விட்டன. 8-12-1941-ல் ஆரம்பமான கிழக்காசிய யுத்தத்தில் பிரிட்டிஷ் நேசதேசத்தினர் அறவே தோல்வியுற்றேடியதன் பயனுக பஸிபிக் மகாசமுத்திரம், வங்காள விரிகுடா, இந்து மகாசமுத்திரம் ஆகியவற்றில் 1942-முதல் ஜப்பானின் பலம் அதிகரிக்கலாயிற்று. எனவே பிரிட்டிஷ் நேசதேச திருஷ்டி 1942 மேயில் ஆப்ரிக்காவின் கிழக்கிலுள்ள பிரஞ்சு மெடகாஸ்கர் மீது விழலாயிற்று. ஜப்பான் பிரஞ்சு இந்தோ சீனுவைப்போல் இதையும் பிடித்துக்கொள்ளாதபடி தடுப்பதற்காகவே தாம் அதைக் கைபற்றுவதாக நேசதேசத்தினர் கூறினர். அங்கிருந்த பிரஞ்சுத்துருப்புகள் மிகக்கடுமையாகப் பிரிட்டிஷ் துருப்புகளை எதிர்த்தனவென்று கூறப்பட்டதெனினும் பிரஞ்சு மெடகாஸ்கர் 1942 அக்டோபர் முடியு முன்மே பிரிட்டிஷார் வசமாகிவிட்டது.

மகா கிழக்காசிய யுத்தத்தினுல் அச்சு நாடுகளுக்கெதிராகவும், பிரிட்டனுக்குச் சாதகமாகவும் இன்றைய யுத்தத்தில் கலந்துகொண்ட அமெரிக்கரும் (U. S. A.), பிரிட்டனும் இப்பொழுது ஆப்ரிக்காவில் மீந்துள்ள பிரஞ்சு பிரதேசங்களையும் பிடித்துக்கொண்டு, பிறகு அங்கிருந்து ஐரோப்பாமீது தாக்குதல் செய்ய கருத்துற்றன போலும். ஆங்கிலோ அமெரிக்கத் துருப்புகளும், தளவாடங்களும் ஆப்ரிக்காவில்வந்து மலைபோல் குவிந்து கொண்டிருந்தன. இதுவரை தூங்கிக்கொண்டிருந்த வட ஆப்ரிக்கப் போர்முனை 23-10-1942-ல் திரும்பவும் விழித்துக்கொண்டது. 1942 நவம்பர் மாத ஆரம்பத்தில் அமெரிக்

கத் துருப்புகள் வடமேற்காப்ரிக்கா, மொராக்கோ, அல்ஜீரியா, டுனிஸியா ஆகிய பிரஞ்சுப்பிரதேசங்களை ஆக்கிரமித்துக்கொள்ளும் கடவடிக்கைகளில் ஈடுபட்டன. ஆங்கிலோ-அமெரிக்கர்களின் இத்தகைய ஆக்கிரமிப்பைத் தடுக்க பிரஞ்சுப் படைகளுக்குத் தலைமை வகித்து யுத்தத்தைநடத்தும்படி விஷி சர்க்கார் தலைவராகிய மார்ஷல் பெத்தேன் அட்மிரல் டார்லனை ஆப்ரிக்கப் போர் முனைக்கு அனுப்பிவைத்தார். ஆனால் அட்மிரல் டார்லன் போனதும் ஆங்கிலோ-அமெரிக்கர்களுக்கு எதிராகப் போர்புரிய வேண்டாமென தன் படைகளுக்கு உத்திரவிட்டுத் தானும் டிகாலே கோஷ்டியில் சேர்ந்துகொண்டார். இதனால் ஆப்ரிக்காவிலிருந்த சகல பிரஞ்சுப் பிரதேசங்களும் 1942 நவம்பருக்குள் பிரிட்டிஷ் நேசதேச வசமாய்விட்டன. இதற்கிடையில் எகிப்திலிருந்த பிரிட்டிஷ் படைகள் ஜெனரல் அலக்ஸாண்டர் தலைமையில் கடற்கரையோரமாகவே மேற்கு நோக்கிப்பாய்ந்தன. மெர்ஸாமாத்ரு, ஸிடிபரானி, சோலம், டோப்ருக், டெர்னு, பெங்காஸி ஆகிய சகல பிரதேசங்களும் திரும்பவும் பிரிட்டன் வசமாகிவிட்டன. திரிபோலி ஒன்றுதான் லிபியாவில் இத்தாலிக்கு 1942 டிசம்பரில் மீந்திருந்ததெனினும் அச்சுத் துருப்புகள் டுனிஸியாவில் நேசதேச முன்னேற்றத்தைக் கடுமையாக எதிர்த்து வந்தன.

நிற்க டார்லன் செய்த துரோகத்தை ஹிட்லர் அசட்டை செய்ய முடியாது. பிரஞ்சுக் குடியேற்ற நாடுகளைப் பிரிட்டிஷ் நேசதேசத்தினருக்குக் கொடுத்து, அவற்றின் மூலம் பிரான்ஸின் வழியாக ஜெர்மனி மீது ஆங்கிலோ—அமெரிக்கர்களைக் கொண்டு படையெடுக்கவேண்டுமென்ற ஓர் கக்ஷியினர் இனியும் பிரான்ஸில் இருந்துவந்தனர் என்பதை ஹிட்லர் டார்லன் சம்பவத்திற்குப் பிறகு நன்கறிந்து கொண்டார். விஷி பிரஞ்சு சர்க்கார் மீது ஹிட்லருக்கு அவநம்பிக்கை ஏற்படுவது சகஜம். ஆனால் அவர் ஓர் மேதாவி—கௌரவ புருஷர். எனவே ஐரோப்பாவை ஆங்கிலோ—அமெரிக்கத் தாக்குதலினின்று காக்க வேண்டிய கடமை தனக்கிருப்பதால் பிரான்ஸ் முழுவதையும் தனது மேல்பார்வையில் வைத்துக்கொள்ளவேண்டியதவசியமெனும் நிலைமையை மார்ஷல் பெத்தேனுக்குக் கடிதமூலமாக விளக்கிக்காட்டி 24-6-1940-ல் ஆக்கிரமிக்கப்படாது மீந்திருந்த பிரான்ஸிற்குள்ளும்கூட தனது துருப்புகளை 11-11-1942-ல்

அனுப்பிவிட்டார். ஹிட்லரைப் பின்பற்றி முஸோலினியும் தனது துருப்புகளைப் பிரஞ்சு கார்ஸிகாவிற்குள் அனுப்பி விட்டார். என்றாலும் மார்ஷல் பெத்தேனின் வேண்டுகோளுக் கிணங்க பிரஞ்சுக் கடற்படைத் தளமாகிய டூலனை அச்சுத் துருப்புகள் ஆக்கிரமிக்கவில்லை. ஆனால் டூலனிலும் ஏதோ விப ரீதம் நடக்கப்போவதை ஹிட்லர் முன்னதாகவே அறிந்து அதையும் ஆக்கிரமித்துக்கொள்ளும்படி தனது துருப்புகளை 26-11-42-ல் அனுப்பிவிட்டார். என்றாலும் அச்சுப்படைகள் அங்குவந்து சேருவதற்கிடையில் அங்கிருந்த பிரஞ்சுக் கடற் படை தற்கொலை செய்துகொண்டுவிட்டது. இதுவரையில் விஷியை இருப்பிடமாகக்கொண்டிருந்த பிரஞ்சு சர்க்கார் ஜெர் மன் வசமுள்ள பாரிஸ் பட்டணத்திற்கு மாற்றப்பட்டுவிட்டது. மகாகிழக்காசிய யுத்தத்திற்குப் பிறகு அப்பிரதேசத்தில் ஏற்பட்ட சுதந்திர இந்திய சர்க்கார், சுதந்திர பர்மா சர்க்கார், சுதந்திர இந்தோனேஷிய சர்க்கார், சுதந்திர பிலிப்பைன் சர்க்கார், தாய் லந்து சர்க்கார் ஆகியவற்றின் நிலைமையையும், ஜெர்மன் வெற்றி யின் கீழ் நிறுவப்பட்டிருந்த பிரஞ்சு சர்க்கார் நிலைமையையும், பிரிட்டனில் நிறுவப்பட்டிருந்த டிகாலே பிரஞ்சு சர்க்கார் நிலை மையையும், இன்று ஒப்பிடுவதில் தவறிராது. ஆப்ரிக்காவின் டூனிஸியாவில் இருதரப்பினருக்குமிடையில் கோரப்போர் நடந் தது. பெங்காஸி, டோப்ருக் போன்ற ஸ்தலங்கள் மூன்று முறை கைமாறியிருக்கின்றன. வட ஆப்ரிக்கா முழுதும் இதில் பாழாகி யிருக்குமென்று நம்புகிறோம். 1942 டிசம்பர் இறுதியில் அட்மி ரல் டார்லன் வட ஆப்ரிக்காவில் யாரோ ஒருவரால் கொலைசெய் யப்பட்டுவிட்டார்.

1943-ம் வருட ஆரம்பத்திலும் வட ஆப்ரிக்காவில் யுத்தம் கடுமையாக நடந்தது. 13-5-1943-ல் கிட்டத்தட்ட 3 லக்ஷம் அச்சுத்துருப்புகள் சிறைபிடிக்கப்பட்டதோடு ஆப்ரிக்கா முழு தும் பிரிட்டிஷ், அமெரிக்க நேசதேசங்கள் வசமாயின. இதி லிருந்து அச்சு நாடுகளுக்கும் சனியன் பிடித்தது. நேசதேசங்க ளுக்கு சுக்கிரதசையாரம்பித்தது.

## ருஷிய—ஜெர்மன் யுத்தம்.

ஹிட்லரின் யுத்த நிபுணத்துவம் நிகரற்றது. இடம் பொருள் ஏவலுக்குத் தக்கபடி நடந்துகொள்ளும் சாமர்த்

திய முள்ளவர்கள்தான் இன்றைய உலகில் வெற்றி வீரர்க ளாய் விளங்க முடியும். இந்த லக்ஷணம் ஹிட்லரிடம் பரி பூரணமாய் இருந்தது. அங்ஙனமின்றேல் ஜெர்மன் விரோதி யான ரஷியாவுடன், அவர் முகத்தில் அரும்புகட்டிய காலம் தொட்டு எதை அடியோடு அழித்துவிட வேண்டுமென மனே வுறுதி கொண்டிருந்தாரோ அந்த ரஷியாவுடன், அவர் 1939 ஆகஸ்ட் மாத இறுதியில் 10-வருட கால அனுக்கிரமிப்பு ஒப் பந்தம் செய்துகொண்டிருக்கவுமாட்டார். அல்லது அங்ஙனம் செய்துக்கொண்ட பிறகும் அதன் மீது 22-6-1941-ல் போர் தொடுத்திருக்கவுமாட்டார்.

ரஷிய-ஜெர்மன் யுத்தத்திற்கு ஹிட்லரையோ அல்லது ஸ்டாலினையோ அல்லது சர்ச்சிலேயோ தனியாகக் குறைசொல்ல முடியாது. அதாவது ஜெர்மனி, ரஷியா, பிரிட்டன் ஆகிய மூன்றும் சேர்ந்து செய்த வம்புதான் இது.

முதலாவது ஜெர்மன் கருத்தை விளக்குவோம். ரஷியா போலந்திலும் ஜெர்மனிக்குப் பங்காளியாகப் போட்டிபோட் டது. அடுத்தபடி பின்லந்தின் மீதும் யுத்தம் தொடுத்தது. இத்தோடும் நிற்காமல் லேட்வியா, லிதுவேனியா, எஸ்டோ னியா ஆகிய நாடுகளையும் தன்வசப்படுத்திக்கொண்டது. இது வும் போதாதென ருமேனியாவிடமிருந்தும் தனது மாஜி பிர தேசமாகிய பெஸரேபியாவையும், வடக்கு புக்கோவினுவையும் வாங்கிக்கொண்டது. இவ்வளவு கிடைத்த பிறகும் தென் கி ழக்கு ஐரோப்பிய நாடுகளில் தன் வேலைத்தனத்தைச் சிறுகச் சிறுகக் காட்டி தன் செல்வாக்கை ஐரோப்பாவில் அதிகரித் துக்கொண்டே வந்தது. மேலும் ஜெர்மனிக்கும், ரஷியாவுக்கு மிடையில் முன்புபோலந்து, லிதுவேனியா, எஸ்டோனியா, லேட் வியா ஆகிய நான்கு நாடுகளிருந்தன. ஆனல் இந்நான்கும் இப் பொழுது இருந்தவிடம் தெரியாமல் போய்விட்டபடியால் ரஷி யாவும், ஜெர்மனியும் பொருதுவதற்குத் தடையெதுவும் இல்லா மற் போயிற்று. ரஷியாவை ஒழிக்க ஜெர்மனி நினைத்ததுபோல் ஜெர்மனியை நசுக்க ரஷியா உத்தேசித்திருக்கவேண்டும். அங் ஙனமின்றேல் ஸ்டாலின் ஹிட்லரோடு அனுக்கிரமிப்பு ஒப்பந்தம் செய்துகொண்ட பிறகு பிரிட்டிஷ் பிரதம மந்திரி சர்ச்சிலனுப்பிய விசேஷ தூதுவரான சர் ஸ்டாபோர்டு கிரிப்ஸுடன் ஜெர் மனிக்கு விரோதமாக ரகசியப் பேச்சுவார்த்தைகள் நடத்த

வேண்டிய அவசியமேற்பட்டிராதென்பது ஹிட்லர் உலகோரிடம் பகிரங்கமாகக் கூறிய சுசூகி. ஆனல் அவருக்கு உள்ளூர வேறு முகாந்திரங்கள் இருந்திருக்கவேண்டும். ரஷியா நாளுக்குநாள் பலமதிகரித்து வருவது ஜெர்மனிக்கு ஆபத்து. ஆரம்பத்திலேயே ரஷியாவுடன் போராட நேர்ந்திருந்தால் இன்று ஜெர்மனியின் நிலைமை வேருயிருக்கும். அதனுல்தான் தான் என்றும் பாதுகாப்பதாக பின்லந்து, லேட்வியா, எஸ்டோனியா, லிதுவேனியா ஆகிய நாடுகளுக்கு அபயமளித்து அவைகளை ரஷியாவிற்கு எதிராகத் தன்பக்கம் வைத்திருந்தும்கூட, ரஷியா அவைகளைத் தன்னிடமாக்கிக்கொண்டபோது ஹிட்லர் பேசாதிருந்துவிட்டார். என்ருலும் இப்பொழுது ஐரோப்பா முழுதும் தன் பக்கமாய்விட்டது. மேலும் பிரிட்டிஷார் யுத்தத்தை நீடிக்கச் செய்வர். அதனுல் ஐரோப்பாவில் உணவுப்பொருள் பஞ்சமேற்படும். ரஷியா மனதார ஜெர்மனியுடன் ஒத்துழைத்து, உதவி செய்தால்தான் அப்பஞ்சத்தைத் தவிர்க்கமுடியும். ஆனல் ரஷியா ஒருகாலும் தனக்குதவி செய்யாதென்று தெரிந்தேதான் ஹிட்லர் அதோடு ஒப்பந்தம் செய்துகொண்டிருந்திருக்கவேண்டும். நீண்டகால யுத்தத்தைச் சமாளிப்பதற்காகவேண்டி உணவுப் பொருள்களுக்குப் பஞ்சமேற்படாதிருக்கவும், ரஷியாவின் செல்வாக்கை ஒழிக்கவுமாக ஹிட்லரின் திருஷ்டி இப்பொழுது ரஷியாவின் மீது பாய்ந்தது.

நிற்க ரஷியாவின் கருத்தை நோக்குவோம். கடிக்கும் நாய் குலைக்காது. இது ரஷியாவுக்கு நன்கு பொருந்தும். அது என்றுமே எதையும் வெளிப்படையாகக் கூறியதாகத்தெரியவில்லை. மௌனமாகவே காரியவாதியாய் இருந்துவந்திருக்கிறது. மூன்ருவது சர்வதேசப் பொதுவுடமை மகாநாட்டுத் தீர்மானப்படி உலகெங்கும் பொதுவுடமைக் [கொள்கையைப் பரப்பவேண்டுமென்பதுதான் ரஷியாவின் முழுநோக்கம். ஆனல் மேற்கில் ஜெர்மனியும், கிழக்கில் ஜப்பானும் இதை எதிர்த்து வந்தன. 1939-40-ல் ஜெர்மனியும், ஜப்பானும் ரஷியாவுடன் அனுக்கிரமிப்பு ஒப்பந்தம் செய்துகொண்ருந்தன வெனினும் இருகோடிகளிலும் ரஷியா ஜாக்கிரதையாகத்தான் இருந்துவந்தது. இதற்கு இரு காரணங்கள் இருந்திருக்க வேண்டும். ஒன்று ஜெர்மனி மீதும், ஜப்பான் மீதும் ரஷியா அவநம்பிக்கை கொண்டிருக்க வேண்டும். (பின் கால நிகழ்ச்சிகளைக் கவனிக்குக்கும்போது

அவ்வித அவநம்பிக்கையை அநீதமானதென்று சொல்வதற்கில்லை. மற்றொன்று அந்நாடுகள் யுத்தத்தில் கஷ்டமுறும் சமயம் பார்த்து அவைகள்மீது ரஷியா படையெடுத்து அவைகளில் பொதுவுடமையை ஸ்தாபிக்க உத்தேசித்திருந்திருக்கவேண்டும். அவ்வித சமயத்தை எதிர்பார்த்து ரஷியா உள்ளூர தயாராகி வந்ததென்பதில் ஐயமில்லை. அதற்கு பூர்வாங்கமாக ரஷியா 1941 ஆரம்பத்தில் சர் ஸ்டாபோர்டு கிரிப்ஸுடன் பேச்சுவார்த்தைகள் நடத்திவந்தது.

மூன்றாவதாக பிரிட்டனின் வஞ்சகத்தை சற்று பிரஸ்தாபிப்போம். 1939 ஆகஸ்டில் ரஷியாவுடன் ஒப்பந்தம் செய்துகொள்ளாது ஏமாந்துபோன பிரிட்டன் 1941-ல் திரும்பவும் ரஷியாவுடன் பேச்சுவார்த்தைகளை நடத்துவதற்கு நேரடியான காரணமெதுவுமில்லை. ஏனெனில் ரஷியா ஏற்கனவே பிரிட்டனின் எதிரியாகிய ஜெர்மனியுடன் ஒப்பந்தம் செய்து கொண்டிருக்கிறது. அப்படியிருந்தும் அது இப்பொழுது ரஷியாவுடன் பேச்சுவார்த்தைகள் நடத்தியதென்றால் அதற்கு "ரஷியாவுக்கும், ஜெர்மனிக்குமிடையில் யுத்தமேற்படச்செய்ய பிரிட்டன் சூழ்ச்சி செய்து வருகிறது" என்றுதான் அர்த்தம். கடைத்தேங்காயை எடுத்து வழிப்பிள்ளையார் தலையில் உடைப்பதுபோல் பிரிட்டன் யாருடைய பிரதேசத்திலாவது ரஷியாவுக்குச் சலுகை காட்டுவதாக வாக்குக்கொடுத்திருந்தாலொழிய ஸ்டாலின் கிரிப்ஸுடன் பேச ஆரம்பித்திருக்கமாட்டார். சர்வலோகத்திலும் ரஷியா தனது பொதுவுடமைக் கொள்கையைப் பரப்புவதற்கு பிரிட்டன் முட்டுக்கட்டையாயிராதென ஸ்டாலினை நம்பும்படி செய்வதற்காகவே சர்ச்சில் பழுத்த பிரிட்டிஷ் சமதர்மவாதியாகிய ஸ்டாபோர்டு கிரிப்ஸை மாஸ்கோவுக்கு அனுப்பியிருக்கவேண்டும். மேலும் ஜெர்மன் தோல்வியையே ரஷியா அதிகமும் விரும்பியிருக்கும். ஏனெனில் அப்படியானால்தான் ஐரோப்பாவெங்கும் பொதுவுடமை சுலபத்தில் பரவும். ஐரோப்பா முழுமையும் பொதுவுடமை பரவிவிட்டால், பிறகு உலகின் இதர பாகத்தில் அது பரவுவது ஓர் பிரமாதமான காரியமல்ல.

இன்றைய உலக மகாயுத்தமாரம்பித்த 1-9-1939-லிருந்து 1-9-1942 முடிய மூன்று வருட காலத்தில் உலகம் பெரிதும் திடுக்கிட்டுப் பரபரப்படையக்கூடிய மூன்று சம்பவங்கள் நிகழ்க்

திருக்கின்றன. ஒன்று 1-9-1939-ல் ஜெர்மன் துருப்புகள் போலந்து மீது பிரவேசித்தது. இரண்டாவது 22-6-1941-ல் ஜெர்மன் துருப்புகள் ரஷியா மீது பாய்ந்தது. மூன்றாவது 8-12-1941-ல் ஜப்பானியத் துருப்புகள் கிழக்காசியாவிலிருந்த ஆங்கிலோ—அமெரிக்க—டச்சுப் பிரதேசங்கள் மீது படையெடுத்தது. ஈண்டு நாம் பிரஸ்தாபிக்கப்போவது ரஷிய—ஜெர்மன் யுத்தமாகும்.

22-6-1941-ல் ஹிட்லர் ரஷியா மீது பாயும்படி தனது துருப்புகளையனுப்பிவிட்டார். உலகமே அதிசயித்துவிட்டது. 10 வருட அனுக்கிரமிப்பு ஒப்பந்தம் நடந்து இனியும் இரண்டு வருடங்கள் கூட முடியவில்லை. இது ஓர் புறமிருக்க உலகிலேயே மகா சிறந்த போர்வீரர்களைக்கொண்ட நாடென பெயர்பெற்ற பிரான்ஸே ஜெர்மன் துருப்புகளின் வேகத்தைத் தாங்கொணாது 39 நாட்களில் சரணாகதியடைந்துவிட்டபோது, ரஷியா ஜெர்மனிக்கு எந்த மூலைக்கு என்றும், துளிபோன்ற பின்லந்திடம் மாட்டிக்கொண்டு விழி பிதுங்கிய ரஷியா ஜெர்மனியால் சில தினங்களுக்குள் சின்னாபின்னப்படுத்தப்பட்டுவிடுமென்றும் பலர் கருதினர். இது இப்படியிருக்க பிரிட்டன் இத்தருணத்தை இழக்கவில்லை. பிரிட்டன் அல்லும்பகலுமாக கனவு கண்டு கொண்டிருந்ததும் இதுதான். அதாவது ரஷியாவுக்கும், ஜெர்மனிக்குமிடையில் யுத்தமேற்படுவது. ஜெர்மனி ரஷியா மீது யுத்தப்பிரகடனம் செய்ததோ இல்லையோ, உடனே பிரிட்டனுக்கும் ரஷியாவுக்குமிடையில் கூட்டுறவு ஒப்பந்தமேற்பட்டுவிட்டது. பிரிட்டன் ஜெர்மனியிடம் இதுநாள்வரை தோல்வியுற்று அடைந்த நஷ்டத்திற்கு ரஷியா இந்த யுத்தத்தில் இறங்கியது ஓர் பெரும் ஆறுதலாயிற்று. ரஷியா மட்டிலும் இந்த யுத்தத்தில் சிக்காதிருந்திருந்தால் இதற்கிடையில் பிரிட்டன் இருந்த விடந்தெரியாது போயிருக்கும்.

ரஷிய-ஜெர்மன் யுத்தத்தை விவரிக்கு முன்பு இன்றைய ரஷியாவின் பூகோள அமைப்பைப்பற்றி சிறிது கூறவேண்டும். புராதன ரஷியா ஆறு பகுதிகளைக் கொண்டிருந்தது. பின்லந்தும் போலந்தும் போக மீந்துள்ள இன்றைய ரஷியா 1. அசல் ரஷியா, 2. உக்ரேன், 3. காக்கேஷியா, 4. டஜிகிஸ்தான், 5. வெள்ளை ரஷியா, 6. டர்க்மனிஸ்தான், 7. உஸ்பகிஸ்தான் எனும் ஏழு சமதர்மக் குடியரசுகளைக் கொண்டிருக்கிறது. இதன் தலை

நகரம் மாஸ்கோவாகும். ரஷியாவில் சுமார் 17 கோடி ஜனங்கள் வசிக்கின்றனர். இங்கு ஏராளமான கோதுமையும், உலோகப் பொருள்களும் உற்பத்தியாகின்றன. பெரும்பான்மையான கோதுமை உக்ரேனிலும், ஏராளமான பெட்ரோல் காக்கேஸியாவிலுமாக உற்பத்தியாகின்றன. புதிய ரஷியாவில் ஒவ்வொருவரும் ஒவ்வொரு யுத்தவீரர். ஒவ்வொரு இடமும் ஒவ்வொரு யுத்தமுனை.

இந்நிலைமையில்தான் ஜெர்மன் துருப்புகள் கோதுமை அதிகமாக உற்பத்தியாகும் உக்ரேன்மீது 22-6-1941-ல் பாய்ந்தன. இதற்கிடையில் ஐரோப்பா முழுதும் ஜெர்மன் ஆதிக்கத்திற்கு வந்துவிட்டபடியால் ஸ்வீடன், பிரிட்டன், ஸ்விட்ஸர்லந்து ஆகிய மூன்றைத்தவிர இதர சகல ஐரோப்பிய நாடுகளும் அதே சமயத்தில் ரஷியாமீது யுத்தப்பிரகடனம் செய்து தம் துருப்புகளை ஜெர்மானியர்களுக்கு உதவியாக அனுப்பின. ரஷியர்களுக்கும், ஜெர்மன் நண்ப நாட்டினர்களுக்குமிடையில் பிரளயகால யுத்தம் ஆரம்பித்தது. யுத்தமென்றால் ரஷிய-ஜெர்மன் யுத்தம்தான் யுத்தம். இதர முனைகளில் நடந்தவற்றை விளையாட்டுகளென்றுதான் சொல்லவேண்டும். ரஷியா எவ்வளவோ கடுமையாக எதிர்த்துப் போராடிப்பார்த்ததென்றாலும், அது எதிரியின்மீது எறியடிக்கமுடியவில்லை. ஐரோப்பா கண்டம் அடங்கலும் தன்னை ஏககாலத்தில் தாக்கவாரம்பித்ததே இதற்கு காரணம். எனவே உக்ரேன் தலைநகராகிய கீவும், உக்ரேன் துறைமுகமாகிய ஒடெஸாவும் ஜெர்மன் வசமாகின. இதோடு ஜெர்மானியர்கள் வெள்ளை ரஷியாவையும், லெனின்கிராடையும் தாக்கினர். மாஸ்கோவுக்கு 30 மைல்களுக்கருகில் போய்விட்டனர். ரஷிய சர்க்காரின் இருப்பிடம் மாஸ்கோவிலிருந்து அதற்கு சுமார் 500 மைல்களுக்குக் கிழக்கிலுள்ள குபிஷெவ் நகரத்திற்கு மாற்றப்பட்டது.

இந்நிலைமையில் ரஷியாவில் மழைகாலம் ஆரம்பமாயிற்று. டிசம்பர், ஜனவரி, பிப்ருவரி ஆகிய மூன்று மாதங்கள்தான் மழைகாலம். ரஷிய மழைகால நிலைமைக்கும், மற்றைய நாட்டு மழைகால நிலைமைக்கும் யானைக்கும் பூனைக்குமுள்ள வித்தியாசமுண்டு. ரஷியாவில் மழைகாலம் தொடங்கிவிட்டால் ஆறு, கிணறு, குளங்களெல்லாம் அப்படியே கல்போல் உறைந்துவிடும். வீட்டைவிட்டு வெளியில் போனவர் பனியால் மூடப்பட்டு மறைய

வேண்டியது தான். அந்நியர்களின் கதி அங்ஙனமாக நேரிடினும், ரஷியர்களுக்கு இக்காலம் மிகவும் சாதகமானதாகும். அகில ஐரோப்பாவின் ஏகச்சக்ராதிபதியாக விளங்கிய நெப்போலியன்கூட 1812-ம் வருட மழைகாலத்தில் ரஷியாவில் தோற்றோடினன். ரஷிய மழைகாலம் அவ்வளவு கொடியது.

மனிதன் செயற்கையை சாஸ்வதமாக வென்றுவிடலாம். ஆனால் இயற்கை யாணையை அவ்விதம் வெல்லமுடியாது. ஹிட்லர் மகாமேதாவி. அவர் காரியப்பிரியரே யன்றி வீரிப்பிரியரல்ல. எனவே ரஷிய மாரிகால கொடூரத்தை நன்கறிந்து ரஷிய யுத்தத்தைத் தற்காலிகமாக 1941 டிசம்பரில் நிறுத்திவைத்தார். ரஷியர்கள் அந்த வசந்த-கோடை-கனி காலங்களில் (மார்சு முதல் நவம்பர் வரை) இழந்த பிரதேசங்களில் எவ்வளவைத் திரும்பப்பிடித்தனர் என்று நமக்குத்தெரியாது. ஆனால் 1941-ம் வருட மழைகாலத்தின் கொடுமை மிகவும் சகிக்கமுடியாததென்றும், அதனாலேயேதான் ரஷிய யுத்தம் நிறுத்தப் பட்டதென்றும், அதுவரை பிடிபட்ட ரஷியப்பிரதேசங்களை அந்த மாரிகாலத்தில் ஜெர்மானியர்கள் பலப்படுத்தினரென்றும், அடுத்த வசந்தகாலத்தில் ரஷியாமீது திரும்பவும் படையெடுப்பு நடக்குமென்றும் ஹிட்லர் 26-4-1942-ல் பெர்லினில் நடந்த ரைக்ஸ்டாக் மகாநாட்டில் ஓர் பிரசங்கம் செய்தார். ரஷிய-ஜெர்மன் 1500-மைல் நீளப்போர்முனை இவ்விதமாக சுமார் 5 மாதங்களாக உறங்கத்தொடங்கியது.

ஆனால் 8-5-1942-ல் ஜெர்மன் படையெடுப்பு திரும்பவும் ஆரம்பமாயிற்று. கடந்த வருடம் நடந்ததைவிட இத்தடவை இனியும் அதிக பயங்கரமாக யுத்தம் நடைபெற்றது. இம்முறை படையெடுப்பு ஆரம்பமானபோது அரைவாசி உக்ரேன் மட்டிலுந்தான் கடந்த வருடத்தில் ஜெர்மன் வசமாகி யிருந்ததெனத் தெரிந்தது. இம்முறை ஜெர்மன் தாக்குதல் லெனின் கிராட் போன்ற வட ரஷியப் பிரதேசங்கள் மீதும், மாஸ்கோ போன்ற மத்திய ரஷியப் பிரதேசங்கள் மீதும் ஆரம்பிக்கப்படவில்லை. ஆனால் பாக்கியிருந்த உக்ரேன், கிரிமியா போன்ற தென்மேற்கு ரஷியப் பிரதேசங்கள் மீது ஆரம்பிக்கப்பட்டது. ஏனெனில் மழை காலத்தில் வட—மத்திய ரஷியாவின் சிதோஷ்ண ஸ்திதி படையெடுப்பாளர்களுக்கு மிகவும் பாதகமாக இருந்திருக்க வேண்டும். எனவே உக்ரேனிலும் கிரிமியாவிலும் இரு தரப்பின்

ருக்குமிடையில் மலையும், மலையும் பொருதினாற்போல் கோர யுத்தம் நடைபெற்றது. 15-5-1942-ல் கார்கோவ் வீழ்ச்சியுற்றது. என்றாலும் அங்கு ரஷிய எதிர்த்தாக்குதல்கள் மேற்கொண்டு சமார் 2 மாத காலம் வரை நடந்துகொண்டுதானிருந்தன.

ரஷிய ஜெர்மன் யுத்தமாரம்பமான காலந்தொட்டே கிரிமியத் தீபகற்பத்தைக் கைப்பற்றுவதற்காக ஜெர்மானியர்கள் கோர யுத்தம் செய்துவந்தனர். ஆனால் கார்க்கோவ் வீழ்ச்சிக்குப் பிறகு கிரிமிய யுத்தம் இனியும் கடுமையாயிற்று. கிரிமியாவிலுள்ள செபஸ்டபோல் துறைமுக அரண் மிகவும் பலம்பொருந்தியது. இதைப்பிடிக்க கடுமையான யுத்தம் 1942 ஜூனில் தான் ஆரம்பமாயிற்று. செபஸ்டபோல் யுத்தம் மிகக்கடுமையாக நடந்ததென்றுமட்டுமே சொல்லமுடியும். ஏனெனில் அந்த யுத்தத்தின் பிரத்தியக்ஷ கடூரத்தை எழுதி விவரிக்கமுடியாது. அவ்வளவு கடுமையான போர் அதுவரை உலகில் என்றுமே நிகழ்ந்ததில்லை. அவ்வளவு பலத்த ஜெர்மன் தாக்குதலையும் ரஷியா கிள்ளுக்கீரைபோல் சமாளித்துக்கொண்டு வந்தது. இச்சமயத்தில்தான் ரஷியாவின் பலத்தை உலகம் ஒப்புக்கொள்ள முன்வந்தது. என்றாலும் உலகின் மிகப் பலம்பொருந்திய மூன்று அரண்களில் ஒன்றான செபஸ்டபோல் துறைமுகக் கோட்டைக்கொத்தளம் அடங்கலும் 1-7-1942-ல் ஜெர்மானியரிடம் வீழ்ச்சியுற்றது.

செபஸ்டபோல் வீழ்ச்சியோடு கிரிமியா ஜெர்மன் வசமாயிற்றெனினும் ரஷியா அதைத் திரும்பப்பிடிக்க முயற்சி செய்திருக்கிறது. இதன் பிறகு நோவோரோஸிஸ்க், ரோஸ்டோவ் போன்ற பிரதேசங்களையும் கடும்போரிட்டு ஜெர்மானியர்கள் கைப்பற்றினர். இதனால் ரஷியாவுக்கும் கிரிமியாவுக்குமிடையில் நெருங்கிய தொடர்பில்லாது போயிற்று. நிற்க அடுத்தபடியாக ஜெர்மன் திருஷ்டி ஸ்டாலின்கிராடின் மீது வீழ்ந்தது. ஸ்டாலின் கிராட் வால்கா நதியின் மேற்குக் கரையிலிருக்கும் ஓர் மாபலம் பொருந்திய ரஷியக்கோட்டை. அதில் சுமார் 4 லக்ஷம் ஜனங்கள் வசிக்கின்றனர். இந்நகரைக் கைப்பற்றிக் கொண்டால் ஏராளமாக பெட்ரோல் எண்ணெயும், உலோகப் பொருள்களும் உற்பத்தியாகும் காக்கஸஸ் பகுதி தனக்குச் சுலபமாகக் கிடைத்துவிடுமென்பது ஹிட்லரின் கருத்து. அத்தோடு இந்தியா மீதும் ஜெர்மன் துருப்புகள் பாய நெடும்பாதை

ஏற்படும். எனவே ஸ்டாலின் கிராட் மீது கோரப்போர் ஆரம்பமாயிற்று. ஸ்டாலின் கிராட் யுத்தத்தைக் கவனித்த ஒருவர் செபஸ்டபோல் யுத்தத்தை ஓர் குழந்தைப் பிள்ளையின் விளையாட்டுச்சண்டை என்றுதான் சொல்வார். "இதோ விழுந்தது ஸ்டாலின் கிராட், அதோ விழுந்தது ஸ்டாலின் கிராட், அந்த நகருக்குள் வீட்டுக்கு வீடு சண்டை நடக்கிறது, இருதரப்பினருக்குமிடையில் மல்யுத்தம் நடக்கிறது, எனவே அது இன்னும் சிலநிமிஷ நேரத்தில் வீழ்ச்சியடைந்துவிடும், ஜெர்மன் துருப்புகள் நதிக்குக் கிழக்கே வந்துவிட்டனர்" என்று நவம்பர் மாதம் முடியும்வரையும் பத்திரிகைகளின் சண்டைநடந்து கொண்டிருந்தது. ஸ்டாலின்கிராடில் ரஷியர்களின் எதிர்ப்பு மிகவும் கடுமையானதென்று ஜெர்மானியர்கள் கூறினர். எனவே ஜெர்மன் படையின் சில பகுதிகள் டொக், டாப்ஸி போன்ற பிரதேசங்கள் வழியாக காக்கஸஸிற்குள் முன்னேற முனைந்தன. அங்கும் ரஷிய எதிர்ப்புக் கடுமைதான். என்றாலும் அச்சு யுத்த யந்திரம் நகர்ந்து கொண்டுதானிருந்தது.

இங்ஙனமிருக்க 1942-ம் வருட மாரிகாலம்வேறு போடுபோடென்று அக்டோபர் மாதத்திலேயே ஆரம்பித்து விட்டது. எனவே ஹிட்லர் தனது படையெடுப்பைத் திரும்பவும் ரஷியாவில் மழைகாலம் முடியும்வரை நிறுத்திவைக்க வேண்டியதாயிற்று. ஆனல் மாரிகாலத்தில் ரஷியத் தாக்குதல்கள் ஆரம்பமாயின.

---

## அத்தியாயம்—9

---

### கிழக்காசிய யுத்தம்

[இதில் ஜப்பான் எவ்விதம் பலமடைந்தது—அது ஏன் போரிலிறங்கியது—ஆங்கிலோ, அமெரிக்கர்கள் ஜப்பானிடமடைந்த படுதோல்வி—யுத்தகாலத்தில் ஜனங்கள் படும் அவஸ்தைகள்—ஜப்பானியரின் முரட்டு நிர்வாகம்—உள் நாட்டு எதிர்ப்பியக்கம்—மலாயாவில் ஏக காலத்தில் நடந்த மூன்று சர்க்கார்கள் போன்ற விஷயங்கள் கூறப்பட்டுள்ளன.]




## மேற்கத்தியக் குறும்பு

ஜெர்மனி, இத்தாலி, ஆகிய இரண்டையும்விட ஜப்பான் அதிக சக்திவாய்ந்ததென்பதற்கு இரு சான்றுகளுண்டு. ஷை இரு நாடுகளும் எதிரிகளிடமிருந்து கைப்பற்றியதைவிட எத்தனையோ மடங்கு அதிகமாக ஜப்பான் மிகக்குறுகிய காலத்தில் பிடித்துவிட்டது ஒன்று. அதாவது மாபலம் பொருந்திய பிரிட்டனோடன்றி, அமெரிக்காவையும் சேர்த்து உதைத்து விரட்டிவிட்டு அவைகளுக்கும், ஹாலந்துக்கும் கிழக்காசியாவில் சொந்தமாயிருந்த எத்தனையோ லக்ஷக்கணக்கான சதுர மைல்கள் விஸ்தீர்ணமுள்ள மலாயா, பிலிப்பைன், குவாம், வேக், இந்தோனேஷியா போன்ற சகல பிரதேசங்களையும் கிழக்காசிய

யுத்தமாரம்பித்த ஆறே ஆறு மாதங்களுக்குள் ஜப்பான் பிடித்துக்கொண்டது. இரண்டாவதாக அதிக ஜம்பமடித்துக்கொண்டிருந்த இத்தாலியும், ஜெர்மனியும் முதலில் சரணுகதியடைந்துங்கூட ஜப்பான் தயங்காது யுத்தத்தை தொடர்ந்து நடத்தியது. மேனுட்டு வல்லரசுகளை இவ்விதம் ஓர் ஆசிய சமூகம் தோற்கடித்து விரட்டியது உலக சரித்திரத்திலேயே இதுதான் முதல் தடவை. இவ்வித பெருங்கீர்த்திக்குப் பாத்திரமான ஜப்பான் எப்படி இவ்வளவு பலம்பெற்றதென்றும், ஏன் இந்த யுத்தத்தில் ஈடுபட்டதென்றும் தெரிந்து கொண்ட பிறகு மகா கிழக்காசிய யுத்தத்தைப்பற்றி விவரிக்கப்புகுவோம்.

ஐரோப்பாவுள்ள பிரிட்டிஷ் தீவுகள் சர்வலோக சட்டாம்பிள்ளையாக விரும்பின. ஆனல் ஆசியாவிலுள்ள ஜப்பானிய தீவுகள் ஆசியாவுக்கே சட்டாம்பிள்ளையாக விரும்பின. பிரிட்டனுக்கும், ஜப்பானுக்குமிடையிலுள்ள மற்றோர் வித்தியாசமென்னவெனில் பின்னது முன்னதைவிட உருவத்தில் சிறியது. அசல் ஜப்பானின் விஸ்தீரணம் சுமார் 260735 சதுர மைல்கள். இந்தியாவின் பரப்பளவில் ஏறக்குறைய 8-ல் ஒரு பங்கு. ஹக்கைடோ, ஹன்ஷூ, கியூஷூ, ஷிகோகு போன்ற இன்னும்பல சிறு சிறு தீவுகளைக் கொண்ட ஜப்பான் 2603 வருட சரித்திர பூர்வமானது. இத்துணை காலமாகவும் அதில் முடியாட்சியே நிலவி வந்திருக்கிறது. ஜிம்மு சக்ரவர்த்தியே இவ்வம்ச பூர்வகர்த்தா. இவரின் 124-வது சந்ததிதான் இன்றைய டாய் ஜப்பான் தென்னே ஹெய்க்கா (மகாஜப்பானிய சக்ரவர்த்தியான ஹெய்கா) ஆசியாவில் மேனுட்டினர்களால் அடிமைப்படுத்தப்படாமல் சுதந்திரமாயிருந்த நாடுகள் ஜப்பான், சீன, தாய்லந்து, ஆப்கனிஸ்தானம், ஈரான், சௌதி அரேபியா ஆகிய ஆறுதான். ஆனல் ஜப்பான் ஒன்றைத்தவிர இதரஐந்தும் பெயரளவில் மட்டும் சுதந்திரநாடுகள். மேனுட்டுக் குறும்புத்தனம் ஜப்பானிலும் 1542-ல் நுழைய வாரம்பித்தது. மேனுட்டு வர்த்தகர்களும், பாதிரிமார்களும் ஜப்பானில் நுழைந்தனர். அதே வருடத்தில் மேனுட்டு யுத்த தளவாடமும் வந்தது. ஜப்பானில் தூக்குத் தண்டனை விதிக்கப்பட்ட ஓர் ஜப்பானியர் கோவாவுக்கு தப்பியோடி அங்கிருந்த ஸ்பேனிய பாதிரியாகிய செயிண்ட் பிரான்ஸிஸ் ஸேவியரை அழைத்துக்கொண்டு பாம சாதுவைப்போல் வேற்றுருவத்தில் ஜப்பானுக்குத் திரும்பிவந்தார். இப்பாதிரியார் ஜப்

பானியர்களைக் கிறிஸ்தவ மதத்தில் சேர்க்கும் வேலையிலீடுபட்டார். சில ஜப்பானியர் கிறிஸ்தவராயினர். ஆனால் பலர் ஓர் மேனாட்டு மதம் தம் நாட்டின் மீது படையெடுப்பதைக்கண்டு சீற்றமுற்றனர். முதலில் மதம், அடுத்தது வர்த்தகம், மூன்றாவதாக யுத்த தளவாடமும், நாட்டையாக்கிரமித்தலும் ஆகிய மேனாட்டு வஞ்சகத்தைக்கண்டு ஜப்பானியர்கள் நடுங்கலாயினர். இதற்கிடையில் ஸ்பெயின் பிலிப்பைன் தீவுகளை அடிமையாக்கிக்கொண்டதானது ஜப்பானின் ஐயத்தைதெளிவு படுத்திவிட்டது. (பிறகு பிலிப்பைன் தீவுகளை ஸ்பெயினிடமிருந்து அமெரிக்கா (U.S.A.) 1898-ல் பிடுங்கிகொண்டது.) எனவே மேற்கு உலகம் சதா ஓர் சகிக்கமுடியா உபத்திரவமெனத் தரிதமாய்த் தெரிந்துகொண்ட ஜப்பான் 1637-ல் ஜப்பானிலிருந்த சகல மேனாட்டினர்களையும் விரட்டியடித்துவிட்டது. இதற்குள் மதம்மாறிய ஜப்பானியர்கள் விஷமம் செய்ய ஆரம்பித்துவிட்டனர். தம் மதம், கல்வி, கலாசாரம் எல்லாம் போயிற்றென ஓலமிடத் தொடங்கினர். இதற்கனுசரணையாக பலம்பொருந்திய மேனாட்டினர் ஜப்பானிலுள்ள ஜப்பானியக் கிறிஸ்தவர்களின் நலன்களை ஜப்பானிய சர்க்கார் புறக்கணித்து வருவதைப் பார்த்துக்கொண்டு தம்மால் மௌனமாயிருக்க முடியாதென அதிகாரம் பண்ணலாயினர். இதன் விளைவாக ஜப்பானிய சர்க்காருக்கும் ஜப்பானியக் கிறிஸ்தவர்களுக்கு மிடையில் மூன்று மாதங்கள் வரை பகிரங்கமாக யுத்தம் நடந்தது. இறுதியில் சர்க்காரே வெற்றிபெற்றது. இவ்வித உள்நாட்டுக் கலகத்திற்கும், ஜப்பானியர்கள் அந்நிய நாட்டு கலை, கலாசாரம், மதம், பழக்க வழக்கம் ஆகியவற்றை தம்முடையதென்றும், உண்மையிலேயே தம்முடைய சொந்தக்கலை, கலாசாரம், மதம், பழக்க வழக்கம் ஆகியவைதான் அந்நியமென்றும் கருதியதற்கும் காரணம் மேனாட்டு மதசூழ்ச்சியல்லவா? ஜப்பான் இதில் அன்று வெற்றி பெற்றிராவிடில் இன்றைய உலக சரிதம் வேறுவிதமாய் அமைந்திருக்கும்.

எனினும் 1867-வரை ஜப்பான் என்றால் என்னவென்றே உலகமறியாதிருந்தது. ஆனால் அது உலக வல்லரசாக விளங்குவதற்குக் காரணம் அவ்வருடத்தில் சிம்மாதனமேறிய மெய்ஜி சக்ரவர்த்திதான். நவீன ஜப்பானைச் சிருஷ்டி செய்தது அவரது 45-வருட கால ஆக்ஷிதான். முதலாளித்துவ, ஜாதிமத, ஏற்ற

தாழ்வுக் கொடுமைகளைச் சகியாது வீறிட்டெழுந்து தேசாபிமானமும், அபேதவாதமும் நிறைந்திருந்த சாமுராய் வர்க்க வாலிபர்களது ஆலோசனைகளுக்கிணங்க மெய்ஜி தென்னோ பின்வரும் 5 பிரமாணங்களைப் பிரகடனப் படுத்தினர்:—

"நாம் சட்டசபைகளை உருவகப்படுத்தி பொதுஜன அபிப்பிராயப்படி நாட்டையாளுவோம்.

மேல், கீழ்வகுப்பினர்கள் எவ்வித வித்தியாசமுமின்றி சகல துறைகளிலும் சமத்துவமாய் ஒற்றுமைப் படுத்தப்படுவர்.

சிவில், இராணுவ அதிகாரிகள் தத்தம் நோக்கங்களையடையவும், அதிருப்தி யுறாதிருக்கவுமாக தக்கவிதமாய் நடத்தப் படுவர்.

பழைய குருட்டு பழக்கவழக்கங்கள் நிவம்சப்படுத்தப்படும். ஜனங்கள் விண்ணுலகினதும், மண்ணுலகினதும் சீரியவழிகளில் நடக்கவேண்டும்.

உலக சமூகத்தாரிடமிருந்து ஞானத்தைப் பெறவேண்டும். நம் சாம்ராஜ்யம் க்ஷேமாபிவிருத்தியின் சிகரத்தில் வைக்கப் படும்."

ஜப்பானிய சமுதாயத்திற்குப் புத்துயிரளித்ததும், ஜப்பானை நவீன, நாகரீக, கலாபிவிருத்தியடைந்த உலக வல்லரசாகச் செய்ததும் மெய்ஜி தென்னோதான். அவர் 1894-95-ல் பழைய சீன ராஜாங்கத்தின் மீதும், 1904-05-ல் ரஷியா மீதும் யுத்தம் செய்து கொரியாவிலும், மஞ்சூரியாவிலுமிருந்த கொடிய ஐரோப்பிய ஏகாதிபத்தியங்களை விரட்டியடித்தார். இவ்விரு யுத்தங்களுக்குப் பிறகே ஜப்பான் பிரபல்யமடையலாயிற்று. அவற்றில் தோற்றிருந்தால் ஜப்பானின் கதி இன்றைய இந்தியாவைக் காட்டிலும் மோசமாயிருக்கும். இவ்விதமாக ஜப்பான் நாளுக்கு நாள் பலமிகுந்து வந்தது. இங்கிலைமையில் கடந்த உலக மகா யுத்தம் மூண்டது. ஜப்பான் இதில் பிரிட்டிஷார் சார்பில் கலந்துகொண்டதற்குக் காரணம் மேற்கு நாடுகளும் கிழக்கு நாடுகளும் பரஸ்பர சுபீட்சத்தை உத்தேசிக்கவேண்டுமென்பதற்காகத்தான். ஆனல் 1918-ல் நடந்த வெர்சயில்ஸ் சமாதான மகாநாட்டில் ஜப்பானின் லட்சியம் உதறித்தள்ளப்பட்டது. ஜாதி, மத, நிற பேதமின்றி உலகிலுள்ள சகல நாடுகளும் சம

மாகக் கருதப்படவேண்டுமென்றும், ஆசிய நாடுகள் தத்தம் விதிகளைத் தாமே நிர்ணயித்துக்கொள்ள அவைகளுக்கு உரிமையளிக்கப்படவேண்டுமென்றும் ஜப்பான் அம்மகாநாட்டில் செய்துகொண்ட கோரிக்கை அலட்சியம் செய்யப்பட்டது. எனவே மகா கிழக்காசிய பொது சுபீட்ச மண்டலத்தைச் சிருஷ்டிக்கும் கருத்தும் வெர்சயில்ஸ் சமாதான மகாநாட்டில்தான் உதித்தது. இம் மண்டலம் பர்மா, சயாம், மலாயா, இந்தோனேஷியத் தீவுகள், இந்தோ சீனு, ஹாங்காங், சீனு, கொரியா, மஞ்சுகோ, பிலிப்பைன் தீவுகள், ஆஸ்திரேலியா, பஸிபிக் மகா சமுத்திரத்திலுள்ள இன்னுமிதர பிரதேசங்கள் ஆகியவற்றைக் கொண்டது. இப்பிரதேசங்கள் ஆங்கிலோ—அமெரிக்க ஆக்கிரமிப்பினின்று விடுபட்டு ஜப்பானின் தலைமையில் தத்தமக்குரிய அந்தஸ்துடன் பொது சுபீட்சத்தைக் கருதி சுதந்திரமாக அபிவிருத்தியடைய வேண்டுமென்பதுதான் மகாகிழக்காசிய பொது சுபீட்சமண்டல ஸ்தாபிதத்தின் லட்சியமென ஜப்பான் கூறியது. ஆனால் இப் பிரதேசங்களையே சுரண்டிப் பிழைத்து வரும் மேனாட்டினர் ஜப்பானின் இத்தகைய லட்சியம் நிறைவேற சம்மதிப்பரா?

மேற்கு நாட்டு ஏகாதிபத்தியம் திடீரென ஒரே நாளில் ஆசியாவில் நுழைந்துவிடவில்லை. அது சிறுகச்சிறுக மேற்கு ஆசிய நாடுகள், இந்தியா, பர்மா, மலாயா, இந்தோனேஷியத் தீவுகள், இந்தோ சீனு, சீனு முதலியவற்றின் வழியாக ஜப்பானுக்கும் பாக்குப்பிடிக்க ஆரம்பித்தது. ஆசிய நாடுகள் அதை எதிர்த்துப் போராடி ஒவ்வொன்றாக அடிமையாயின. ஆசியாவின் விமோசனத்தைத் தேட ஜப்பான் கையாண்ட சமாதானமுறை வெர்சயில்ஸ் மகாநாட்டோடு முறியடிக்கப்பட்டுவிட்டது. ஜப்பானின் லட்சியத்தைக் குலைத்து ஜப்பானையும் அடக்கி அடிமைப்படுத்த உத்தேசங்கொண்ட மேற்கு நாட்டு ஏகாதிபத்திய சர்க்கார்கள் ஜப்பானுக்கு விரோதமாகச் சீனுவைத் தூண்டிவிட்டு வேடிக்கை பார்த்து வந்தன. மேனாடுகள் ஜப்பானுக்கெதிராக இவ்விதச் சில்லறை வேலைகளில் ஈடுபட்டிருக்கையில், ஆங்கிலோ அமெரிக்கரிடம் அதிருப்தியுற்ற ஜெர்மனியும், இத்தாலியும் ஜப்பானுக்கு நண்ப நாடுகளாயின.

ரஷியாவுக்குச் சாதாரணமாக "யூரேஷியா" என்று ஓர் பெயருண்டு. "யூரோ" என்றால் ஐரோப்பா. "ஆசியா" என்றால் ஆசியா என்று எல்லோருக்கும் தெரியும். கிழக்கு ஐரோப்பாவை

யும் வடக்கு ஆசியாவையும் கொண்ட நிலப்பரப்பிற்குத்தான் ரஷியா அல்லது யூரேஷியா என்று பெயர். ரஷியா ஐரோப்பாவில் தன் செல்வாக்கைப் பெருக்கிக்கொள்வதை ஜெர்மனியும், ஆசியாவில் சீனுவில் தன் செல்வாக்கைப் பெருக்கிக்கொள்வதை ஜப்பானும் விரும்பவில்லை. காரல்மார்க்ஸின் பொதுவுடமைக் கொள்கைப்படி சர்க்காரை நிறுவியுள்ள ரஷியாவை ஜெர்மன் சர்வாதிகாரி ஹிட்லர் எட்டிக்காயெனக் கருதினர். இதற்கிடையில் 26-2-1936-ல் ஜப்பானிலும் ஓர் விபரீதம் நடந்துவிட்டது. அதாவது ஜப்பானிய சர்க்காருக்கு விரோதமாக ஓர் இராணுவப் புரட்சி ஏற்பட்டுவிட்டது. அதி தீவிரவாதிகளான ஜப்பானிய சிப்பாய்களில் பலர் அன்று அதிகாலையில் அநேக மந்திரிகளை ஏககாலத்தில் அவரவர் படுக்கைகளில் இருந்தவாறே சுட்டுக் கொன்றுவிட்டனர். ஆனால் பிரதம மந்திரி அட்மிரல் ஒகாதா தனது வேலைக்காரர்களின் உடைகளையணிந்துகொண்டு உருமாறித் தப்பிக்கொண்டார். என்றாலும் அவருக்குப் பதிலாக அவருடைய மைத்துனர் கொல்லப்பட்டுவிட்டார். பிறகு எவ்விதமோ புரட்சிக்காரர்கள் அடக்கப்பட்டுவிட்டனர். இவ்விதம் புரட்சி செய்யும்படி ஜப்பானியத் துருப்புகளைத் தூண்டியது "ஜப்பானின் புனருத்தாரணத்திற்கான திட்டங்கள்" என்ற ஓர் புத்தகமாகும். இதை எழுதியவர் திரு. இக்கி கிதா என்ற ஓர் ஜப்பானிய வாலிப சமதர்மவாதியாவர். எனவே சமதர்மக் கொள்கைக்குத் தாயகமான ரஷியாவை ஜப்பான் இனியும் அதிகமாக வெறுக்கலாயிற்று. இந்நிலைமையில்தான் 5-11-1936-ல் ஜப்பானும், ஜெர்மனியும் சேர்ந்து "சர்வ தேச பொதுவுடமை இயக்க எதிர்ப்பு ஒப்பந்தத்தைச்" செய்துகொண்டன. 6-11-1937-ல் இத்தாலியும் அதில் ஒப்பந்தத்தில் கையெழுத்திட்டது. இவ்வொப்பந்தமே பின்காலத்தில் ஆங்கிலோ—அமெரிக்க நேசதேசங்களை எதிர்க்கும் அச்சு முக்கூட்டு ஒப்பந்தமாக மாறியது.

ஆங்கிலோ-அமெரிக்கர்களை ஆசியாவிலிருந்து விரட்டிவிட வேண்டுமென்ற கருத்துற்ற ஜப்பானுடன் ஒத்துழைக்க சீனத் தலைவரான சியாங்கை ஷேக் பிரிட்டிஷ்-அமெரிக்கர்களின் பேச்சைக் கேட்டுக்கொண்டு மறுத்துவிட்டார். மேலும் 1937 ஜூலையில் பெக்கிங் என்ற ஸ்தலத்திற்கருகில் மார்கோ-போலோ எனுமிடத்தில் சீனர்கள் ஜப்பானியருக்கு ஓர் விபத்தையும் உண்

டாக்கி விட்டனர். எனவே அவ்விபத்தையொட்டி 7-7-1937-ல் சீன-ஜப்பான் யுத்தம் ஆரம்பமாயிற்று. பிரிட்டனும், அமெரிக்காவும், பிரான்ஸும் சீனுவுக்கு பகிரங்கமாக உதவமுடியவில்லை. காரணம் ஜப்பானின் நண்ப நாடுகளான ஜெர்மனியும், இத்தாலியும் தம்மீது போர்தொடுத்து விடுமென்ற பயமொருபக்கம்; அடிபடுவது சீனுவேயன்றி தாமல்லவெனும் வஞ்சகம் மறுபக்கம். என்ருலும் சீனுவில் தமது நலன்களை ஸ்திரப்படுத்திகொள்ள வேண்டி பிரிட்டிஷ் நேசதேசங்கள் பர்மா ரோடு, இந்தோ-சீனு, ஹாங்காங் ஆகியவற்றின் மூலமாக சீனுவுக்கு ரகசியமாக ஆயுத-பொருள் உதவியளித்து வந்தன. ஜப்பான் எவ்வளவோ நயத்தையும், பயத்தையும் கையாண்டும் பிரிட்டிஷ் நேசதேசங்கள் எப்படியும் ஜப்பானை அடக்கவே சூழ்ச்சி செய்து வந்தனவென்று ஜப்பான் கூறியது.

இந்நிலையில் 1-9-1939-ல் ஐரோப்பிய யுத்தம் ஆரம்பித்தது. 10-6-1940-ல் இத்தாலி ஜெர்மனியோடுகூடிக்கொண்டது. 1940ம் வருடம் முடியும் முன்பே ஐரோப்பாவில் பால்கன் நாடுகளைத் தவிர இதரசகலமும் ஜெர்மன் வசமாயின. முடிவணங்கா சாம்ராஜ்யமெனப் பிரமாதப்படுத்தப்பட்டுவந்த பிரான்ஸ் 24-6-1940-க்குள் ஜெர்மன்-இத்தாலியத் துருப்புகளின் காலில் விழுந்துவிட்டது. ஹாலந்தும் ஜெர்மனியிடம் சரணுகதியடைந்து விட்டது. ஆனுல் அதன் குடியேற்ற நாடாயிருந்த இந்தோனேஷியத் தீவுகளின் டச்சு நிர்வாகஸ்தர்கள் ஆங்கிலோ-அமெரிக்கர்களுடன் கூடிக்கொண்டு கொட்டமடிக்க ஆரம்பித்தனர். "ஏபிஸிடி" (அமெரிக்க-பிரிட்டிஷ்-சீன-டச்சு) நாடுகளின் இவ்வித நடவடிக்கை ஜப்பானுக்கு அதிக கோபத்தை மூட்டியது. என்ருலும் தலையிழந்த முண்டங்கள் போன்ற பிரஞ்சு-இந்தோ சீனுவையும், டச்சு இந்தோனேஷியாவையும் ஜப்பான் ஆக்கிரமித்துக் கொள்ளவில்லை. ஆனுல் தென்கிழக்கு ஐரோப்பிய யுத்தத்தில் முற்றிலும் தோற்று கிரீட்டிலிருந்து 1941 மே மாதத்தில் ஓட்டம் பிடித்த பிரிட்டிஷார் மேற்காசியாவில் பிரஞ்சுக் குடியேற்ற நாடாயிருந்த சிரியாவைப் போரிட்டு பிடித்துக்கொண்டனர். எனவே கிழக்காசியாவிலிருந்த பிரஞ்சு-இந்தோ சீனுவில் விஷி பிரஞ்சு சர்க்காரின் சம்மதப்படி ஜப்பான் முந்திக்கொண்டது. இதன்பயனுக இதுவரை ஜப்பானுக்கும், ஆங்கிலோ-அமெரிக்க நாடுகளுக்குமிடையில் நடந்து வந்த சமாதானப் பேச்சுவார்த்தைகள்

தடைபட்டதோடன்றி, ஆங்கிலோ—அமெரிக்க நாடுகள் 27-7-1941-ல் ஜப்பான்மீது பொருளாதார பாணத்தையும் பிரயோகித்தன. இதனால் ஜப்பானுக்கும், வெளிநாடுகளுக்குமிடையில் எவ்வித தொடர்புமில்லாமல் செய்யப்பட்டது. இந்நிலைமையில் ஜப்பான் வாழமுடியாது. பெட்டிப்பாம்பாக அடங்கவேண்டும். அல்லது போரிட்டாகவேண்டும் என்று ஜப்பானியர் கருதினர்.

இருதரப்பினரும் யுத்தத்திற்குத் தயாராகினர். சர்ச்சிலும், ரூஸ்வெல்ட்டும் அட்லாண்டிக் சமுத்திர நடுவில் "பிரின்ஸ் ஆவ் வேல்ஸ் என்ற (10-12-1941-ல் மலாயாவின் கிழ்கடற்கரைக்கருகில் ஜப்பானியரால் மூழ்கடிக்கபட்டுவிட்ட) பிரிட்டிஷ் யுத்தக் கப்பலிலிருந்து கொண்டு 10-8-1941-ம் உ முதல் மூன்று நாட்களாகப் பேசி ஜப்பானுக்கெதிராக யுத்தம் செய்யவேண்டிய திட்டங்களையும், அட்லாண்டிக் சாஸனத்தையும் தயாரித்தனர். இதையொட்டி ஜப்பானியரும் ஜரூராயினர். சமாதானப் பிரியரான கொனோயி இளவரசரைப் பிரதம மந்திரியாகக் கொண்டு ஜப்பானிய சாம்ராஜ்யத்தை இதுவரை நிர்வகித்துவந்த மந்திரிசபை திடீரென ராஜிநாமா செய்துவிட்டது. காரணம் கிழக்காசியாவில் யுத்தம் பரவாதிருக்க வேண்டி நாம் இருவரும் சந்தித்து பேசவேண்டுமென்று கொனோயி இளவரசர் ரூஸ்வெல்ட்டிற்குக் கடிதமெழுதியதை ஜப்பானின் பலஹீனமென அமெரிக்கா நினைத்துக்கொண்டதென ஜப்பானியத் தீவிரவாதிகள் கொக்கரிக்கலாயினர், எனவே ஆங்கிலோ-அமெரிக்கநாடுகளுக்குத் தொடைநடுக்கங் கண்டது. இதைநிரூபிப்பதற்கு ஜெனரல் டோஜோ 18-10-1941-ல் ஜப்பானின் பிரதம மந்திரியானர்.

ஜப்பானிய சர்க்காரின் விசேஷத் தூதராக சாபுரோ குருசு 15-11-1941-ல் வாஷிங்டன் போய்ச் சேர்ந்தார். கடந்த 8 மாத காலமாக ஜப்பானின் சார்பாக அமெரிக்காவுடன் சமரசப் பேச்சுவார்த்தைகளை நடத்திவந்த அட்மிரல் நோமுராவும் திரு. குருசுவும் சேர்ந்து 20-11-1941-ல் ஜப்பான் சார்பாக பின்வரும் ஐந்து ஆலோசனைகளையும் வாஷிங்டனில் அமெரிக்க அதிகாரிகளிடம் சமர்பித்தனர்:—

1. ஜப்பானே அல்லது அமெரிக்காவோ தென்பஸிபிக் பிரதேசத்திலோ அல்லது பிரஞ்சு-இந்தோ சீனவைத்

தவிர தென்கிழக்காசியாவிலோ இராணுவ விஸ்தரிப்பை செய்யக்கூடாது.

2. டச்சுக் கிழக்கிந்தியத் தீவுகளிலுள்ள பொருள்களைப் பெறுவதில் இரு சர்க்கார்களும் ஒத்துழைத்து சிநேக பான்மையான உறவுகளை ஏற்படுத்திக்கொள்ள வேண்டும்.

3. 1941 ஜூலையில் ஜப்பானிய மூலதனங்களைக் கட்டு படுத்தியதற்கு முன்பிருந்தபடி வர்த்தக உறவுகளை இவ்விரு சர்க்கார்களும் திரும்பவும் ஏற்படுத்திக்கொள்ள வேண்டும். ஜப்பானுக்குத் தேவைப்படும் பெட்ரோல் எண்ணெயை அமெரிக்கா கொடுக்க வேண்டும்.

4. ஜப்பானுக்கும், சீனுவுக்குமிடையில் சமாதானத்திற்காகச் செய்யப்படும் முயற்சிகளில் அமெரிக்கா வந்து குறுக்கே விழக்கூடாது.

5. பிரஞ்சு இந்தோ சீனுவின் தென் கோடியிலுள்ள தனது துருப்புகளை ஜப்பான் திருப்பியழைத்துக்கொள்ளும்.

ஆனல் மேற்கண்ட ஜப்பானிய ஆலோசனைகளுக்குப் பதிலாக 26-11-1941-ல் அமெரிக்க அதிகாரிகள் கீழே காணும் மூன்று நிபந்தனைகளை ஜப்பானுக்கு விதித்தனர்:—

1. (மஞ்சூரியா, கொரியா உள்பட) சீனு, பிரஞ்சு இந்தோ சீனு ஆகிய சகலவிடங்களிலிருந்தும் ஜப்பான் தனது தரை, கடல், போலீஸ் படைகளை ஒன்றுகூட பாக்கிவிடாமல் முற்றிலும் திருப்பியழைத்துக்கொள்ளவேண்டும்.

2. சுங்கிங் (சியாங் கை ஷெக்) சீன சர்க்காரைத் தவிர வேறெந்த சீன ஸ்தல சர்க்காருக்கும் ஜப்பான் இராணுவ உதவியோ அல்லது அரசியலுதவியோ அளிக்கக்கூடாது.

3. அமெரிக்கா நாங்கிங் (வாங் செங் வே) சீன தேசிய சர்க்காரை அங்கீகரிக்காது. ஆனல் ஜப்பான் அச்சு முக்கூட்டு வல்லரசு ஒப்பந்தத்திலிருந்து விலகிக்கொள்ளவேண்டும்.

இது சம்பந்தமாக ஜப்பானியர் கூறியதாவது:—சமாசம் செய்து கொள்வதற்கு முன்பதாக ஷை மூன்று நிபந்தனைகளையும் ஜப்பான் ஒப்புக்கொள்ளவேண்டுமென அமெரிக்கா கேட்டது. அமெரிக்க "மன்ரோ கொள்கை"ப்படி அமெரிக்க விவகாரங்களில் தலையிட பிறநாட்டினருக்குரிமையில்லை. எனவே ஆசிய விவகாரங்களில் மேற்கு நாட்டினர் குறுக்கிடுவது குறும்புத்தனமாகும். சமாசப்பேச்சுவார்த்தைகளின் பேரில் காலங்கடாத்தி ஜப்பானைத்தாக்க அவர்கள் தயாராகி வருகின்றனர். மேலும் ஷை நிபந்தனைகளைச் சுயமரியாதையுள்ள எந்த சுதந்திர நாடும் ஏற்றுக்கொள்ளாது. இதர ஆசிய நாடுகளை இனியும் சுரண்டிவாழ மேனாட்டினர் போடும் நிபந்தனைகளை ஏற்றுக்கொள்வதென்றால் ஜப்பானின் சுதந்திரமும் போயிற்றென்றுதான் அர்த்தம். பிறகு அது தலைதூக்கவேமுடியாது. எனவே யுத்தம் செய்வதைத்தவிர எங்களுக்கு வேறுவழியில்லை.

இவ்விதமாக ஆசிய வானிலும் யுத்தமேகம், இடி, மின்னல் எல்லாம் தீவிரமாக உதயமாயின.

## கிழக்காசிய யுத்தம்

மலேயா, பர்மா, தாய்லந்து, இந்தோனேஷியத் தீவுகள், பிரஞ்சு இந்தோ சீனா, ஹாங்காங், சீனா, மஞ்சூகோ, பிலிப்பைன் தீவுகள், ஆஸ்திரேலியா, இன்னும் பஸிபிக் மகா சமுத்திரத்திலுள்ள இதர பிரதேசங்கள் ஆகியவற்றைக்கொண்ட ஓர் மகா கிழக்காசிய பொது சுபீட்சமண்டலத்தை (Greater East Asia Co-prosperiety Sphere) தனது தலைமையில் ஸ்தாபித்துக்கொள்ள ஜப்பான் செய்த சமாச முயற்சிகளனைத்தும் ஆங்கிலோ—அமெரிக்க நாடுகளால் வியர்த்தமாக்கப்பட்டனவெனக் கருதிய ஜப்பானுக்கு யுத்தம் செய்துதான் இம்மண்டலத்தை ஸ்தாபிக்கவேண்டுமென்ற நிர்ப்பந்தமேற்பட்டது. இதுவரை ஐரோப்பாவில் மட்டுமே நடந்துவந்த யுத்தம் இப்பொழுது ஆசியாவிலும் பரவும்போலிருக்கிறதேயெனப் பொது ஜனங்கள் அஞ்சலாயினர். 26-11-1941-ல் ஜப்பான்—அமெரிக்க சமாசப் பேச்சுவார்த்தைகள் முறிவுற்றதும் யுத்தமழை எந்த நிமிஷத்திலும் பொழியவாரம்பிக்குமென நாம் அனைவரும் கருதியிருந்தனம். ஆனால் மாபலம் வாய்ந்த வல்லரசுகளெனத் தம்பட்டமடித்துக்கொண்டிருந்த அமெரிக்காவும், பிரிட்டனும் கிழக்காசி

யாவில் ஜப்பானிடம் இவ்வளவு விரைவில் தோற்றேடுமென ஒரு சிலரைத்தவிர வேறுயாரும் கருதவில்லை. இங்கிலைமையில் 7-12-1941-ம் தேதி (மலாயா காலம்) ஞாயிற்றுக்கிழமை இரவு 1-மணிக்கு விடிந்தால் திங்கள் கிழமை தென்னே ஹெய்கா ஆங்கிலோ—அமெரிக்க நாடுகள் மீது யுத்தமாரம்பித்துவிட்டார். ஓர் ஆசிய நாடு ஐரோப்பிய—அமெரிக்க வல்லரசுகளின்மீது இவ்விதம் யுத்தமாரம்பித்தது உலக சரித்திரத்திலேயே இதுதான் முதல் தடவை.

ஷை யுத்த அறிக்கை அமெரிக்க சர்க்காருக்கும், பிரிட்டிஷ் சர்க்காருக்கும் உடனே சதாரா செய்யப்பட்டது. அதேசமயம் கிழக்காசியாவில் அவைகளுக்குச் சொந்தமாயிருந்த இடங்களில் முக்கிய தளங்களான பற்பல ஸ்தலங்களும் ஏககாலத்தில் ஜப்பானிய தரை, கடல், விமானப்படைகளால் கடுமையாகத் தாக்குண்டன. எதிர்பாராத விதமாக முதுகில் குத்தினற்போல் ஜப்பானியர் திடீரென சிங்கப்பூர், மணிலா, பவளத்துறைமுகம் (ஹாவாய்) ஆகிய விடங்களைத் தாக்கியது சர்வதேச சட்டதிட்டங்களுக்கு நேர்மாருனதென ஆங்கிலோ-அமெரிக்கர் கூறினும் இன்று யுத்தத்தில் ஈடுபட்டிருக்கும் எந்த நாடும் சர்வதேச சட்டத்திற்கிணங்க நடக்கவில்லையென்பது உலகறிந்த ரகசியம்.

கிற்க ஈண்டு ஜப்பானியரின் ராஜ விசுவாசத்தையும், தேசாபிமானத்தையும்பற்றி சிறிது விளக்கவேண்டிய தவசியமாகும். ஜப்பானியர் தம் சக்ரவர்த்தியைத் தெய்வமென வணங்குபவர். சக்ரவர்த்தியின் வாக்கு தெய்வ வாக்கு. அவர் சூரியதேவனின் சந்ததியென்று ஜப்பானியர் கருதுகின்றனர். மற்ற நாட்டு மன்னர்களின் படங்கள் பத்திரிகைகளிலும், புத்தகங்களிலும், இதர பிரசுரங்களிலும் சர்வசாதாரணமாகப் பிரசுரிக்கப்படும். ஆதனுல் அந்தந்த நாட்டதிகாரிகள் கோபித்துக்கொள்வதில்லை. ஆனுல் ஜப்பானிய அரச வம்சத்தினரின் படம் அவ்விதம் பிரசுரிக்கப்படக் கூடாதென்பது அச்சர்க்காரின் கட்டளை. ஒரு சமயம் ஓர் அமெரிக்கப் பத்திரிகை ஜப்பானிய சக்ரவர்த்தியின் படத்தை சாதாரணமாகப் பிரசுரித்து விட்டது. பிறகு அமெரிக்க சர்க்கார் ஜப்பானிய சர்க்காரிடம் மன்னிப்புக் கேட்டுக்கொள்ள நேர்ந்தது. மலாயாவில் ஜப்பானிய ஆக்ஷியேற்பட்ட ஆரம்ப காலத்தில் ஓர் பத்திரிகை ஜப்பானிய சக்ரவர்த்தியின்

படத்தை சாதாரணமாகப் பிரசுரித்துவிட்டது. அதற்காக அது ஜப்பானிய இராணுவத்தினரின் கோபத்திற்கிலக்காகியது. ஏதாவதோர் முக்கிய சம்பவத்தின்போது அரசவம்சத்தினரின் படம் பிரசுரிக்கப்பட வேண்டுமாயின் "ராஜவம்சத்தினரின் படங்களடங்கிய பிரசுரம் தரைமீதோ, மேஜை மீதோ அல்லது வேறெங்கோ அலக்ஷியமாக எறியப்படக்கூடாது. அதைமிக மரியாதையுடன் கையாடவேண்டும். அப்படத்தை கட்டிடங்களில் தொங்கவிட விரும்புபவர்கள் அதைமற்ற படங்களுடன் சமத்துவமாய் வைக்காது அவற்றிற்கு மேலே உயரத்தில் தொங்கவிடவேண்டும்." என்று வாசகர்களுக்குப் பிரத்தியேகமாய் அறிவிக்க வேண்டும். ஜப்பானியர் தம் சக்ரவர்த்தியின் பெயரை வெளிப்படையாக சொல்லவோ எழுதவோகூட மாட்டர். சக்ரவர்த்தியாரைப்பற்றிக் குறிப்பிடவேண்டிய சந்தர்ப்பமேற்படும்போது வெறுமனே "ராஜாங்கம்" அல்லது "சிம்மாசனம்" என்றுமட்டிலும் குறிப்பிடுவர். கிறிஸ்தவ சாமிக்கோ, இஸ்லாம் சாமிக்கோ அல்லது ஹிந்து சாமிக்கோகூட அவ்வளவு மரியாதைகிடையாது. ஜப்பானியர் தம் சக்ரவர்த்தியிடம் கொண்டுள்ள அபார பக்திக்கு மேற்கண்டதைவிட அதிக உதாரணம் தேவையிராது. சக்ரவாத்தியின் வார்த்தையை நிறைவேற்றுவதைவிட அவர்களுக்கு வேறு பெரிய விஷயம் எதுவுமில்லை.

ஜப்பானியரின் தேசாபிமானமோவெனில் அது அவர்களின் ராஜ பக்திக்கு எவ்விதத்திலும் குறைந்ததல்ல. தேசத்திற்காக அவர்கள் எதையும் செய்வர். உடல், பொருள், ஆவி யாவற்றையும் பிரத்தியக்ஷமாகத் தியாகம் செய்வர். மற்றவர்களைப்போல் அவர்கள் வாய்வேதாந்தக்காரர்களல்ல. அவர்களுக்கிடையில் ஜாதி-மத, உயர்வு-தாழ்வு, ஏழை-பணக்காரன் போன்ற வித்தியாசங்களே இல்லை. தம் மன்னருக்காகவும், நாட்டுக்காகவும் எதையும் துறப்பர். ஜப்பானியருக்கு இவ்வித ராஜபக்தியையும், தேசபக்தியையும் உண்டாக்கியது "ஷிந்தோயிஸம்" எனும் தேசிய மதந்தான். உலகில் நாகரிகமாகவும், சுதந்திரமாகவும், வாழ விரும்புபவர்கள் ஆத்மீக மதம்—தேசிய மதம் எனும் இரு மதங்களேயும் கையாளவேண்டுமென்ற ரகசியத்தை ஜப்பானியர் அறிந்துள்ளனர். மனிதனுக்கும், பிற உயிர்களுக்கும், கடவுளுக்குமிடையிலுள்ள உறவை விளக்குவது ஹிந்து, கிறிஸ்துவம், இஸ்லாம் போன்ற ஆத்மீக மதமாகும்.

மனிதன் தான் பிறந்து வளர்ந்த தாய் நாட்டிற்கும், வெளியுல கத்திற்கும் ஆற்றவேண்டிய கடமைகளைப் போதிப்பது ஷிந்தோ யிஸம் போன்ற தேசிய—அரசியல்—மதமாகும். ஆத்மீக மதத் திற்கும், அரசியல் மதத்திற்கும் சம்பந்தமேயில்லை. முன்னதால் நாகரிகமும், பின்னதால் தாய்நாட்டில் சுதந்திரமும், சர்வதேச சமாதானமும் நிலவும். ஜப்பானியர் பலவித ஆத்மீக மதங் களைத் தழுவியபோதிலும் அவர்கள் ஒவ்வொருவரும் அரசியல் மதத்தையே பெரிதாகக் கருதுகின்றனர். உலகில் மகா பெரிய பிரிட்டிஷ் யுத்தக்கப்பல்களான பிரின்ஸ் ஆவ் வேல்ஸையும், ரிப் பல்ஸையும் மலாயாவின் கிழக்குக் கரையோரத்தில் ஜப்பானிய விமானிகள் தம் விமானங்களோடு விழுந்து மூழ்கடித்தனர். பிரிட்டிஷாரும் கிறிஸ்தவர்கள்தான். அதற்காக ஜப்பானிய கிறிஸ்தவ விமானிகள் அவ்விரு கப்பல்களையும் மூழ்கடிக்காது விடவில்லை. எனவே ஆத்மீக மதத்தைவிட அரசியல் மதந்தான் உயர்வென ஜப்பானியர் மதிக்கின்றனர். இதிலிருந்து ஜப்பா னின் சக்தியை ஒருவாறு ஊகித்துக்கொள்ளலாம். இத்தகைய ராஜபக்தியும், தேசாபிமானமும் ஒருங்கே நிறைந்த ஜப்பானியர் தென்னோஹெய்காவின் ஷெ பிரகடனத்தைக் கேட்டதும் துள் ளிக்குதித்தெழுந்தனர்.

நிற்க, மற்றோர்விஷயமும் இங்கு தெளிவுபடுத்தப்படவேண் டும். அதாவது மகாகிழக்காசியபொதுசுபீட்ச மண்டலத்திலுள்ள பற்பல பிரதேசங்ககளில் ஒவ்வொன்றும் 7-12-1941-ம் தேதி யா ராருக்குச் சொந்தமாயிருந்ததென்பது விளக்கப் பட்டால்தான் மகாகிழக்காசிய யுத்தத்தால் ஏற்பட்ட ஜப்பானிய வெற்றியும், ஆங்கிலோ-அமெரிக்கத் தோல்வியும் நன்கு புலப்படும். இந் தியா, அந்தமான், பர்மா, ஹாங்காங், மலாயா, சரவாக், வட போர்னியோ, கிழக்குத்திமோர், கிழக்கு நியூகினி, சாலமன், கில் பர்ட், போனிக்ஸ், எல்லிஸ், சம்பா, பிஜி, நியூஸிலந்து, ஆஸ்திரே லியா போன்ற பிரதேசங்கள் பிரிட்டனுக்குச் சொந்தம். சுமத்ரா, ஜாவா, தெற்கு போர்னியோ, ஸெலிபஸ், மேற்கு திமோர், மேற்கு நியூகினி போன்ற பிரதேசங்கள் டச்சு (ஹாலந்து)க்கு சொந்தம். பிலிப்பைன், குவாம், வேக், மிட்வே, ஹாவாய் போன்ற தீவு கள் அமெரிக்காவுக்கு சொந்தம். கரோலின், மார்ஷல் தீவுக ளும், பிரஞ்சு-இந்தோ சீனவும் ஜப்பானின் பாதுகாப்பிலிருந் தன. பஸிபிக்கிலுள்ள இதர நூற்றுக்கணக்கான சிறு சிறு தீவு

கள் அமெரிக்கா, பிரிட்டன், பிரான்ஸ், ஹாலந்து ஆகியவை
களுக்குச்சொந்தம். ஆனால் அவைகள் அவ்வளவு முக்கியத்
துவம் வாய்ந்தவையல்லவாதலின் தனித்தனியாக அவற்றின்
பெயர்கள் இங்கு குறிப்பிடப்படவில்லை. ஐரோப்பாவில் பிரான்
ஸும், ஹாலந்தும் வீழ்ச்சியுற்றுவிட்டபடியால் கிழக்காசியா
வில் அவ்விருநாடுகளுக்கும் சொந்தமாயிருந்த பிரதேசங்களில்
இந்தோ சீனா ஒன்றைத்தவிர இதரவை ஆங்கிலோ-அமெரிக்க
வலையில் சிக்கிக்கொண்டு ஜப்பானுக்கெதிராகக் கொட்டமடித்
துவந்தன. இந்நிலைமையில்தான் 8-12-1941-ம் உ மகாகிழக்கா
சிய யுத்தமாரம்பித்தது. அதே சமயத்தில் ஹாவாயிலுள்ள
பவளத் துறைமுகம், பிலிப்பைன் தலைநகரான மணிலா, மலா
யா தலைநகரான சிங்கப்பூர், கோட்டாபாரு, இதன்றி ஜுவாம்,
வேக், மிட்வே, ஹாங்காங் ஆகிய சகல பிரதேசங்கள்மீதும்
ஜப்பானிய விமானங்கள் திடீரெனத்தாக்கி எதிரிகளுக்கு பெருஞ்
சேதத்தை விளைவித்தன. டீன்ஸ்டின், ஹாங்கோ, பெக்கிங்
போன்ற சீனப் பிரதேசங்களிலிருந்த ஆங்கிலோ-அமெரிக்கத்
துருப்புகளை ஜப்பான் நிராயுதபாணிகளாக்கிவிட்டது. சீனாவில்
பலபட்டறை பிரதேசமாகவிருந்துக்கொண்டு சதா தனக்கு தொந்
தரவு கொடுத்துவந்த ஷேங்காயையும் ஜப்பான் உடனே ஆக்
கிரமித்துக்கொண்டது. அதன்றி தன் வசமுள்ள பிரதேசங்களி
லிருந்த எதிரிநாட்டு ஐரோப்பிய-அமெரிக்கப் பிரஜைகளைப்
பிடித்துக் காவலில் வைத்தது. இதேபோல் எதிரிநாடுகளும்
கிழக்காசியாவில் தமக்கிருந்த பிரதேசங்களில் வதிந்த ஜப்பா
னியப் பிரஜைகளைப்பிடித்துக் காவலில் வைத்தன. பஸிப்பிக்
கிலிருந்த சகல நடுநிலைமை நாட்டுக்கப்பல்களும் யுத்தமாரம்
பித்த 36-மணி நேரத்திற்குள் வெளியேறிவிட வேண்டுமென
ஜப்பான் பிரகடனப்படுத்திவிட்டது. இவ்வளவும் 7-ம் தேதி
இரவில்-8-ம் தேதி பொழுது புலர்வதற்குள் நடந்தவிஷயம்.
இது பொதுஜனங்கள் யாருக்கும் தெரியாது. 8-ம் தேதி
காலை 8-மணி சுமாருக்கு ஆங்காங்குள்ள பத்திரிகைகளின்
விசேஷ வெளியீடுகள் பொதுஜனங்களுக்குக் கிடைத்ததும்
தான் மகாகிழக்காசிய யுத்தம் பிரத்தியக்ஷமாக மூண்டுவிட்ட
செய்தி எல்லோருக்கும் தெரியவந்தது. ஜப்பான் ஆங்கிலோ-
அமெரிக்க நாடுகள்மீது யுத்தம் தொடுத்ததற்கு பதிலாக அவ்
விருநாடுகளும், அவைகளுக்கு அடங்கிய கனடா, ஆஸ்தி
ரேலியா, தென்னாப்பிரிக்க ஐக்கியம் போன்ற குடியேற்ற நாடு

களும், மெக்ஸிகோ, க்யூபா, சால்வேடார் போன்ற நாடுகளும், தலையிழந்த முண்டங்களாக லண்டனில் தஞ்சம் புகுந்திருந்த பெல்ஜிய, கிரேக்க சர்க்கார்களும் ஜப்பான்மீது 9-12-1941-ல் யுத்தப்பிரகடனம் செய்தன. இதேதினம் சங்கிங் சீன சர்க்கார் ஜப்பான், ஜெர்மனி, இத்தாலி ஆகிய மூன்றின் மீதும் யுத்தப்பிரகடனம் செய்தது. 11-12-1941-ல் ஜப்பான், ஜெர்மனி, இத்தாலி ஆகிய மூன்று நாடுகளுக்கிடையிலும் ஓர் இராணுவ ஒப்பந்தம் ஏற்படவே ஜெர்மனியும், இத்தாலியும் கூட அமெரிக்கா மீது யுத்தப்பிரகடனம் செய்தன. அடுத்த நாள் அமெரிக்கா இத்தாலிமீதும், ஜெர்மனிமீதும் யுத்தப்பிரகடனம் செய்தது. இவ்விதமாக ஐரோப்பிய யுத்தம் இரண்டாவது உலகமகாயுத்தமாக மாறியது.

நிற்க மகா கிழக்காசியப் பிரதேசத்திலுள்ள எதிரி ஸ்தலங்களைப் பல பகுதிகளாகப் பிரித்து ஒவ்வொரு பகுதியையும் பிடிக்கும்படி தனித்தனிப்படைகளை ஜப்பான் அனுப்பியது. அதன் பிரகாரம் ஒரு ஜப்பானியப் படைப்பகுதி ஹாங்காங்கையும், மற்றொன்று பிலிப்பைன் தீவுகளையும், மற்றொன்று மலாயா போன்ற பிரதேசங்களையும், மற்றொன்று பர்மாவையும், இனியுமொன்று பஸிபிக்கிலுள்ள இதர எதிரிப்பிரதேசங்களையும் பிடிக்க—இப்படியாகப் பல ஜப்பானிய படைப்பகுதிகள் தத்தம் சேனுதிபதிகளின் தலைமையில்—கிளம்பின. மகா கிழக்காசிய யுத்தமுனை பல ஆயிரக்கணக்கான மைல்கள் விஸ்தீரணமுடையது. இங்கு ஒவ்வொரு இடத்திலும் நடந்த யுத்தத்தைப்பற்றி தனித்தனியாக விவரிப்பதென்றால் இப்புத்தகத்தைப்போல் பல வேண்டும். எனவே ஒவ்வொரு பிரதேசத்தின் தலைநகர் வீழ்ச்சியுற்ற தேதியும் அதையொட்டிய இதர சம்பவங்களும் மட்டும் சுருக்கமாக விவரிக்கப்படுகின்றன.

பிரஞ்சு இந்தோ சீனுவிலிருந்த ஜப்பானியப் படைகள் சயாம் மீது 8-12-1941-ல் படையெடுத்தன. 5 மணி நேர யுத்தத்திற்குப் பிறகு சயாம் ஜப்பானுடன் சமாதானம் செய்துகொண்டது. அதன் பிரகாரம் இந்தோ சீனுவைப்போல் சயாமும் ஜப்பானின் தலைமையை ஏற்றுக்கொண்டது. பிறகு ஜப்பானியத் துருப்புகள் சயாம் வழியாக வடக்குமுகமாக பர்மாவை நோக்கியும், தெற்கு முகமாக மலாயாவை நோக்கியும் கிளம்பின. 25-1-1942-ல் சயாமும் ஆங்கிலோ—அமெரிக்க நாடுகள் மீது

யுத்தப்பிரகடனம் செய்து, தனது துருப்புகளை பர்மாமீது அனுப்பியது. மலாயாவில் பினங்கு, கோலாலம்பூர், ஜொகூர் பாரு ஆகியவைகளை இழந்துவிட்டு சிங்கப்பூர் போய்ச்சேர்ந்த பிரிட்டிஷ் துருப்புகள் எவ்வித நிபந்தனையுமின்றி 15-2-1942-ல் ஜப்பானியரிடம் சரணாகதியடைந்ததோடு பிரிட்டிஷ் மலாயா யுத்தம் முடிந்தது. பிரிட்டிஷ் பர்மாவின் தலைநகராகிய ரங்கூன் 8-3-1942-ல் வீழ்ச்சியுற்றது. பர்மா முழுதும் 10-5-1942-க்குள் ஜப்பான் வசமாகிவிட்டது. பிரிட்டிஷ் அந்தமான் தீவுகள் 26-3-1942-லும், நிக்கோபார் தீவுகள் 13-6-1942-லுமாக ஜப்பான் வசமாயின. 25-12-1941-ல் (கிறிஸ்துமஸ் பண்டிகையன்று) பிரிட்டிஷ் ஹாங்காங் ஜப்பானியரிடம் சரணாகதியடைந்தது. இந்த யுத்தமாரம்பித்த அன்றே அமெரிக்க வேக் தீவை ஜப்பான் பிடித்துக்கொண்டது. அமெரிக்க குவாம் தீவு 12-12-1941-ல் ஜப்பான் வசமாயிற்று. பிலிப்பைன் தீவுகளின் தலைநகரமான மணிலா 2-1-1942-ல் ஜப்பான் வசமாயிற்று. பிலிப்பைனிலிருந்த அமெரிக்கத் துருப்புகள் அனைத்தும் கொரிகிடாரில் நடந்த கோரப்போரின் இறுதியில் 6-5-1942-ம் அன்று எவ்வித நிபந்தனையுமின்றி ஜப்பானியரிடம் சரணாகதியடைந்ததோடு அமெரிக்க பிலிப்பைன் யுத்தம் முடிந்தது. 9-3-1942-ல் எவ்வித நிபந்தனையுமின்றி ஜாவாவிலிருந்த நேசதேசப்படைகள் ஜப்பானியரிடம் சரணாகதியடைந்ததோடு டச்சு இந்தோனேஷியத்தீவுகள் ஜப்பான் வசமாயின. 27-4-1942-ல் மேற்கு நியூகினியும் ஜப்பான் வசமாயிற்று. 12-6-1942-ல் அமெரிக்காவிற்குச் சமீபத்திலிருக்கும் அலூஷன் தீவுகளிலுள்ள கிஸ்காவையும், அட்டுவையும், மற்ற சிலவற்றையும் ஜப்பான் பிடித்துக்கொண்டதால் நேசதேசத்தினருக்கு புதிய ஆபத்தேற்பட்டது. ஆகஸ்டில் பிரிட்டிஷ் சாலமன் தீவுகளை ஜப்பான் பிடித்துக்கொண்டது. ஆனால் அவை திரும்பவும் நேசதேச வசமாயின. இதன்றி ஜப்பானியர் 1942 எப்ரல் 5—10 தேதிகளுக்கிடையில் கொழும்பு, திருக்கோணமலை, விசாகபட்டணம், காகினாடா, சென்னை ஆகிய இலங்கை, இந்தியப் பிரதேசங்களை விமானங்களால் தாக்கியிருக்கின்றனர். கிழக்கிந்தியாவிலுள்ள சிட்டகாங்மீதும் பன்முறை விமானப் படையெடுப்புகளை நிகழ்த்தியிருக்கின்றனர். யுத்தமாரம்பித்ததிலிருந்து முதன்முதலாக இந்தியாவிலேயே மிகப்பெரிய நகரமாகிய கல்கத்தாவையும் 20-12-1942-ல் ஜப்பானிய விமானங்கள் மிகக்கடுமையாகத் தாக்கிவிட்டன. அசல் ஆப்ரிக்க, அமெ

ரிக்க, ஆஸ்திரேலியப் பிரதேசங்களில் சில பகுதிகளையும் ஜப்பானிய கடல் விமானப்படைகள் சமயம் வாய்த்தபோது நிம ரெனத் தாக்கியிருக்கின்றன. இதற்கிடையில் எதிரி விமானங்கள் ஜப்பானால் ஆக்கிரமிக்கப்பட்ட பிரதேசங்களில் ரங்கூன், பேங்காக், இந்தோ சீனு, ஹாங்காங் போன்ற சிலவற்றின் மீது அடிக்கடி மிருகத்தனமாகக் குண்டுகளை வீசியிருக்கின்றன. 18-4-1942-ல் ஒரேயொருமுறை ஜப்பான் தலைநகரான டோக்கியோ மீதும் குண்டுகளை வீசிவிட்டு ஓடியிருக்கின்றன.

மகாகிழக்காசிய யுத்தத்தைப் பற்றி இவ்வளவுதான் விஸ்தரிக்கலாம். இதைவிட அதிகமாகக்கூறினல் அது மிகைப்படுத்துவதாகும். ஏனெனில் ரஷிய—ஜெர்மன் யுத்தமுனையில் நடந்தது போன்ற கோரயுத்தம் இங்கு எங்கும் 1943 ஜனவரி முடியும்வரை நடக்கவில்லை. எதிரிகள் யுத்தம் செய்யாமலேயே மகாகிழக்காசியாவை விட்டோடிவிட்டனர் என்றுதான் சொல்ல வேண்டும். சுருங்கக் கூறில் இங்கு நடந்த யுத்தம் "நான் அடிப்பதுபோல் அடிக்கிறேன்; நீ அழுவதுபோல் அழு" என்றமாதிரிதான்.

ஆனல் எதிரிகள் இப்பிரதேசத்தை விட்டு ஓடும்போது ஏற்கனவே இருந்துவந்த சகல வசதிகளையும் நாசப்படுத்தி விட்டுப் போய்விட்டனர். ஜப்பானியப் படைகள் பொதுஜன வாழ்க்கையை யுத்தத்திற்கு முன்பிருந்த நிலைமைக்குக் கொண்டுவரும் பொருட்டு நாசமாக்கப்பட்டவைகளைப் புனர்நிர்மாணம் செய்த வேகந்தான் மிகவும் மெச்சக்கூடியது. பிடிபட்ட பிரதேசங்களில் மாஜி சர்க்கார்களின் செல்வாக்குகளைப் போக்கவேண்டி ஜப்பானிய இராணுவ நிர்வாகம் பல கடுமையான நடவடிக்கைகளை எடுத்துக்கொண்டது. பற்பல நாடுநகரங்களின் மாஜிப் பெயர்கள் மாற்றப்பட்டு அவைகளுக்குப் புதியபெயர்கள் வழங்கப்பட்டன. உதாரணமாக பினங்கு தீவிற்கு "டோஜோ-தோ" சிங்கப்பூர் தீவிற்கு "ஷோனன்-தோ" வேக்தீவிற்கு "ஓதோரி-தோ" ஜாவாவிற்கு "ட்ஜாவா" மலாயாவிற்கு "மலாய்" பத்தேவியாவிற்கு "தியாகர்த்தா" என்று புதியபெயர்கள் வழங்கப்பட்டன. ஆங்கிலோ-அமெரிக்க-டச்சு ஞாபகச் சின்னங்களகற்றப்பட்டு விட்டன. அப்பாஷைப் பள்ளிக்கூடங்களுக்குப் பதிலாக ஜப்பான் பாஷைப் பள்ளிக்கூடங்களேற்பட்டன. இவைகளிலும் பூகோளம், தேசசரித்திரம் போன்றபாடங்கள் விலக்

கப்பட்டன, இதனுல் ஆசிரியர்களும், மாணவர்களும் மாஜி சர்க்கார் செல்வாக்குகளை மறக்கவும், ஜப்பானிய நிர்வாக ஆக்கினைகளுக்காளாகாதிருக்கவும் முடிந்தது. சுருங்கக்கூறில் தன்னேடு ஒத்துழைப்பவர்களுக்கு முத்தம் கொடுத்தும், எதிர்ப்பாயிருந்தவர்களின் தலையை எடுத்தும் பிடிபட்ட நாடுகளிலிருந்த மாஜி சர்க்கார் செல்வாக்குகளை அறவேயகற்றி ஜப்பான் தனது நிர்வாகத்தை ஸ்தாபித்தது.

இந்த யுத்தத்தால் ஜப்பானுக்கு ஏராளன லாபம் கிடைத்தது. ஆங்கிலோ-அமெரிக்க-டச்சு-சீன நாடுகள் ஆயிரக்கணக்கான சதுரமைல் விஸ்தீரணமுள்ள நிலப்பரப்பையும், லக்ஷக்கணக்கில் துருப்புகளேயும், யுத்ததளவாடங்களேயும், கோடிக்கணக்கில் மூலதனங்களேயும், மலைபோன்ற மூலப்பொருள்களேயும் இழந்தன.

## மலாயா யுத்தம்

மலாயா யுத்தத்தை நேரில் கண்ட ஒருவனுல் எழுதப்படும் இப்புத்தகத்தில் மற்றதைவிட மலாயா யுத்த சரிதத்தைச் சற்றுத் தெளிவாக விளக்குவது மிகையாகாது. மேலும் யுத்தகாலத்தில் நாட்டினதும், நாட்டு மக்களதும் நிலைமை, சமராடும் தரப்பினரின் நடவடிக்கை, தோல்வியுற்றேடும் படைகளின் அட்டூழியம், வெற்றிபெற்ற படைகள் ஒழுங்கையும், அமைதியையும், சர்க்காரையும் ஸ்தாபிக்கும் விதம், இதற்கிடையில் பொது ஜனங்கள் படும் அவஸ்தைகள் போன்ற ருசிகரமான சம்பவங்கள் இதில் குறிப்பிடப்பட்டிருக்கின்றன.

1939 செப்டம்பரில் பிரிட்டன் ஜெர்மனி மீது யுத்தப்பிரகடனம் செய்தது. காலில் வலியெடுத்தால் அது திரேக முழுமையும் பாதிக்கிறது. அதேபோல் ஐரோப்பிய யுத்தத்தால் பிரிட்டிஷ் குடியேற்ற நாடுகளனைத்தும் பாதிக்கப்பட்டன. ஜப்பான் ஜெர்மனியின் நண்பநாடு. மேலும் ஆங்கிலோ—அமெரிக்க நாடுகள் கிழக்காசியாவில் தமது செல்வாக்கை பெருக்கிக்கொண்டு வந்து, ஜப்பானிய முன்னேற்றத்திற்கு முட்டுக்கட்டையிடுவதை ஜப்பான் விரும்பவில்லை. குற்றமுள்ள நெஞ்சு குறுகுறுக்கும், குறும்பியுள்ள காது திணர்வெடுக்குமென்பதற்கொப்ப பிரிட்டிஷார் மலாயாவிலும் யுத்த சன்னத்தமாயினர். ஆயிரக்கணக்கான இந்தியத் துருப்புகளும், ஆஸ்திரேலியத்

துருப்புகளும், பிரிட்டிஷ் துருப்புகளும் மலாயா வந்தன. இதன்றி உள் நாட்டிலும் சீனர், இந்தியர், மலாய்க்காரர், சட்டைக்காரர் ஆகியோர்களைக்கொண்ட "வாலண்டியர்" படையும், மலாய்க்காரர் பட்டாளமும் திரட்டப்பட்டன. மலாயாவைப் பாதுகாக்க வெளிநாடுகளிலிருந்து கொண்டுவரப்பட்டிருந்த துருப்புகள் மலாயாவின் பற்பல பாகங்களிலும் அணிவகுத்து நிறுத்தப்பட்டிருந்தன. மலாயாவெங்கும் விமானப்படையெடுப்புத் தற்காப்பறைகள் நிறுவப்பட்டன. விளக்கணைப்புபோன்ற விமானப்படையெடுப்பு தற்காப்பு முன்னெச்சரிக்கைப் பயிற்சிகள் அடிக்கடி நிகழ்த்தப்பட்டன. பத்திரிகைப்பிரசுரம், கடிதப் போக்குவரத்து முதலியவைகளைத் தணிக்கை செய்யும் வேலையும் ஆரம்பமாயிற்று. மலாயா வானில் இடைவிடாது பிரிட்டிஷ் விமானங்கள் வட்டமிட்டுக்கொண்டிருந்தன. சிங்கப்பூர் தீவு கீழ்நாட்டின் ஜிப்ரால்டர் என்று பிரமாதப்படுத்தப்பட்டுவந்தது. கோடிக்கணக்கான வெள்ளி செலவில் அங்கு ஓர் பலம்பொருந்திய கடற்படை தளமும், விமானதளமும் அமைக்கப்பட்டிருந்தன. பிரிட்டிஷ் யுத்த செலவிற்காக மலாயா பொதுஜனங்களிடமிருந்து விசேஷ வரிகள் வசூலிக்கப்பட்டன. உள்நாட்டுத் தபால் கட்டணம் கடுதாசிக்கு 6 காசிலிருந்து 8 காசாக உயர்த்தப்பட்டது. ஏற்றுமதி, இறக்குமதி வரிகள் அபரிமிதமாக உயர்த்தப்பட்டன. இதுவும் போதாதென "யுத்தவரி" என்ற ஒன்றும் விதிக்கப்பட்டது. பொதுஜனங்களின் வாழ்க்கைச் செலவு விஷம்போலுயர்ந்துவிட்டது. இதற்கிணங்க சகல தொழிலாளர்களது தினசரி சம்பளம் உயர்த்தப்பட்டும், இந்தியத் தொழிலாளர்கள் சிறிது உயர்வு கோரியதற்காக மலாயாவைப் பாதுகாக்கவந்த பிரிட்டிஷ் துருப்புகளால் ஈவிரக்கமின்றி சுட்டுத்தள்ளப்பட்டனர். பொதுஜனங்களுக்கு உணவுப்பொருள் விநியோகத்தைக் கட்டுப்பாடு செய்யும் சட்டமும் அமுலுக்கு வந்தது. இவ்விதமாக 1939—40—41 ஆகிய மூன்று வருடங்களையும் அவசரச் சட்டங்களால் சர்வ வகையிலும் வாய்பூட்டிடப்பட்டிருந்த பொதுஜனங்கள் மூன்று யுகங்களாகக் கழித்தனர். ஆனால் இங்கிருந்த பிரிட்டிஷ் பத்திரிகைகளும், அதிகாரிகளும் எதிரி மலாயாவில் அடியெடுத்துவைக்கக் கனவுகூடகாணப் பயப்படும்படியாக தமது தற்காப்புகள் பலப்படுத்தப்பட்டிருக்கின்றனவென்று வாய்வேதாந்தம் பேசிக்கொண்டிருந்தனர்.

பெர்லிஸ், கிட்டா, கெலண்டான், திரங்கானு, ஜோகூர், பேரா, சிலாங்கூர், பகாங், நகரி செம்பிலான், பினங்கு (பிராவின்ஸ் வெல்லஸ்லியுள்பட), மலாக்கா, சிங்கப்பூர் என்று மலாயாவைப் பிரிட்டிஷார் 12 நிர்வாகப் பகுதிகளாகப் பிரித்துவைத்திருந்தனர். இங்கு வசிப்பவர்களில் பெரும்பான்மையோர் சீனர்கள். அடுத்தது மலாய்க்காரர்கள். மூன்றாவது இந்தியர்கள். நான்காவது பலபட்டறைகளைக்கொண்ட கதம்பத்தின் மொத்தம். இங்கு உற்பத்தியாகும் முக்கிய பொருள்கள் ரப்பரும், ஈயமும்தான். இவ்வுலகிலுள்ள சகல ஜாதியினர், சகல மதங்கள், சகல கல்வி, கலாசாரம், பழக்கவழக்கங்கள், சகல சமூக தேசியங்கள், சகல கொள்கைகள், சகல கக்ஷிகள், சகல நாட்டு நாணயங்கள், தபால் முத்திரைகள் ஆகிய இன்னும் பலவற்றையும் சேர்த்து ஒரேயொரு சிறியகாட்டில் கண்டுகளிக்க விரும்பியவர்கள் அன்று மலாயாவுக்கு வந்திருக்கவேண்டும். இவ்வித பலபட்டறை விஷயங்கள் நிறைந்த ஓர் நாட்டைச் சுரண்டுவது பிரிட்டிஷ் முதலாளிகளுக்கு மிகவும் எளிதாயிருந்தது.

மலாயாவின் வடகோடியிலுள்ள பெர்லிஸ்—கிட்டா சமஸ்தானங்களையொட்டி சயாம் இருக்கிறது. பிரஞ்சு இந்தோசீனவிலிருந்த ஜப்பானியத் துருப்புகள் சயாம் வழியாக மலாயாவிற்குள் படையெடுப்பதை எதிர்த்துப்போராடவேண்டுமென பிரிட்டிஷார் சயாம் அதிகாரிகளைத் தாஜாப்பண்ணி வைத்திருந்தனர். ஜப்பானிய துருப்புகள் மலாயாவின் கிழக்குக்கரையில் இறங்கிவிடாதபடி கெலண்டானிலுள்ள கோட்டாபாருவையும் சிங்கப்பூரையும் பிரிட்டிஷார் கொஞ்சம் பலப்படுத்திவைத்திருந்தனர். மற்றபடி மலாயா தற்காப்பனைத்தும் வெறும் பகட்டுதான்.

இந்நிலைமையில் 7-12-1941 இரவு 1-மணிக்கு யுத்தப்பிரகடனம் செய்ததும் இந்தோ சீனவிலிருந்த ஜப்பானியத் துருப்புகளின் ஒருபகுதி சயாமீதும், மற்றொருபகுதி கோட்டாபாருமீதும் பாயத்தொடங்கின. விடிய சிலமணி நேரத்திற்கு முன்பே ஜப்பானிய விமானங்கள் சிங்கப்பூரிலும் கோட்டாபாருவிலும் வாணவேடிக்கைகளை நடத்திவிட்டன. மலாயா வாசிகளின் நிலைமையை அன்று (8-ம் தேதி) பார்க்கவேண்டுமே. எங்கும் ஒரே கொந்தளிப்பு, பீதி, சந்தோஷம், துக்கம் ஆகிய சகலமும் ஒருங்கே பொதுஜனங்களுக்கிடையில் தாண்டவமா

டலாயின. 5-மணிநேரம் எதிர்த்துப்போராடிய பிறகு சயாம் ஜப்பானுடன் சாமாதானம் செய்துகொண்டது. எனவே ஜப்பானிய துருப்புகள் வெகுவிரைவில் சயாமின் வழியாக மலாயாவின் வடக்கு எல்லைக்குள் பிரவேசித்து, பெர்லிஸையும் கோட்டாபாருவையும் பிடித்துக்கொண்டன. சயாமை நம்பிக்கொண்டு பிரிட்டிஷார் வடமலாயாவை நன்கு பலப்படுத்தவில்லை. எனவே ஜப்பானியரின் பலமிகுந்த தாக்குதலைத் தாங்க முடியாது பிரிட்டிஷ் துருப்புகள் பின்வாங்கத் தொடங்கின. இவைகள் பின்வாங்கும்போது பொதுஜனங்களுக்கோ அல்லது எதிரிகளுக்கோ அறிவித்ததே இல்லை. அதன் பயனாக பினாங்கு போன்ற ஜனநெருக்கமுள்ள இடங்கள் பிரிட்டிஷார் காலி செய்த பிறகுங்கூட ஜப்பானிய விமானங்களால் மிகக்கடுமையாகத் தாக்கப்பட்டன. மேலும் பிரிட்டிஷார் பின்வாங்கிய ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் வெள்ளையர்களை மட்டிலும் முன் ஜாக்கிரதையாக வெளியாக்கிக்கொண்டனரே யன்றி இந்தியர் சீனர் போன்ற மற்ற ஆசிய சமூகத்தினர்களைச் சிறிதும் லட்சியம் செய்யவில்லை. பிரிட்டிஷாரும் ஓடிவிட்டனர். ஜப்பானியரும் வரவில்லை. பினாங்கு நாதியற்றுக் கிடந்தது. இச்சமயத்தில் அங்குவசிவுள்ளவர் ஒவ்வொருவரும் ஒவ்வொரு சர்வாதிகாரியாக விளங்கினர். கொள்ளைகள், கொலைகள், அடிதடிகள், நரசோரங்கள் போன்ற அநீதங்கள்தான் அங்கு தாண்டவமாடின. யார் சொத்து யாருக்குச்சொந்தம்? வெளியில் போனவர் வீடு திரும்புவர் என்று யார்சொல்லமுடியும்? தண்ணீர் சப்ளை, மின்சார சப்ளை, ரோட்டுகள், பாலங்கள் எல்லாம் ஓடிப்போனவர்களால் உடைத்தெறியப்பட்டுவிட்டன. பேங்குகள் தபாலாபீஸ்கள் போன்ற சகலபொருளாதார நிலையங்களும் ஓடிவிட்டன. தெருக்களில் பிணக்குவியல்களும், இடிந்து எரிந்து சாம்பலானக் கட்டிடங்களும் காக்ஷியளித்துக்கொண்டிருந்தன. கோடீஸ்வரன் கோவணாண்டியானான். கோவணாண்டி கோடீஸ்வரனானான். காலால் நடந்த மனிதன் தலையால் நடக்கலானான். ஆயுள் காலமெல்லாம் கஷ்டப்பட்டுத்தேடி, வயோதிக காலத்திற்காகவும், பிள்ளைகுட்டிகளுக்காகவும் சேமித்து வைத்திருந்த சகலத்தையும் எடுத்துக்கொண்டோடி விட்டனரே, குடிக்கத் தண்ணீரில்லையே, இருக்கவிடமில்லையே, வீட்டில் விளக்கில்லையே என்பனவைதான் குண்டுக்குத் தப்பிபிழைத்தவர்களின் கூக்குரல். இந்நிலைமையில் பினாங்கை ஜப்பானிய விமானங்கள்

மீண்டும் மீண்டும் தாக்கிவந்தன. காரணமென்னவெனில் பிரிட்டிஷார் பினங்கை விட்டோடி நாட்கள் பலவாகிவிட்டனவெனினும், அங்கு கண்ணுக்கெட்டாத உயரத்தில் பிரிட்டிஷ் கொடி இனியும் பறந்துக்கொண்டிருந்ததுதான். பிரிட்டிஷார் இனியும் அங்கிருப்பதாக எண்ணியே ஜப்பானிய விமானங்கள் அவ்விதம் தாக்கின. பிறகு ஆசிய பொதுஜனத் தலைவர்களில் சிலர் அக்கொடியைத் தாழ்த்திவிட்டு, இதற்கிடையில் கிட்டா சமஸ்தான தலைகாரான அலோர்ஸ்டாரைப் பிடித்துக்கொண்டு சுங்கைபட்டணிக்குள் வந்திருந்த ஜப்பானிய துருப்புகளிடம் வெள்ளைக் கொடியை (சமாதான அறிகுறி) ஏந்திக்கொண்டுபோய் விஷயத்தைக்கூறி அவர்களைப் பினங்குக்கு அழைத்துவந்தனர். இவ்விதமாக பினங்குநகர் 19-12-1941-ல் ஜப்பானின்வசமாயிற்று. அதன் பிறகுதான் அங்கு ஒழுங்கும் அமைதியும் சிறுகச்சிறுக நிலைநாட்டப்பட்டது. பிரிட்டிஷார் பின்வாங்கும்போது பொதுஜனங்களுக்கோ அல்லது எதிரிக்கோ அறிவிக்காதுபோனது ஒருபுறமிருக்க முன்னணியில் எதிரிகளைத் தடுத்துத்தாக்கிக்கொண்டிருந்த தமது சொந்த ஆசியத்துருப்புகளுக்குக்கூட விஷயத்தை அறிவிக்காதிருந்ததுதான் பெரிதும் வருந்தத்தக்கது. இதைவிட அவர்கள்செய்த மற்றோர் முட்டாள்தனமென்னவெனில் தம் முன்னணிப்படைகள் திரும்பவும் தம்மிடம்வந்து சேரமுடியாதவாறு இடையிலிருந்த பாலங்களையும், ரஸ்தாக்களையும் தகர்த்துவிட்டதுதான். இதனால் மிகமிகக் கடுமையாகப் பாதிக்கப்பட்டவர்கள் இந்திய சிப்பாய்கள். ஏனெனில் எப்பொழுதும் முன்னணியில் இந்தியர்களும், பின்னணியில் ஆஸ்திரேலியர்களும், மூன்றாவதாகப் பிரிட்டிஷ் துருப்புகளுமாக அணிவகுக்கப்பட்டிருந்தனர். பிரிட்டிஷ் இராணுவ தந்திரம் இவ்வளவு மகாத்மியம் பொருந்தியது. இதனால் கணக்கற்ற இந்தியத் துருப்புகள்தான் மாளவும், எதிரிகளிடம் சரணாகதியடையவும் நேர்ந்ததெனினும் பிரிட்டிஷார் தோல்வியுற்றதற்குள்ள முக்கிய காரணங்களில் இதுவுமொன்று.

இவ்விதமாக ஜப்பானிய துருப்புகள் பினங்கிலிருந்து மலாயாவின் மேற்குக்கரை நெடுகவும், சுங்கைப்பட்டாணியிலிருந்து மலாயாவின் நடுவில் நெடுகவும், கோட்டாபாருவிலிருந்து மலாயாவின் கிழக்குக்கரை நெடுகவுமாகத் தெற்குநோக்கி பிரிட்டிஷ் துருப்புகளை விரட்டிக்கொண்டேவந்தன. பிரிட்டிஷ் துருப்பு

களும் பின்வாங்கிக்கொண்டே தெற்குநோக்கி ஓடியவண்ணமிருந்தன. பினங்குவாசிகளைப்போலவே மலாயாவின் சகல நகரவாசிகளும் அல்லல் பட்டுக்கொண்டே யிருந்தனர். இவ்விதமாக கொல்லப்பட்டும், கைதுசெய்யப்பட்டும் போன துருப்புகள் போக எஞ்சிய துருப்புகள் இறுதியாக சிங்கப்பூருக்குள் போய் புகுந்தன. 8-2-1942-ம் தேதி ஜப்பானிய துருப்புகள் சிங்கப்பூர்மீதும் பாய்ந்தன. அத்தீவின் நாலாபக்கங்களிலும் ஜப்பானிய படைகள் சுற்றிவளைந்துகொண்டன. இரவு பகலாக எட்டுநாட்கள் இடைவிடாது கடுமையாகத் தாக்குண்டதன் பிறகு சிங்கப்பூரிலிருந்த 95,000 இந்திய, ஆஸ்திரேலிய, பிரிட்டிஷ் துருப்புகளும், அவற்றின் பிரிட்டிஷ் சேனைபதியான லெப்டினண்டு ஜெனரல் ஏ. இ. பெர்ஸிவலும் 15-2-1942-ம் தேதி மாலை 7-50-மணிக்கு ஜப்பானிய துருப்புகளின் சேனைபதியான லெப்டினண்ட் ஜெனரல் டோமோயுகி யாமாஷித்தாவிடம் எவ்வித நிபந்தனையுமின்றி சரணாகதியடைந்தனர். 17-ம் தேதி சிங்கப்பூருக்கு "ஷோனன்-தோ" என்று ஜப்பானியர் புதிய பெயரிட்டனர். (ஷோனன்-தென் பிரதேச தீபிகை; தோ-தீவு) இத்தோடு மலாயா யுத்தமும் முடிந்தது.

இனி பிடிபட்ட பிரதேசங்களில் பொதுஜன நிலைமை என்னவென கவனிப்போம். "யுத்தகாலப் பொய்கள்" எனும் ஆங்கிலப் புத்தகத்தைப் படித்தவர்களுக்கு பொதுஜன நிலைமை நன்கு விளங்கும். இருதரப்பினரும் தத்தமக்குச் சாதகமாகப் பிரசாரம் செய்வர். இரண்டாட்டில் பட்டகுட்டிபோல் பொதுஜனங்களின்பாடு திண்டாட்டமாகிறது. பழைய சர்க்காரோ ஓடிவிட்டது. அதன் சட்டதிட்டங்கள், சிப்பந்திகள், நிர்வாக இலாகாக்கள் ஆகிய எல்லாம் பறந்துவிட்டன. போலீஸ் பந்தோபஸ்தில்லை, கோர்ட்டுகளில்லை. பொதுஜனங்களும் தத்தம் வீடுவாசல்களை விட்டுவிட்டு விமானத்தாக்குதலுக்குப் பயந்து ஒதுக்கிடம் தேடிகிராமாந்திரப் பக்கங்களுக்கோடி விட்டனர். நடுநிசியில் சுடுகாட்டில் பிணந்திருடும் நரிகளைப்போல் மக்கள் நகரங்களில் கொள்ளையிட்டனர்; கொலைசெய்தனர். இதில் நல்லவர்களும், கெட்டவர்களும் சரிசமமாகக் கலந்துகொண்டனர். பகலெல்லாம் இப்படி. இரவில் ஈங்குருவியின் சப்தம்கூடகேட்காது. ஆனால் ஒதுக்கிடந்தேடி கிராமாந்திரங்களுக்குச் சென்ற




சிங்கப்பூர்
சரணாகதி

மலாயா யுத்தமாரம்பித்த 8-12-1941-ந் தேதியிலிருந்து 69-ம் நாளாகிய 15-2-1942-ந் தேதி யன்று நிபந்தனையின்றி சரணாகதியடைய தயாரென பிரிட்டிஷ் லெப். ஜெனரல் பெர்ஸிவல் வெள்ளைக் கொடியைத் தூக்கிக்கொண்டு "மலாயா புலி" யெனும் ஜப்பானிய லெப். ஜெனரல் யாமாஷிதாவிடம் செல்வதைக் காட்டும்படம்.

பொதுமக்களின் நிலைமை இதற்கு நேர்மாற்றம். அங்கு பக லெல்லாம் யுத்தத்தைத்பற்றிய சம்பாஷணையும், சிட்டாட்டமும் தான் நேரப்போக்கு. இரவெல்லாம் தீவட்டிக்கொள்ளைக்காரக் கும்பல்களின் அட்டகாசம். ஜனங்கள் முன்போல் இங்குமங் குமுலாவ முடியாதபடி ரஸ்தாக்கள் தகர்க்கப்பட்டுவிட்டன. கார்கள் போன்ற ஊர்திகளை ஓடியவர்களும், துரத்தியவர்களும் பொதுஜனங்களிடமிருந்து பிடுங்கிக்கொண்டு போய்விட்டனர். எஞ்சியிருந்தவைகளுக்குப் பெட்ரோல் கிடைத்தாலும் அவை கள் ரஸ்தாக்கள் சரியில்லாதிருக்கையில் எங்ஙனம்ங் போய்வர முடியும்? இதற்கிடையில் பொதுஜன சொத்து சுகங்களைக் கொள்ளையடித்த பொதுஜனங்களை ஓடிய துருப்புகளும், வந்த துருப்புகளும் கொள்ளையடித்தன.

இங்ஙனமிருக்க வெற்றியடைந்த படைகள் ஒவ்வொரு நகரிலும் எங்ஙனம் சமாதானத்தையும், அமைதியையும், ஒழுங் கையும் நிலைநாட்டின வென்பதைக் கவனிப்போம். யுத்தகாலத் தில் பத்திரிகைதான் ஜனங்களுக்கு இணைபிரியாத் தோழன். ஆனல் மாஜி சர்க்கார் ஓடிவிடவே மாஜிப் பத்திரிகைகளும் நின்றுவிட்டன. ஜனங்கள் அந்தகாரத்தில் மூழ்கியிருந்தனர். வதந்திகளோ கற்பனு சக்திக்கும் எட்டாதவாறு பரவிவந்தன. இந்நிலைமையில் ஜப்பானியரின் முன்னணிப்படையினர் (Suicide Squad) நகரில் பிரவேசித்தனர். அவர்களைக்காண ஜனங் கள் ரஸ்தாகளில் திரள் திரளாகக் குழுமியிருந்தனர். அளவு கடந்த அன்பினல் ஜனங்கள் தத்தம்மிடமிருந்த சகலத்தை யும் அவர்களுக்குத் தானம் செய்தனர். ஆனல் இருசாரா ரும் ஊமைகளைப்போல் பேசிக்கொண்டனர். காரணமென்ன வெனில் வெற்றிவீரர்களுக்கு உள்ளூர் பாஷை தெரியாது. உள் ளூர் வாசிகளுக்கு ஜப்பான் பாஷை தெரியாது. இவ்விதமாக முன்னணிப்படை எதிரிகளைத் துரத்திக்கொண்டு போய்விட் டது. அடுத்தப்படியாக ஆயிரக்கணக்கான ஜப்பானிய பின்ன ணித் துருப்புகள் வந்தன. ஊரெங்கும் பாராசெய்தன. கொள் ளைகளும், கொலைகளும் ஒருவாறு தணியலாயின. ஆனல் அவைகளும் எதிரிகளைத் துரத்திக்கொண்டு போய்விட்டன. மூன்ருவதாக இராணுவ நிர்வாக இலாக்காவினரும், இராணு வப் போலீஸாரும் வந்தனர். முற்றிலும் நிலைகுலைந்துபோன ஓர் ஊரைப் பழைய நிலைமைக்குக் கொண்டுவர அஹிம்சையும்,

ஈவிரக்கமும் பயனற்றவை. எனவே அவர்கள் மிகவும் பயங்கரமாக நடந்துகொள்ளவேண்டிய நிர்ப்பந்தமேற்பட்டது. இதற்கிடையில் யுத்தம் செய்யாமலேயே ஓடிப்போன எதிரிகளின் சில விமானங்கள் இரவில் வந்து ஊரை இரண்டொரு நாட்கள் தாக்கின.

நிற்க பிரத்தியக்ஷமாய் யுத்தமாரம்பிக்குமுன்பே பொது ஜனங்களில் பலர் நாணயங்களைச் சேகரித்து வைத்திருந்தனர். ஆனால் ஜப்பான் சர்க்கார் வந்ததும் பிரிட்டிஷ் நாணயம் செல்லாதென்ற வதந்தி பரவவும் தனம் படைத்தோர் நிலம் வாங்குவதில் தீவிரமாயினர். எங்ஙனமாயினும் ஜப்பான் சர்க்கார் வந்த பிறகும் பிரிட்டிஷ் நாணயங்கள் செல்லத்தக்கவையாய்த்தான் இருந்தன. இத்தோடு ஜப்பானிய பட்டாளமும் புதிய வெள்ளி நாணய நோட்டுகளைக் கையோடு கொண்டுவந்தது. பிரிட்டிஷ் நாணயமும் ஜப்பான் நாணயமும் ஒரே (சரிசமான) மதிப்புடையவையென்றும், இரண்டும் செல்லத்தக்கவையென்றும் ஜப்பானிய இராணுவசர்க்கார் பிரகடனப்படுத்தியது. ஆனால் இரு நாணயங்களுக்குமிடையில் ஒரு வித்தியாசம். அதாவது பிரிட்டிஷ் நாணயத்தில் வெள்ளிநோட்டைத் தவிர இதரவை உலோகத்திலிருந்தன. ஆனால் ஜப்பான் நாணயத்தில் ஒரு காசுக்குக்கூட நோட்டு வெளியாகியிருந்தது. உலோக நாணயமே ஜப்பான் இராணுவ சர்க்கார் உபயோகிக்கவில்லை.

பிடிபட்ட ஒவ்வொரு நகரிலும் அந்தந்த "சமூக சமாதான ஸ்தாபிதக் கமிட்டிகளை" (Community Peace Preservation Committees) புதிய சர்க்கார் நிறுவலாயிற்று. அதன்படி இந்தியர்களுக்கென அச்சமூகப் பிரதிநிதிகளைக்கொண்ட ஓர் கமிட்டி நியமிக்கப்பட்டது. அக்கமிட்டி இந்தியர்கள் சம்பந்தப்பட்ட சகல பிரச்னைகளையும்பற்றி புதிய சர்க்காருக்கு ஆலோசனைகூறி, அனுமதிபெற்று, தன் கடமையை நிறைவேற்றியது. இதேபோல் சீனர், மலாய்க்காரர், சட்டைக்காரர் ஆகியவர்களுக்கும் கமிட்டிகள் இருந்தன. இக்கமிட்டிகளின் பிரதிநிதிகளைக்கொண்ட ஓர் பொது சமாதான ஸ்தாபிதக் கமிட்டி நகர சுகாதார வேலைகளைக் கவனிக்கலாயிற்று. பிறகு தண்ணீர் சப்ளை இலாகா, மின்சார சப்ளை இலாகா, பொது மராமத்திலாகா, வைத்திய இலாகா, நகரபரிபாலன சபை போன்றவைகள் மாஜி சர்க்கார் சிப்பந்திகளைக்கொண்டு திரும்பவும் ஆரம்பிக்

கப்பட்டன. மாஜி சர்க்கார் காலத்தில் அவ்வவ்விலாகாக்களில் சிப்பந்திகளாயிருந்தவர்களில் அனுபவம் நிறைந்தோர் இப்பொழுது தலைவர்களாயினர்.

ரயில், தந்தி, தபால், ரஸ்தா போக்குவரத்துகள் கொஞ்சங் கொஞ்சமாக புனர் நிர்மாணம் செய்யப்பட்டு வந்தன. பழைய போலீஸ்காரர்கள் திரும்பவும் நியமிக்கப்பட்டனர். கோர்ட்டுகளும் திறக்கப்பட்டன. பழைய சட்டங்களில் புதிய சர்க்காருக்குச் சாதகமானவை அமுலுக்கு வந்தன. புதிய சட்டதிட்டங்கள் இயற்றப்பட்டன. கொள்ளையடித்த சாமான்களைத் திரும்பக்கொடுத்துவிடவேண்டுமென்று சட்டம் பிறந்தது. கொடாதவர்களில் கண்டு பிடிக்கப்பட்டவர்களுக்குக் கடுந்தண்டனை விதிக்கப்பட்டது. புதிய சர்க்காருக்கு விரோதமான வேலைகளில் ஈடுபட்டவர்களின் சிரங்கள் முச்சந்திகளில் நட்டு வைக்கப்பட்டன. நாட்டில் அமைதியும், சமாதானமும், ஒழுங்கும் ஓரளவுக்கு நிலவலாயின. இவ்விதமாகச் சுமார் ஆறு மாத காலம் கழிந்தது. இதற்கிடையில் புதிய சர்க்கார் நாட்டைப் புனருத்தாரணம் செய்து ஓரளவு பழைய நிலைமைக்குக் கொண்டு வந்துவிட்டது.

எனினும் இச்சமயத்தில் மேற்கொண்டு இரு சங்கடங்களேற்பட்டன. முதல் ஆறு மாதம் வரை ரயிலில் இலவசமாய்ப் பிரயாணம் செய்ய பொது ஜனங்களை இராணுவ சர்க்கார் அனுமதித்துக்கொண்டிருந்தது. ஜனங்கள் அதிகக் கவலையின்றி காலத்தைக் கழித்தனர். ஆனல் இப்பொழுது போக்குவரத்திற்குக் கட்டணமேற்பட்டதோடு, ஒரு இடத்திலிருந்து மற்றோரிடத்திற்குச் சாமான்கள் கொண்டுபோவதற்கும் தடையேற்பட்டது. மேலும் ஏற்கனவே பலவகையிலும் கையில் சேமித்து வைத்திருந்த கொஞ்சநஞ்சத்தையும் ஜனங்கள் இதற்கிடையில் செலவழித்துவிட்டனர். உண்ண உணவில்லை. என்ருலும் கள்ளத்தனமாக எல்லாம் நடந்துவந்தன. உதாரணமாக இந்த யுத்தத்திற்கு முன்பு 30 காசுக்கு விற்ற ஒரு கந்தம் அரிசி 4 வெள்ளிக்கும், ஒரு வெள்ளிக்கு விற்ற காகிதம் 50 வெள்ளிக்கும், ஒரு வெள்ளிக்கு விற்ற துணி 10 வெள்ளிக்குமாக விற்கலாயிற்று. எனவே வேலையில்லாத் திண்டாட்டம், வாழ்க்கைக்கு வேண்டிய சாமான்களுக்கேற்பட்ட பஞ்சம் ஆக இரு சிக்கலான பிரச்னைகளைத் தீர்க்கவேண்டியிருந்தது. அவையும் கொஞ்சங்

கொஞ்சமாகத் தீர்க்கப்பட்டு வந்தன. இதற்காக ரப்பர் தோட்ட வேலையும், ஈயச்சுரங்க வேலையும், விவசாயமும் சர்க்கா ரால் புதிதாக ஆரம்பிக்கப்பட்டன. இவ்விதமாக ஒரு வருடம் கழிந்தது. இதற்கிடையில் மாஜி சர்க்காரில் தபாலாபீஸ் சேவிங்ஸ் பேங்கில் பணம் போட்டிருந்தவர்களுக்கும் கொஞ்சங் கொஞ்சமாகப் பணம் திருப்பிக்கொடுக்கப்பட்டது. அதே போல் ஆசிய பேங்குகளில் காசு சேமித்து வைத்திருந்தவர்களுக் கும் கொஞ்சம் கொஞ்மாகத் திருப்பிக்கொடுக்கப்பட்டது. ஆனால் மேற்கத்திய பேங்குகளில் காசுபோட்டிருந்தவர்களுக்குச் செருப் பாலடித்த சின்னக்காசுகூட திருப்பிக்கொடுக்கப்படவில்லை.

நிற்க ஆங்கிலோ-அமெரிக்கர்கள் திரும்பவும் மலாயாவைப் பிடிக்க இதோ வருகின்றனர், அதோ வருகின்றனர், பினங் கைத் தாக்கிவிட்டனர், சிங்கப்பூரைத் தாக்கிவிட்டனர் என்று வதந்திகள் பரவி வந்தன. இதற்கிடையில் சயாம், இந்தோ சீனு, ஹாங்காங், பர்மா போன்ற விடங்களைச் சிற்சில சமயங் களில் ஆங்கிலோ-அமெரிக்க விமானங்கள் தாக்கியதுண்டு. எனவே மலாயாவிலும் அவ்வப்போது விளக்கணைப்பு போன்ற தற்காப்பு நடவடிக்கைகள் எடுத்துக்கொள்ளப்பட்டன. மேலும் இந்நாட்டில் யுத்தக்காலத்தில் வதந்திகள் அதிகமாகப் பரவிய தற்குக் காரணமென்னவெனில் எதிரிநாட்டு நிகழ்ச்சிகளையும், செய்திகளையும் அறிந்துகொள்ளாதபடி ரேடியோக்கள் விலக் கப்பட்டதுதான்.

மலாய் நாட்டில் வதிபவர்களில் பெரும்பாலோர் சீனர், இந்தியர் போன்ற வெளிநாட்டவர்கள்தான். இந்த யுத்தத்தின் பயனாக அவர்களுக்கும், தத்தம் தாய்நாட்டினருக்கும் எவ்விதத் தொடர்புமில்லாது போயிற்று. சிங்கப்பூர் வீழ்ச்சிக்கு முன்பு தத்தம் தாய்நாட்டிற்கோ அல்லது ஒதுக்கிடம் தேடியோ மலா யாவைவிட்டு வெளியேறியவர்கள் போக எஞ்சியவர்கள் ஓர் தனிஉலகில் வாழ்ந்தனர் என்றுதான் கூறவேண்டும். என்று லும் இந்தியாவிலிருந்து மலாயாவிலுள்ள உற்றார், உறவினர் களுக்கும், நண்பர்களுக்கும், சிப்பந்திகளுக்கும் ரேடியோ மூலம் க்ஷேமச் செய்திகள் வந்தன. ஆனல் அவற்றை நேரில் கேட்க இந்தியர்களுக்கு மலாயாவில் ரேடியோக்கள் இல்லை. எனவே செய்திகளைக் கேட்டுப் பத்திரிகைகளில் பிரசுரிக்கும் படிக்கும், மலாயா இந்தியர்களின் க்ஷேமச்செய்திகளை. வாங்கி

ரேடியோமூலம் இந்தியாவுக்கு அறிவிக்கும்படிக்கும் புதிய சர்க்கார் இந்திய சுதந்திர சங்கத்திற்கு அனுமதி கொடுத்தது. 20 வார்த்தைகள் கொண்ட ஓர் செய்திக்கு முதலில் $3-ம் பிறகு $1-மாகக் கட்டணம் விதிக்கப்பட்டது. இச்செய்திகளில் ஜனனம், மரணம், மணம் போன்ற குடும்பநிகழ்ச்சிகள் தவிர அரசியல், பொருளாதாரம் சம்பந்தப்பட்ட விஷயங்கள் கலந்திருக்கக்கூடாது. இவ்விதமாக 8-12-1942-ம் தேதியும் போடு போடென்று வந்தது. மகாகிழக்காசிய யுத்தமுதல் வருடாந்த விழாவும் கொண்டாடப்பட்டது. அதன் ஞாபகார்த்தமாக பிடிபட்டபிரதேசங்களில் புதிய ஜப்பானிய தபால் முத்திரைகள் (ஸ்டாம்புகள்) அன்று விற்பனைக்கு வந்தன.

இந்த ஒரு வருட காலத்தில் ஏற்பட்ட குறிப்பிடதக்க மாறுதல்கள் என்னவெனில் கோட்டு, டை, காலர் போன்ற மேனாட்டு உடைதரிக்கும் நாகரிகமும், ஏழை-பணக்காரன், எஜமான்-தோட்டி, ஜாதி, மதம், வகுப்பு, பாஷை போன்ற இன்னும் பற்பல பேதங்களும் அநேகமாக மறைந்துவிட்டதுதான். அதற்கு மாறாக "சர்வம் விஷ்ணுமயம்ஜகத்" என்பதுபோல் மலாயாஎங்கும், எல்லாம் ஜப்பானிய மயமாக்கப்பட்டு வந்தன. தெருக்களின்பெயர்கள் கடை கண்ணார்களின் விலாசப்பலகைகள் முதல் சர்வமும் ஜப்பான் பாஷை எழுத்துகளில்தான் பொறிக்கப்பட்டிருக்க வேண்டுமென உத்திரவிடப்பட்டது. இந்த நிமிஷத்தில் இந்தியாவுக்குக் கப்பல் போக்குவரத்தேற்பட்டாலும் நான் ஊர் போய் சேரத் தயார் என்று மலாயாவையே தாய்நாடாகக் கொண்ட இந்தியர்கூட தைரியமாகக் கூறத்தொடங்கி விட்டனர்.

## ஏககாலத்தில் மூன்று சர்க்கார்கள்

சாதாரண காலத்தில் அளவுகடந்த இறக்குமதிகள் உலகின் பல நாடுகளிலிருந்தும் மலாயாவிற்குள் வந்து குவிந்துகொண்டே இருக்கும். ஆனால் யுத்தகாலத்தில் அது அறவே கிடையாது. எனவே சகலவித சாமான்களுக்கும் கடும்பஞ்சம் ஏற்பட்டது. வாழ்க்கைச்செலவு மலைபோல் உயரத்தொடங்கியது. நகக்கண்ணில் அழுக்கு படியாதபடி சுகஜீவனம் செய்து சோம்பலில் பழகியவர்கள் விவசாயத்தில் ஈடுபடாது தப்பிக்கொள்ளவோ அல்லது ஜப்பானிய சட்டதிட்டங்களுக்கு எதிராக நடக்கவோ முயற்சித்தால் அடியும் உதையும்தான். ஜப்பானியர்கள் கோர்ட்டு விசாரணைகளில் அதிக நம்பிக்கை காட்டவில்லை.

வழக்குகளைப் பணச்செலவின்றியும், காலங்கடத்தாமலும் சுலப மாகத்தீர்க்க வாதிபிரதிவாதிகளை உதைப்பதே சரியென நடந்து கொண்டனர். சாதாரண திருடர்கள், கொள்ளைக்கூட்டத்தினர், எதிரி உளவாளிகள், சட்டவிரோதிகள், கள்ளமார்க்கட் தாகர் கள் எல்லாம் ஈவிரக்கமின்றி தண்டிக்கப்பட்டனர். பொதுவாக ஜப்பானியர் முரட்டு நிர்வாகஸ்தர்களென்றுதான் கூறவேண்டும். மேனுட்டினரைப்போல் தந்திரமாக அரசாளத் தெரியாததால் ஜப்பானியர்களுக்கு ஆங்காங்கு உள்நாட்டு எதிர்ப்பதிகமாயிற்று.

இந்தியாவிற்குள் பிரிட்டிஷார் நுழைந்து எவ்வித அட்ட காசம் செய்கின்றனரோ, அதேபோல் சீனவிற்குள் ஜப்பானியர் செய்துவந்தனர். எனவே நாம் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தை வெறுப்பதைப்போலவே சீனர்கள் ஜப்பானிய ஏகாதிபத்தியத்தை வெறுத்தனர். பிரிட்டிஷார் இந்தியர்களை எவ்விதம் கொடுமைப் படுத்தினரோ அவ்விதம் ஜப்பானியர் சீனரைக் கொடுமைப்படுத் தினர். எனவே இங்கு ஜப்பானியருக்கு விரோதமாக ஓர் இயக்கமாரம்பமாயிற்று. இதற்கு ஜப்பானை எதிர்க்கும் மலாயா பொதுஜன சங்கம் என்று பெயர். இதன் கிளைகள் மலாயா வெங்குமிருந்தன. அவற்றில் ஜப்பானியர்களை வெறுத்த இந்தி யர், சீனர், மலாய்க்காரர் போன்ற சகல சமூக ஆண், பெண்கள் அங்கத்தினர். இதற்கு கோவணாண்டி முதல் கோடீஸ்வரன்வரை பலரும் உதவிசெய்தனர். ஜப்பானை எதிர்க்கும் மலாயா பொது ஜனப்பட்டாளமும் ஒன்று இருந்தது. இப்பட்டாளம் ஜப்பா னிய போலீஸ் ஸ்டேஷன்களைச் சுட்டெரிப்பது, பொதுஜன விரோதிகளையும், ஜப்பானிய உளவாளிகளையும், மிருகத்தனமான ஜப்பானியர்களையும், போலீஸ்காரர்களையும், தனக்கு எதிராக வேலை செய்பவர்களையும், ஜப்பானியருடன் ஒத்துழைப்பவர்களை யும் நாசோரம் செய்து கொல்வது, ரயில்களை விழுத்தாட்டுவது போன்ற வேலைகளைச் செய்துவந்தது. ஷெ சங்க அங்கத்தினர் கள் நகரங்களிலிருந்து துப்புகளை அறிந்து, காடுகளுக்குள் ளிருந்த ஷெ பட்டாளத்திற்கு அறிவிப்பர். ஷெ பட்டாளம் காடுகளில் பத்திரிகைகளை அச்சிட்டு, நகரங்களிலுள்ள அங்கத்தி னர் வழியாகப் பொதுஜனங்களுக்கிடையில் பரப்பி பீதியையுண் டாக்கி வந்தது. நேசதேச விமானங்கள் ஷெ படைக்கு உடுப்பு, ஆயுதம், உணவுப்பொருள், ஜப்பானிய நாணயம் முதலி யவற்றைத் தாராளமாக உதவிவந்தன. நேசதேசத்தினருக்கும்

ஷெடி படைக்கும் ரகசிய ரேடியோ போக்குவரத்து தொடர்பிருந்து வந்தது. இவ்வளவும் 1-9-1945-க்கு முன்பு ரகசியமாகவே இருந்துவந்தது. ஆனால் ஜப்பானியர்களால் பிடிபட்டவர்களின் நண்பர்களும், உறவினர்களும்கூட சித்திரவதைக்காளாயினர். ஷெடி படையின் நடவடிக்கைகளை ஜப்பானியர் ஓர் கிள்ளுக்கீரையென்றே கருதிவந்தனர். இதன்றி மலாயாவில் பெரும் இந்திய தேசிய சேனையும் இருந்துவந்தது. இவ்விதமாக இந்நாட்டில் ஏக காலத்தில் ஜப்பானியர்—இந்தியர்—சீனர் ஆக மூன்று சர்க்கார்கள் ஆக்ஷி நடத்திவந்தன.

ஜப்பானிய சரணாகதியோடு, ஆசிய யுத்தம் முடிந்துவிடவில்லை. என்றாலும் அட்டாமிக் குண்டு உபயோகிக்கப்படுவது நிறுத்தப்பட்டது. பிரிட்டிஷ் இந்தியத் துருப்புகள் 1-9-1945 முதல் மலாயாவிற்குள் வந்தன. ஜப்பானியர்கள் இதற்கிடையில் நேசதேச உத்திரவுப்படி துறவு முகாம்களுக்குச் சென்றுவிட்டனர். நிர்வாகம் நிலைகுலைந்தது. ஜப்பானிய எதிர்ப்புபடை பிரிட்டிஷார் வருவதற்கிடையில் சுமார் 15-நாட்கள் வரை தற்காலீக ஆட்சி செய்தது. பொதுஜனங்களில் பலர் சொத்து சுகம் உயிர்களை இழந்தனர். பிரிட்டிஷ் இராணுவ சர்க்கார் வந்தது. மலாயாவைப் புனருத்தாரணம் செய்ய ஆரம்பித்தது. ஜப்பானிய காசு செல்லாதென்று ஒரு அறைகொடுத்தது. ஜப்பானியர் காலத்தில் அவர்களுடன் ஒத்துழைத்ததாகவும், பொது ஜனங்களைத் துன்புறுத்தி சித்திரவதை செய்ததாகவும் ஏராளமானவர்களைக் கைது செய்தது. இதில் ஜப்பானிய எதிர்ப்பு சங்க அங்கத்தினர்களில் முக்கியமானவர்களும் அடங்கியிருக்கின்றனர். இந்திய சுதந்திர சங்க-இராணுவ முக்கியஸ்தர்களனைவரையும் சிறைபிடித்தது. ஜப்பானியர் பகிரங்கமாக அடித்தனர். பிரிட்டிஷார் அப்படியில்லை. மற்றபடி எல்லாம் ஒன்றுதான்.

இப்பொழுது மலாயாவில் எங்கும் அரசியல் விழிப்பு ஆர்ப்பாட்டம் நடக்கிறது. அதேசமயம் அடக்குமுறையும் தாண்டவமாடுகிறது.

---

# கீழே விழுந்தாலென்ன ?

## மீசையில் மண் ஒட்ட வில்லையே !



மாஜி பிரிட்டிஷ் பிரதமர் ஏகாதிபத்திய முதலை சர்ச்சில்



காலஞ்சென்ற அமெரிக்க ஜனாதி பதி முதாளிவர்க்க ரூஸ்வெல்ட்



காலஞ்சென்ற பிரிட்டிஷ் பிரதமர் ஏமாந்த சோணகிரி சேம்பர்லேன்

# அத்தியாயம்—10

## இந்திய சுதந்திர யுத்தம்

[இந்தியாவில் பிரிட்டிஷார் செய்யும் அட்டகாசங்கள்—வெளி நாடுகளில் இந்தியர்கள் படும் அவஸ்தைகள்—கிழக்காசிய இந்திய சுதந்திர இயக்கம்—சுதந்திர இந்திய சர்க்கார்—இந்திய தேசிய இராணுவம்—இந்திய சுதந்திர யுத்தம் போன்ற பற்பல விஷயங்கள் இவ்வத்தியாயத்தில் விவரிக்கப் பட்டுள்ளன.]

### இந்தியாவில் பிரிட்டன்

இந்தியாவைப்பற்றி அறியாதார் இவ்வுலகிலிரார். சர்வ லோகத்திற்கும் சோறுண்பது முதல் துணி கட்டுவது வரையுள்ள சகல நாகரிகத்தையும் கற்றுக்கொடுத்த நாடு இந்தியா தான். ஓர் காலத்தில் அது உலகின் சர்வதுறைச் சிகரமாக விளங்கியது. அதன் மக்கள் ஏழு கடல்களையும் தாண்டி இந்திய வாணிபம், கல்வி, கலாசாரம், நாகரிகம் ஆகியவற்றைப் பரப்பி வந்தனர். பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தில் சூரியன் மறைவதில்லையென எவ்விதம் கூறப்பட்டதோ அவ்விதம் அன்று இந்திய செல்வாக்கு உலகில் சூரியன் அஸ்தமிக்காதவாறு அவ்வளவு பரந்து வியாபித்திருந்தது.

இந்நிலைமையில் இந்தியாவிற்குள் அந்நிய மதங்களும், வியாபாரங்களும் நுழையத்தொடங்கின. இதன் பயனாக இந்திய சாம்ராஜ்யம் சிதைக்கப்படலாயிற்று. இலங்கையும், பர்மாவும் எவ்விதம் இந்தியாவினின்று கத்தரிக்கப்பட்டனவோ அதே போல் அதன் சகல பிரதேசங்களும் அக்கு அலக்காக பொதுவாக அந்நியர்களால், குறிப்பாக ஐரோப்பியர்களால், அதிலும் குறிப்பாகப் பிரிட்டிஷாரால் துண்டிக்கப்பட்டுவிட்டன. போர்த்துகல், ஹாலந்து (டச்சு), பிரான்ஸ், பிரிட்டன் ஆகிய நாடுகள் வரிசைக்கிரமமாய்த் தம் வியாபாரத்தையும், மதத்தையும், கடைசியாக வெடிமருந்தையும் இந்தியாவிற்குள் கொண்டு வந்தன. தமக்குள்ளேயே சண்டைபோட்டுக்கொண்டன. இதில் சுதேச மன்னர்களையும் மாட்டிவிட்டன. இறுதியில் எல்லா

ஐரோப்பிய நாடுகளையும் தலையைத் தடவிவிட்டு பிரிட்டன் இந்தியாவில் காலூன்றிட்டி உட்கார்ந்துகொண்டது. இந்தியா எத்தனையோ சிறுசிறு மன்னர்களால் ஆளப்பட்டு வந்தது பிரிட்டனுக்கு நல்ல உதவியாயிருந்தது. அவர்களுக்குள் கோள்மூட்டிவிட்டும், நயவஞ்சகம் செய்தும் பிரிட்டன் காளாவட்டத்தில் இந்தியா முழுவதையும் தன் வசமாக்கிக்கொண்டது. பிரிட்டன் இந்தியாவைப் பரிபூரணமாக அடிமைப்படுத்தியது 1857–58-ல் தான். அந்நிய ஆக்கிரமிப்பை எதிர்த்து இந்தியர்கள் இதற்கிடையில் எத்தனையோ யுத்தங்களை நடத்தினர். அதில் கடைசியாக நடத்தப்பட்ட யுத்தம் 1857—58-ல் நிகழ்ந்தது. இதன் பிறகு ஆயுதந்தாங்கிய இந்திய சுதந்திர யுத்தம் எதுவும் நடைபெறவில்லை. இந்த யுத்தத்தைப் பிரிட்டிஷ் சரித்திராசிரியர்கள் சிப்பாய்க் கலகமெனக்கூறி வருணித்திருக்கின்றனர்:—“நவீன இந்திய சரிதத்தில் இந்த முக்கிய சம்பவம் 1857—58-ல் ஏற்பட்டது. மிருகக்கொழுப்பைத் தொடக்கூடாதென்பது ஹிந்து—இஸ்லாம் மதசம்பிரதாயமாகும். ஆனால் சுதேசத்துருப்புகளுக்கு கொழுப்புத்தடவிய துப்பாக்கிச் சனியன்கள் பிரிட்டிஷாரால் வினியோகிக்கப்பட்டுவந்தன. இது தான் சிப்பாய்க் கலகத்திற்குக் காரணம். இதை எதிர்த்து ஓர் புரட்சி உணர்ச்சி நீண்ட காலமாக அந்தரங்கமாக பரவிவந்தது. நானாசாகிப்பும், இதரரும் இதை அபிவிருத்தி செய்து வந்தனர். அதன் பயனாக 1857-ம் வருடம் மே மாதம் மீரத்திலிருந்த சிப்பாய்கள் ஆங்கில அதிகாரிகளின் உத்திரவுக்கடிபணிய மறுத்ததோடன்றி அவர்களைக் கொன்றும்விட்டனர். காட்டுத் தீ போல் அக்கலகம் பரவிற்று. புரட்சிக்காரர்கள் லக்ஷ்மண புரியையும், டில்லியையும் பிடித்துக்கொண்டனர். அநேக மாதங்களாக மிகப் பயங்கரக் கலகம் நடந்து வந்தது. சொல்லொணாக் கொடுமைகள் செய்யப்பட்டன. ஆண், பெண், குழந்தைகள் ஆயிரக்கணக்கில் கொன்றுகுவிக்கப்பட்டனர். ஆனால் இந்த பயங்கர காலத்தில் பிரிட்டிஷ் சிப்பாய்களும், பொது ஜனங்களும் தைரியமாக நடந்துகொண்டனர். 1858-ம் வருட இறுதியில் கலகம் அடக்கப்பட்டுவிட்டது. நாட்டில் திரும்பவும் அமைதியுண்டாயிற்று. அப்பொழுதுதான் இந்தியாவின் அரசியலதிகாரம் கிழக்கிந்தியா கம்பனியிடமிருந்து பிரிட்டிஷ் சர்க்காருக்கு மாற்றிக்கொடுக்கப்பட்டது.”

இவ்விதம் பிடித்த இந்தியாவைப் பிரிட்டன் பலபிரிவுகளாக வகுத்தது. 11 மாகணங்களை தனது நேரடியான பார்வையில் வைத்துக்கொண்டது. மிகுதியை தனக்கு கப்பம் கட்டும் சுதேச மன்னர்களின் ஆட்சியில் விட்டுவைத்தது. சுதேச சமஸ்தானங்கள் இந்தியாவில் ஏறக்குறைய 600 உள. இந்தியாவின் மொத்த விஸ்தீரணத்தில் 1/3 பாகம் சமஸ்தானங்களே. ஜனத்தொகையில் 1/4 பாகம் அங்குளர். எனவே பூர்வீக இந்தியா—பிரிட்டிஷ் இந்தியா—சுதேச இந்தியா என— இரு பிரிவுகளாக்கப்பட்டது.

இன்றைய இந்தியாவின் விஸ்தீரணம் 1805332 சதுரமைல்களாகும். நீர்வளம், நிலவளமிகுந்த நாடு. எனினும் அதன் மக்கள் இன்று கால்வயிற்றுக் கஞ்சிக்கும் புழுவாய்த்துடிக்கின்றனர். இந்நாட்டின் ஜனத்தொகை இன்று ஏறக்குறைய 40 கோடிகளாகும். அதாவது உலக ஜனத்தொகையில் 5-ல் ஒரு பங்கு. இதில் 4-ல் மூன்று பங்கு ஹிந்துக்கள். ஒரு பங்கு முஸ்லிம்களும், இதரர்களுமாவர். வட இந்தியாவில் ஹிந்துஸ்தானியும், தென் இந்தியாவில் தமிழும் பிரதான பாஷைகள்.

சிப்பாய்க் கலகமெனப் பிரிட்டன் வருணித்தது உண்மையாகவே ஓர் சாதாரண கலகமல்ல. ஆனால் கடைசியாக ஆயுதந்தாங்கி நடத்தப்பட்ட இந்திய சுதந்திர யுத்தம் அது. அதில் இந்தியர்கள் தோல்வியுற்றனரெனினும் நமது சுதந்திர ஆவல் மறைந்து போகவில்லை. எனினும் பகிரங்கமாக பரந்தமுறையில் ஆயுதந்தாங்கிய யுத்தமெதுவையும் நம்மவர் பிரிட்டனுக்கெதிராக நடத்திவிடவில்லை. ஆனால் சாத்வீக முறையில் சுதந்திர இயக்கம் புத்துயிர் பெற்றெழுந்தது. கட்டுக்கோப்பான முறையில் இவ்வியக்கம் 1885-ல் ஸ்தாபிக்கப்பட்ட அகில இந்தியதேசியக் காங்கிரஸ் மகா சபையின் தலைமையில் காட்டுத்தீ போல் பரவலாயிற்று.

ஆனால் 1918-ம் வருடத்திற்குப் பின்னால்தான் காங்கிரஸின் செல்வாக்கு லோகமெங்கும் வாயுவேக, மனோவேகமாய்ப் பரவத் தொடங்கியது. இதற்குக் காரணகர்த்தா மகாத்மா மோகன் தாஸ் கரம்சந்த் காந்தி. அவரது தலைமையில் இந்திய சுதந்திரக் கிளர்ச்சி உச்சநிலையடைந்தது. பிரிட்டிஷ் சாம்ராஜ்யமே அவரது பெயரைக்கேட்டு இடியோசை கேட்ட நாகம்போல்.

திடுக்கிட்டுப்போயிற்று. பயங்கரத்தினாலல்ல. ஆனால் மகாத்மாவின் அதிசயமான அன்புப் போர்முறை அத்தகைய மாண்புடையது.

1914-18-ம் வருட முதலாவது உலக மகாயுத்தம் தீவிரமாக நடந்தது. தனக்கு உதவி புரியும்படி பிரிட்டன் இந்தியர்களை வேண்டிக்கொண்டது. அதற்குப் பதிலாக யுத்தம் முடிந்ததும் இந்தியாவிற்குச் சுதந்திரமளிக்கப்படுமென்றும் சத்தியம் செய்தது. பிரிட்டன் காங்கிரஸுக்கு மட்டிலுமின்றி ஹிந்து, முஸ்லிம் சபைகளுக்கும் தனித்தனியாக அவ்வித வாக்குறுதியை அளித்தது. எனவே இந்தியர்கள் ஏகோபித்து பிரிட்டனுக்கு பேருதவி செய்தனர். லக்ஷக்கணக்கில் இந்திய சிப்பாய்களையும், கோடிக்கணக்கில் இந்திய பணத்தையும் பிரிட்னுக்காக அந்த யுத்தத்தில் அர்ப்பணித்தது இந்தியா. அதன் பயனாகப் பிரிட்டனும் யுத்தத்தில் ஜெயம் பெற்றது. ஆனால் அது இந்தியர்களுக்குக் கொடுத்த வாக்குறுதியை நிறைவேற்றவில்லை. இதைப்போல் பிரிட்டன் இந்தியாவை ஏமாற்றியது ஒன்றிரண்டு முறையல்ல. "காரியமாகுந்தனைக் காலைப்பிடி, காரிய முடிந்தால் எட்டிக் குடுமியைப்பிடி" என்பது பிரிட்டனின் ஜென்மக் குணமாகிவிட்டது. நம்ப முடியாதவர்கள், வாக்குத் தவறுகிறவர்கள் என்றெல்லாம் ஜெர்மானியர்களைக் குறை கூறும் பிரிட்டிஷார் இந்தியாவிற்களித்துள்ள வாக்குறுதிகளின்றும் அனந்தம் முறை தவறியிருப்பதை நினைக்கின் "தன்முதுகுக் கோணல் தனக்குத்தெரியாது" எனும் பழமொழி நிஜமாகிறது. இந்தியாவிடமிருந்து ஞானத்தையறிந்துகொண்ட நாடுகள் இன்று உலகில் முதன்மை வகிக்கின்றன. ஆனால் பிரிட்டிஷாரால் இந்தியாவோ பின்னணியில் வைக்கப்பட்டு இருக்கிறது.

பிரிட்டன் தனது வாக்குறுதியை நிறைவேற்றத் தவறியதால் இந்தியர்கள் பிரிட்டிஷாரை அறவே வெறுக்கலாயினர். இந்தியர்களையடக்க ரௌலட் (தடியடி) சட்டத்தைப் பிரிட்டிஷார் அமுலுக்குக் கொண்டுவந்தனர். 13-4-1919-ம் தேதி இந்திய சரித்திரத்தில் மிகவும் முக்கிய தினம். அன்றுதான் பஞ்சாப் மாகாணத்தில் அமிர்தசரஸைச் சேர்ந்த ஜாலியன் வாலா பாக் நந்தவனத்தில் பிரிட்டிஷார் படுகொலையை நடத்தினர். எண்ணற்ற இந்திய ஆண், பெண், சிசுக்கள் பிரிட்டிஷ் பீரங்கிகளுக் கிரையாயினர். இந்த சரித்திரப் பிரசித்தி

பெற்ற "பஞ்சாப் படுகொலை—பாரிற் கொடியது" பிரிட்டனுக்கு நடந்த யுத்தத்தில் மனப்பூர்வமான உதவியளித்ததற்காக இந்தியாவிற்குக் கைமேல் கிட்டிய பலன். காந்திஜி 1-8-1920-ல் சத்தியாக்கிரகப்போரை ஆரம்பித்தார். ஆனால் பிரிட்டிஷ் அடக்குமுறையைச் சகியாத ஜனங்கள் சௌரி சௌராவில் (ஐக்கிய மாகாணம்) போலீஸ் ஸ்டேஷனை 5-2-1922-ல் எரித்து, போலீஸ்காரர்களையும் கொன்றுவிட்டனர். எனவே இந்தியர்கள் சாத்வீகப்போருக்கு இனியும் பக்குவமடையவில்லை யென்பதையறிந்த மகாத்மா சத்தியாக்கிரகத்தை நிறுத்தும்படி உத்திரவிட்டுவிட்டார். எனினும் இதற்கிடையில் ஆயிரக்கணக்கான இந்தியர்கள் சிறைவைக்கப்பட்டுவிட்டனர்.

நிற்க இந்தியப் பிரச்னையைத் தீர்ப்பதற்காக 1927-ல் இந்தியாவந்த பிரிட்டிஷ் சைமன் கமிஷன்தான் இந்தியாவில் தீவிர வகுப்பு வாதத்திற்கு அஸ்திவாரம் போட்டது. இந்தியத் தேசியக் காங்கிரஸ் இந்தக்கமிஷனை அடியோடு எதிர்த்தது. அதையொட்டி நாடெங்கும் சைமன் கமிஷன் பகிஷ்கரிப்பு ஆர்ப்பாட்டங்கள் நிகழ்ந்தன. பஞ்சாப்பில் இவ்வார்ப்பாட்டங்கள் லாலா லஜபதிராயின் தலைமையில் நடந்தன. அதில் அவர் பிரிட்டிஷ் போலீஸாரால் தாக்குண்டு, அதன்பயனாக உயிர்நீத்து விட்டார். இதற்கு காரணஸ்தர் சாண்டர்ஸ் என்ற பிரிட்டிஷ் போலீஸ் இன்ஸ்பெக்டர்தானெனக்கருதி இந்தியப் புரட்சிக்காரர்கள் அவரை லாகூரில் சுட்டுக்கொன்று விட்டனர். டில்லி சட்டசபைக் கூட்டத்தின்போது அதன்மீது வெடிவீசப்பட்டது. இதன்பயனாக சர்தார் பகவத் சிங்கும், பி. கே. தத்தரும் கைது செய்யப்பட்டனர். 1929-ம் வருட மத்தியில் லாகூர் சதிவழக்கு விசாரணையும் ஆரம்பமாயிற்று.

இவ்விதமாக நாட்டில் சுதந்திரக் கிளர்ச்சி வலுத்துக் கொண்டேவந்தது. இந்தியாவில் இர்வின் பிரபு (இப்புத்தகமெழுதப்படும்போது ஹலிபாக்ஸ் பிரபு என்ற பெயருடன் அமெரிக்காவில் பிரிட்டிஷ் ஸ்தானீகராயிருந்தவர்) வைஸிராயாக இருந்தகாலம். அவருக்கு காந்திஜி 11 நிபந்தனைகளை விடுத்தார். அவைகள் ஒப்புக்கொள்ளப்படாததால் காந்திஜி 6-4-1930-ல் சரித்திரப்பிரசித்திபெற்ற உப்பு சத்தியாக்கிரகத்தை ஆரம்பித்தார். இதனால் இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சியின் அஸ்திவாரம் ஆட்டங்கண்டு விட்டதென்று சொல்வது மிகை

யாகாது. ஆனால் இதற்கிடையில் 5-3-1931-ல் காந்தி-இர்வின் ஒப்பந்தமேற்பட்டுவிட்டது. இவ்வொப்பந்தப்படி சத்தியாக்கிரகத்தை நிறுத்திவிடவும், இந்திய சமஷ்டி அரசியல், பொறுப்பாட்சி முதலிய விஷயமாக இனிநடைபெறும் வட்டமேஜை மகாநாட்டில் கலந்துகொள்ளவும் காந்திஜீ சம்மதித்தார். சத்தியாக்கிரக சம்பந்தமாக சிறையிடப்பட்ட சகல அரசியல் கைதிகளேயும் ஏககாலத்தில் விடுதலே செய்யவும், அவசர சட்டங்களே ரத்து செய்யவும் இர்வின் சம்மதித்தார். மேலும் இவ்வொப்பந்தப்படி சர்தார் பகவத் சிங் விடுதலேயடைவாரென பொது ஜனங்கள் மிக ஆவலோடு காத்திருந்தனர். காந்திஜீயும் இது சம்பந்தமாகத் தன்னுல் இயன்றதைச் செய்துவந்தார். ஆனல் 23-3-1931-ம் தேதி இர்வின் பகவத் சிங்கை தூக்கிலிட்டு, சுட்டு சாம்பலாக்கி, கங்கைநதியில் கரைத்து விட்டுவிட்டு, இரவுக்கிரவாய் ஓடிவிட்டாரென்ற செய்தி கொடிப்பொழுதில் உலகத்தையே அதிரச்செய்துவிட்டது.

நிற்க சைமன் கமிஷனின் ஆலோசனேப்படி இந்தியாவைப் பிரித்தாள பிரிட்டிஷார் லண்டனில் 1931-ம் வருட இறுதியில் நடத்திய இரண்டாவது வட்டமேஜை மகாநாட்டிற்கு காங்கிரஸின் ஏகோபித்தப் பிரதிநிதியாகச் சென்றிருந்த காந்திஜீ வெறுங்கரத்தோடு திரும்பினர். இர்வின்கொடுத்த வாக்குறுதியை சர்க்கார் நிறைவேற்றவில்லே. ஏற்கனவே கொதித்துக் கொண்டிருந்த இந்தியப் பொதுஜன ஆவேசம் இப்பொழுது எப்படியிருக்குமெனக் கூறவேண்டியதில்லே. காந்திஜீ இந்தியா சென்றதும் கட்டாயம் சத்தியாக்கிரகப்போரை ஆரம்பிப்பாரென்பதை நன்கறிந்த பிரிட்டிஷ் சர்க்கார் இர்வினுக்கடுத்தபடியாக வைஸிராயாக இந்தியாவுக்கனுப்பிய வெல்லிங்டன் பிரபுவுக்கு தீவிர அடக்குமுறையைக்கையாளும்படி ஞானேபதேசம் செய்து அனுப்பியிருந்தது. அதன்பயனுக காந்திஜீ கப்பலேவிட்டு இறங்குமுன்பே அவரைக் கைது செய்ய பிரிட்டிஷ் போலீஸ் புலிகள் பம்பாய்த் துறைமுகத்தில் 4-1-1932-ல் காத்துக்கொண்டிருந்தன. காந்திஜீயும் சிறைப்படுத்தப்பட்டார். நாடெங்கும் திரும்பவும் ஒரே கொந்தளிப்பு. சட்டசபைகள், பிரிட்டிஷ் சாமான்கள், மதுபானக்கடைகள், பிரிட்டிஷ் கல்விநிலேயங்கள், சர்க்கார் உத்தியோகங்கள், பிரிட்டிஷ் ஸ்தாபனங்கள் சகலமும் பகிஷ்கரிக்கப்பட்டன. எண்ணற்ற இந்திய ஆண், பெண், வயோ

திகர், வாலிபர் சிறைசென்றனர். வெல்லிங்டன் பிரபு 144-யும் பிரயோகித்தார். எனினும் இந்திய சுதந்திரக் கிளர்ச்சி தணியவில்லை. பின்னர் இரண்டாவது லண்டன் வட்டமேஜை மகாநாட்டில் பிரிட்டிஷாரும், இதர சுயநலமிகளும் கையாண்ட "தீண்டாதார் தனித்தொகுதி" எனும் பிரித்தாளும் வஞ்சகத்தைக் கண்டித்து சாகும்வரையும் உண்ணாவிரதமிருக்கப்போவதாக காந்திஜீ உறுதிகொண்டுவிட்டார். சர்வலோகமும் இதைக்கேட்டு நடுங்கலாயிற்று. அந்த பெரும் சோதனையிலிருந்து காந்திஜீ உயிர்பெற்றெழவேண்டுமென எங்கும் பிரார்த்தனை நிகழ்ந்தது. 1932-வருடம் செப்டம்பர்மீ 20உ ஏரவாடா சிறையில் காந்திஜீ உண்ணாவிரதம் பூண்டுவிட்டார். ஆனால் அவரது கோரிக்கை நிறைவேறி, அதைப் பிரிட்டிஷ் சர்க்கார் அங்கீகரித்ததால் 26-உ அவரது உண்ணாவிரதம் முடிவடைந்ததெனினும், சத்தியாக்கிரகம் 1934-ம் வருடம் ஏப்ரல் மாதம் வரை நிறுத்தப்படவில்லை. இதற்கிடையில் காந்திஜீ எத்தனையோ முறை சிறை சென்று வெளியானர்; உண்ணாவிரதமிருந்து உயிர்தப்பினர்.

லண்டனில் மூன்றாவது வட்டமேஜை மகாநாடு 17-11-1932 முதல் 24-12-1932-வரை நடந்தது. அதில் பிரிட்டிஷ் சர்க்காரால் நிறைவேற்றப்பட்ட தீர்மானங்களில் முக்கியமானவை கீழே தரப்படுகின்றன:—

1. பிரிட்டிஷ் இந்தியாவைப் பொறுத்தவரை ஐக்கிய சட்டசபையில் முஸ்லிம் வகுப்பினருக்கு 3-ல் 1-பங்கு பிரதிநிதித்துவம் வழங்கப்படும்.

2. சமஷ்டி அரசியல் அமுலுக்கு எந்த தேதியில் வருவதென்று கூறமுடியாது.

3. இராணுவ நிர்வாக வரவு செலவுத்திட்டம் சட்டசபை ஓட்டுக்குட்படாது.

4. இந்திய இராணுவத்தை இந்தியாவிற்காகவின்றி வெளிநாட்டிற்கனுப்புவதற்கு சமஷ்டி மந்திரி சபையிலும், சட்டசபையிலும் அனுமதிபெறவேண்டும்.

மேற்படி தீர்மானங்கள் கி. பி. 1935-ம் வருடம் பிரிட்டிஷ் பார்லிமெண்டில் சட்டமாகச் செய்யப்பட்டு 1935-ம் வருட இந்திய அரசியல் சட்டமென வெளியாகின.

இவ்விதமாக இந்திய சுதந்திர இயக்கத்தைப் பிரிட்டன் பலாத்காரத்தின் மூலமும், வஞ்சகமாகவும் பங்கெடும் நாளாய் அடக்கிக்கொண்டே வந்தது. இதற்கிடையில் இந்தியர்களுக்கிடையிலேயே சிண்டுமுடிபோடும் திருப்பணியையும் தீவிரமாக நடத்திவந்தது. சுதேச சமஸ்தானதிபதிகள்தான் இந்தியாவில் பிரிட்டனின் ஐந்தாம் படையினர். பிரிட்டிஷ் இந்தியாவிலுள்ளவர்களுக்கும், சுதேச சமஸ்தானங்களிலுள்ளவர்களுக்குமிடையே பலவித மனத்தாங்கல்களைப் பிரிட்டன் உண்டுபண்ணியது. ஹிந்து—முஸ்லிம் பிணக்கிற்கும் காரணம் பிரிட்டிஷ் பிரித்தாளும் தந்திரந்தான். ஜாதிசமயப் பூசல்களுக்கும் காரணம் பிரிட்டிஷ் ஆட்சிதான்.

காங்கிரஸ் கோருவது இந்தியாவின் பூரண சுதந்திரம். இதற்கு பிரிட்டன் கூறும் பசப்புகள் என்னவெனப்பார்ப்போம். காங்கிரஸ் இந்தியாவின் ஏக பிரதிநிதித்வது ஸ்தாபனமல்லவாம். ஏனெனில் காங்கிரஸைப் போலவே இந்தியாவில் முஸ்லிம் லீக், ஹிந்து மகாசபை, சுதேச மன்னர்கள்சபை என்றவேறு மூன்று முக்கிய அரசியல் ஸ்தாபனங்கள் இருக்கின்றனவாம். அதன்றி இந்தியாவில் ஏராளமான ஜாதிகளும், பாஷைகளும், மதங்களுமிருக்கின்றனவாம். இவையெல்லாம் ஒன்றுபடுத்திக்கொண்டு வாந்தால்தான் காங்கிரஸின் கோரிக்கையைப் பிரிட்டன் கவனிக்குமாம்.

இப்படிச் சொல்லிக்கொண்டே பிரிட்டன் மேற்கண்ட உள்நாட்டுத் துவேஷங்களை வளர்த்து வருகிறது. முஸ்லிம் லீக்கின் அங்கத்தினர்களைவிட அதிகமான முஸ்லிம்களும், ஹிந்து மகாசபையின் அங்கத்தினர்களைவிட அதிகமான ஹிந்துக்களும் காங்கிரஸில் அங்கத்தினர்களாயிருக்கின்றனர் என்பதைப் பிரிட்டன் மறைக்க முயல்கிறது. ஜின்னாவுக்கு பாகிஸ்தானமும், சவர்காருக்கு ஹிந்துஸ்தானமும், ராமசாமி நாயக்கருக்கு திராவிடஸ்தானமும், அம்பேத்காருக்கு பஞ்சமஸ்தானமும், மகாராஜாவுக்கு சுதேச ஸ்தானமும், இன்னும் எத்தெத்தனையோ பேருக்கு என்னென்னமோ ஸ்தானமும் வேண்டுமாம். இவர்களனைவரும் சரித்திர ஞானம், தூரதிருஷ்டி நோக்கம் இல்லாதவர்கள் என்றுதான் நாம் வருந்தவேண்டியிருக்கிறது. இந்தியாவை அக்குவேறு, அலக்குவேறாகச் செய்ய வேண்டுமென்பதில் பிரிட்டிஷ் நரிகளைவிட மேற்கண்ட பிரகஸ்பதிகளே அதிக

ஆவல் கொண்டுள்ளனர் போலும். இவ்வித பிரித்தாளும் தந்திரத்தாலேயேதான் பிரிட்டன் இந்தியா முழுமையையும் அடிமைப் படுத்தியதென்பதை இந்தப் பிரகிருதிகள் உணரவில்லை. இந்தியர்களிடை ஒற்றுமை ஏற்படாது பிளவைப் பெருக்குவது தான் நமது கடமையாய் இருக்கவேண்டுமென 1858-ல் பிரிட்டிஷ் இந்திய வைஸிராயான எல்பின்ஸ்டன் பிரபு அதிகாரத் தோரணையில் பிரகடனம் செய்ததை இந்த இந்திய வகுப்பு வாதக்காரர்கள் அறிவதற்குப் போதிய சரித்திர ஆராய்ச்சிக் கல்வி இல்லைபோலும். பிரிட்டிஷார் முஸ்லிம்களை வெறுத்து ஹிந்துக்களை ஆதரிப்பது போலவும், பிறகு ஹிந்துக்களை வெறுத்து முஸ்லிம்களை ஆதரிப்பது போலவும் பாசாங்கு செய்துவந்திருக்கின்றனர். எனினும் அவர்கள் உண்மையாக எந்த இந்திய வகுப்பினரையும் நேசிக்கவில்லை. ஹிந்துக்களும், முஸ்லிம்களும் இந்த உண்மையை உணராதவரை அவர்கள் பல கற்றும் கல்லாதவர்கள்தான்.

கி. பி. 1935-ம் வருட புதிய இந்திய அரசியல் சட்டத்தைப் பற்றி ஈண்டு சிறிது விவரிப்போம். அதன்படி பிரிட்டிஷ் இந்திய (11) மாகாணங்களுக்கு சுயாட்சியளிக்கப்படும். அதாவது அந்தந்த மாகாணப் பொதுஜனங்களால் தேர்ந்தெடுக்கப் பட்ட பிரதிநிதிகளே அந்தந்த மாகாணத்தையாளவேண்டும். ஆனால் கவர்னராயுள்ள பிரிட்டிஷ்காரருக்கு விசேஷாதிகாரம் நிரம்பவிருந்தது. அவர் சர்வாதிகாரம் நடத்தலாம். ஜனப் பிரதிநிதிகளை தான் விரும்பாவிடில் விரட்டியடிக்கலாம். இதிலிருந்து அந்த "சுயாட்சியின்" லக்ஷணத்தைப் பொதுஜனங்கள் நன்குணர்ந்து கொள்வது சுலபம். இவ்வித மாகாண சுயாட்சித்திட்டம் சிலகாலத்திற்கு அமுலிலிருந்தபிறகு, சமஷ்டி அரசியல் திட்டம் அமுலுக்கு வரும். அதன்படி பிரிட்டிஷ் இந்தியா, சுதேச இந்தியா, காங்கிரஸ் இந்தியா, ஹிந்து இந்தியா, முஸ்லிம் இந்தியா ஆகிய அனைத்தும் சமஷ்டி சட்டசபையின் ஆட்சிக்குட்படும். அந்த சமஷ்டி சட்டசபையும் பிரிட்டிஷ் வைஸிராயின் கட்டுப்பாட்டிற்குட்பட்டிருக்கவேண்டும்.

கி. பி. 1935-ம் வருட இந்திய அரசியல் சட்டம் 1937-ம் வருடம் இந்தியாவில் அமுலுக்குவந்தது. நாடெங்கும் தேர்தல் நடைபெற்றது. பிரிட்டிஷ் இந்தியாவிலுள்ள 11 மாகாணங்களில் 8-ல் காங்கிரஸுக்கு வெற்றி கிடைத்தது. 26-10-1939-ம்

தேதி வரை ஷை மாகாணங்களில் பிரிட்டிஷாரின் உத்திரவுப்படி "சுயாட்சி" நடைபெற்று வந்தது. ஆனால் இதற்கிடையில் 3-9-1939-ல் இந்திய சரிதத்தில் ஓர் மாற்றமேற்பட்டது. 1-9-1939-ல் போலந்தின் மீது படையெடுத்த ஜெர்மனியின் மீது பிரிட்டன் 3-9-1939-ல் யுத்தப்பிரகடனம் செய்யவே, அப்பொழுது பிரிட்டனில் இந்தியா மந்திரியாயிருந்த ஜெட்லந்து பிரபுவின் உத்திரவுப்படி, இந்தியாவில் வைஸிராயாகவிருந்த லின்லித்கோ பிரபு "இந்தியாவும் ஜெர்மனி மீது போர்தொடுத்திருக்கிறது" என்று இந்திய சட்டசபையின் சம்மதத்தைப் பெறுமலேயே பிரகடனம் செய்துவிட்டார். பிரிட்டன் மீது இந்தியா கொண்டிருந்த கோபம் வானளாவியது. "பிரிட்டனும் ஜெர்மனியும் போராடிக்கொண்டால், அதில் இந்தியா—அதுவும் இந்தியர்களின் சம்மதமின்றி—எதற்காக இழுத்துவிடப்பட வேண்டும்? இந்தியாவைப்பொறுத்தமட்டில் பிரிட்டனது யுத்த நோக்கமென்ன?" என்பனபோன்ற இந்தியத் தேசியக் காங்கிரஸ் மகாசபையின் கேள்விகளுக்கு பிரிட்டன் மழுப்பலான பதிலைக் கொடுத்து, இந்தியர்களை முன்போலவே ஏமாற்ற முயற்சித்தது. யுத்தம் முடிந்தபிறகு இந்தியாவிற்கு டொமினியன் ஸ்டேட்டஸ் கொடுக்கும் விஷயம் கவனிக்கப்படும் என்றது. தேதி குறிப்பிடப்படவில்லை. என்ன தந்திரம் பாருங்கள்! கடந்த யுத்தத்தின்போதும் இப்படியேதான் கூறி இந்தியாவை ஏமாற்றிற்று. இனிமேலும் அந்தப்பாச்சா பலிக்குமா? அதிலும் பூரண சுதந்திரத்தைத் தவிர வேறெதுவும் வேண்டாமெனக்கூறும் இந்தியா டொமினியன் ஸ்டேட்டஸில் திருப்தியடையுமா? எனவே காங்கிரஸ் சர்க்கார் 26-10-1939-ல் ராஜிநாமா செய்தது. காந்திஜீ தனது சத்தியாக்கிரகத்தை 17-10-1940-ல் ஆரம்பித்துவிட்டார். யுத்த எதிர்ப்புப் பிரசாரம் நாடெங்கும் தாண்டவமாடியது. ஜவாஹர்லால் நேரு, அபுல்கலாம் ஆஸாது போன்ற மாபெருந் தலைவர்கள் நீண்டகாலக் கடுந்தண்டனை விதிக்கப்பட்டனர். எண்ணற்ற இந்தியர்கள் சிறைக்கோட்டத்திற்கிழுத்துக்செல்லப் பட்டனர். இதனால் பிரிட்டனுக்கு இந்தியாவில் உதவி கிடைக்காமற்போயிற்று. எனினும் தனது ஆயுதபலத்தாலும், வறுமை வலையாலும் உதவியடைந்துவந்தது. இந்தியத் துருப்புகளை வெளிநாடுகளுக்குப் பிரிட்டன் தனது சுயநலத்திற்காகக்கொண்டு சென்றது. சத்தியாக்கிரக வேகமானது நாளுக்குநாள் அதிகரிக்கவே பிரிட்டனது யுத்த நடவடிக்கைகளும் பாதிக்கப்பட்டன.

சிறைகளிலும் மேற்கொண்டு இடமில்லாதுபோயிற்று. எனவே சத்தியாக்கிரகிகளை நிபந்தனை எதுவுமின்றி பிரிட்டன் விடுவித்தது. பிறகு தனக்கு உதவி புரியும்படி இந்தியாவை வேண்டிக் கொண்டது. பூரண சுதந்திரம் ஒரு குறிப்பிட்ட தேதியில் அளிக்கப்படுமென பிரிட்டன் வாக்குறுதி கொடுத்தது, அதற்கு நம்பிக்கையாக உடனே இந்தியர்களையே கொண்ட ஒரு தேசிய சர்க்காரை நிறுவினாலொழிய தான் இந்த யுத்தத்தில் ஈடுபட முடியாதென இந்தியத் தேசியக் காங்கிரஸ் மகாசபை அழுத்தம் திருத்தமாகக் கூறிவிட்டது. இவ்வகையாக இந்திய சுதந்திரப் பிரச்னை 1941-ம் வருட இறுதி வரையும் தீராமலும், பிரிட்டனுக்கு இந்தியாவின் பரிபூரண உதவி கிட்டாமலும், காலங்கடந்தது. யுத்தமாரம்பமான 1-9-1939 முதல் 31-12-1941-குள் பிரிட்டனுக்கு எத்தனையோ விபத்துகள் ஏற்பட்டுங்கூட. அது இந்தியா விஷயத்தில் சிறிதளவும் தனது பிடியை விட்டுக்கொடுக்கச் சம்மதிக்கவில்லை. எனவே இந்தியாவும் இத்தடவை பிடித்த பிடியை விடவில்லை. இதர நாடுகளும், அமெரிக்கா போன்ற பிரிட்டனின் அத்யந்த நேசதேசங்களும்கூட பிரிட்டன் இந்தியாவிடம் நடந்துகொள்ளும் முறையைக்குறித்து பிரிட்டனைக் கடுமையாகக் கண்டனம் செய்துங்கூட பிரிட்டன் இளகவில்லை. ஏன்? இந்தியா இன்றேல் பிரிட்டிஷ் சாம்ராஜ்யம் எங்கே இருக்க முடியும்?

பிரிட்டன் காங்கிரஸுடன் ஓர் சமரஸமான முடிவிற்கு வராததால் காங்கிரஸ் மேற்கொண்டு நடவடிக்கை எடுத்துக் கொள்ளவேண்டிய நிர்ப்பந்தமேற்பட்டது. இதற்கிடையில் 8-12-1941-ல் ஏற்பட்ட மகா கிழக்காசிய யுத்தவிளைவாக பிரிட்டன் தனக்கு அங்கிருந்த ஹாங்காங், மலாயா, பர்மா போன்ற சகல பிரதேசங்களையும் இழந்துவிட்டது. மேலும் ஜப்பானியர் இந்தியாமீதும் படையெடுப்பரெனத்தோன்றியது. இந்தியாவை யுத்தகளமாகச் செய்யாதிருக்கவேண்டி, பிரிட்டிஷார் இந்தியாவை இந்தியர்களிடம் விட்டுவிட்டு, தம் துருப்புகளைக் கூட்டிக்கொண்டு வெளியேறிப்போய்விட வேண்டுமென காந்திஜீயின் தலைமையில் காங்கிரஸ் விடுத்த கோரிக்கையைப் பிரிட்டிஷார் அலட்சியம் செய்துவிட்டதால் சத்தியாக்கிரகத்தை ஆரம்பிப்பதென : 8-8-1942-ல் பம்பாயில் கூடிய காங்கிரஸ் கூட்டம் தீர்மானித்தவன்றே காந்திஜீயுள்பட பலதலைவர்கள் கைது

செய்யப்பட்டனர். மாலுமியற்ற மரக்கலம் போல் இந்திய மகாஜனங்கள் எங்கும் கலகம் செய்ய ஆரம்பித்து விட்டனர். இதில் பிரிட்டிஷாரால் சிறைபிடிக்கப்பட்ட இந்தியர்களுக்கும், கொன்று காயப்படுத்தப்பட்ட இந்தியர்களுக்கும், விதிக்கப் பட்ட தண்டவரித் தொகைக்கும், இழைக்கப்பட்ட இதர கொடுங்கோன்மைகளுக்கும் அளவே இல்லை. முதலாவது உலக மாகாயுத்தத்தைப்போலவே இரண்டாவது உலகமகாயுத்தத்தை யும் பிரிட்டன் பிரசாரத்தாலேயே வென்றது. இந்தியத்தலை வர்கள் அனைவரும் சிறைக்குள், பத்திரிகைகளுக்கு வாய்ப் பூட்டு. தட்டிபேச ஆளில்லாவிடில் தம்பி சண்டப்பிரண்டன். பொய்புனைசுருட்டுகளைக்கூறி, பஞ்சத்தை ஏற்படுத்தி, பாமரர்களை ஏமாற்றி, தனது படைப்பலத்தை பிரிட்டன் இந்தியாவில் முன் னிலும் அதிகமாக வலுப்படுத்திக்கொண்டது. காங்கிரஸின் சாத்விகத்தை அடக்க பிரிட்டனின் ஆயுத பலம்தான் உபயோ கப்படுத்தப்படுகிறது. சாத்வீகத்தை அடக்கவே ஆயுத பலம் தேவைப்படுமானால் இன்னும் இந்திய மக்களின் பலாத்காரப் போர் ஒன்று உண்டாகுமேயானால் பிரிட்டன் என்ன செய்யும்? நாற்பது கோடியும் ஒரே சமயத்தில் காரி உமிழ்ந்தால் கிரேட் பிரிட்டன் மூழ்கிவிடும் என்று அன்று ஜவாகர் கூறியது முற்றிலும் உண்மையன்றோ!

பிரிட்டிஷாருக்கு விரோதமாக நீண்டகால தயாரிப்புடன், கட்டுக்கோப்பான முறையில் ஆயுதந்தாங்கிய இராணுவப் புரட் சியோ அல்லது பயங்கர நடவடிக்கைகளோ ஏற்பட்டாலன்றி இந்த சாத்விகப்போராட்ட (சத்தியாக்கிரக)த்தினால் இந்தியா வுக்கு உலகானுதாபந்தான் சித்திக்குமேயொழிய பூர்ண சுதந் திரம் ஒருகாலும் கிடைக்காது. அங்ஙனம் இதற்கு மாறாக ஒருவேளை சாத்விகப் போராட்டத்தினால் இந்தியாவுக்குப் பிரிட் டன் சுதந்திரமளிக்குமாயின் பிறகு அது உலக அதிசயங் களில் ஒன்றாகத்தான் இருக்கும். பிரிட்டன் அவ்வளவு தயா ளம் பொருந்திய நாடல்லவென்பது சரித்திர பூர்வமான உண்மை. ருசிகண்ட பூனை உறியுறியாய்த்தேடும்.

இந்தியா அடிமையாக இருப்பதுதான் உலக மகாயுத் தங்களுக்கு மறைமுகமாகக் காரணம். ஏனெனில் இராணுவ பலம், பொருளாதார பலம், மூலப்பொருள் பலம் ஆகிய சர்வமும் நிறைந்த இந்தியாவை ஆக்கிரமித்திருக்கும்

நாடு இதர நாடுகளை ஏளனம் செய்கிறது, அலக்ஷியம் செய்கிறது. இதர நாடுகளோவெனில் அந்த ஆக்கிரமிப்பு நாட்டின் மீது போறாமை கொள்ளுகின்றன. சண்டை வருகிறது. இந்தியா பிரிட்டனுக்கல்லாது வேறெந்த நாட்டுக்கு அடிமையாயிருப்பினும் அப்போதுங்கூட இதேநிலைமைதான். அந்நிய ஆக்கிரமிப்பு சிறிதுமின்றி இந்தியா பரிபூரண சுதந்திரம் பெற்றாலொழிய உலகில் சாசுவதமான சமாதானம் நிலவ ஹேதுவில்லை.

இந்த உலக மகாயுத்தம் முடிந்துவிட்டது. இந்தியா சுதந்திரமடையவேண்டிய நேரம் இதுதான். அங்ஙனமின்றேல், இந்த யுத்தம் முடிந்தாலும் முடியாததாகவே பின்னால் நடக்கப்போகும் சம்பவங்கள் நிரூபித்துவிடும். மூன்றாவது உலக மகா யுத்தம் மூளுவதை உயிரோடிருப்பவர்கள் காணமுடியும். அதுவும் சீக்கிரம் நேரலாம். இது உலகம் கூறும் உண்மையாகி வருகிறது.

## வெளிநாட்டில் இந்தியர்

கடந்த சில நூற்றாண்டுகளாக பிரிட்டன் இந்தியாவை அடிமையாக வைத்து வந்திருப்பதோடு அதன் ஆட்சிக்குட்பட்ட வெளிநாடுகளில் குடியேறியிருந்த இந்தியர்களையும் மிருகங்களை விட மிகக்கேவலமாக நடத்திவந்திருக்கிறது. அடிமையாயிருப்பதிலுள்ள அலங்கோலத்தை உள்நாட்டு இந்தியர்களைவிட வெளிநாடுகளில் குடியேறிய இந்தியர்களே நன்குணர்ந்திருக்கின்றனர். உதாரணமாக மலாயாவை எடுத்துக்கொள்ளுவோம். இங்கு இந்தியர்களும் இருந்தனர். ஜப்பானியர், ஜெர்மானியர், இத்தாலியர் போன்ற அந்நியர்களுமிருந்தனர். மலாயாவை ஆண்ட பிரிட்டிஷ் சர்க்கார் இங்கிருந்த ஜப்பானியர் போன்றவர்களின் அந்தஸ்துக்குப் பங்கம் விளைவிக்கும்படியான ஓர் அற்ப விஷயத்தையும் செய்ததில்லை. ஏனெனில் அங்ஙனம் தெரிந்தும், தெரியாதும் ஏதாவது செய்துவிட்டால் உடனே அவர்களின் நலன்களைப் பாதுகாக்கவேண்டி இங்கனுப்பப்பட்டிருக்கும் ஜப்பானிய ஸ்தானீகர் தன் தாய்நாட்டுச் சர்க்கார் மூலமாக பிரிட்டிஷ் சர்க்காரைக் கண்டிக்கத் தொடங்கிவிடுவார். சில சந்தர்ப்பங்களில் பயமுறுத்தவும் தொடங்கிவிடுவார். ஆனால் இந்தியர்களைத் துன்புறுத்தும் பிரிட்டிஷ் சர்க்காரைப் பயமுறுத்த இந்தியாவில்-

சுதந்திர சர்க்கார் இருக்கிறதா? இந்தியாவை ஆண்டதும் பிரிட்டிஷ் சர்க்கார். மலாயாவை ஆண்டதும் பிரிட்டிஷ் சர்க்கார். இந்தியாவிலுள்ள பிரிட்டிஷார் மலாயாவிலுள்ள பிரிட்டிஷாரை எக்காரணம் கொண்டும் கண்டிக்கமாட்டார்கள். பயமுறுத்தவும் மாட்டார்கள். இது இனம் இனத்தைக்காக்கும் எனும் பழமொழிப்படி சகஜமாக எதிர்பார்க்கவேண்டிய விஷயமாகும். அகில இந்தியக் காங்கிரஸை அங்கிருந்த பிரிட்டிஷார் அடக்கியதைவிட வெளிநாடுகளிலிருந்த இந்தியர்களின் நலவுரிமைகளுக்கு விரோதமாக ஆங்காங்கிருந்த பிரிட்டிஷார் அதிகமாகப் பாடுபட்டனர். எனவே இந்தியாவிலிருந்த இந்தியர்களைவிட வெளிநாடுகளிலிருந்த இந்தியர்களே பிரிட்டிஷ் ஏகாதிபத்திய ஆட்சியை மிகக்கடுமையாகக் கண்டித்து வந்தனர். பிரிட்டிஷ் ஆட்சியைப் பகிஷ்கரிக்கும் இந்தியக் காங்கிரஸை அவர்கள் மிகவும் கௌரவிக்கத்தொடங்கினர்.

இந்தியர்கள் உலகெங்கும் குடியேறியிருக்கின்றனர். ஆனால் பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்திற்குட்பட்ட நாடுகளில்தான் அதிகமாகக் குடியேறியிருக்கின்றனர். அதிலும் குறிப்பாக கிழக்காசியாவிலுள்ள பர்மா, மலாயா, இந்தோ சீனு, பீஜித்தீவுகள், இந்தோனேஷியத் தீவுகள் ஆகியவற்றில்தான் அதிகமாகக் குடியேறியிருக்கின்றனர். இப்பகுதியில் சுமார் முப்பது லக்ஷம் இந்தியர்கள் வசிக்கின்றனர். மற்ற பிரிட்டிஷ் ஆட்சிக்குட்படாத ஜப்பான், ஜெர்மனி, இத்தாலி, அமெரிக்கா, பிரான்ஸ் போன்ற இடங்களில் குடியேறிய இந்தியர்களுக்காவது கொஞ்சம் மரியாதை காட்டப்படும். ஆனால் பிரிட்டிஷ் ஆட்சிக்குட்பட்ட நாடுகளில் குடியேறிய இந்தியர்களுக்கோவெனில் கிஞ்சிற்றும் மரியாதை காட்டப்படுவதில்லை. சாதாரணமாக யுத்த காலத்தில்தான் பத்திரிகைகளுக்கு வாய்ப்பூட்டிடப்படும். ஆனால் பிரிட்டிஷ் ஆட்சிக்குட்பட்ட நாடுகளில் குடியேறிய இந்தியர்களுக்கு சமாதான காலத்திலும் வருடம் 365 நாட்களும் வாய்ப்பூட்டுதான்.

இங்ஙனமிருக்க 1-9-1939-ல் ஜெர்மனி போலந்தின் மீது படையெடுத்ததை அநீதமெனக்கூறி பிரிட்டன் 3-9-1939-ல் ஜெர்மனி மீது யுத்தப்பிரகடனம் செய்தது. இச்சமயத்தில் பிரிட்டிஷ் இந்தியாவைச் சார்ந்த 11 மாகாணங்களுள் 8 காங்கிரஸின் சுயாட்சிக்குட்பட்டிருந்தன. ஆனால் இந்தியர்களின் அனுமதியைக்கோராது இந்தியாவிலிருந்த பிரிட்டிஷ் சர்க்கார் சட்ட

விரோதமாக இந்தியாவையும் ஜெர்மனிக்கெதிராகப் போர்புரியும் நாடெனப் பிரகடனம் செய்துவிட்டது. இத்தகைய அநீதமான பிரிட்டிஷ் சர்வாதிகாரத்தைக் கண்டித்து இந்தியக் காங்கிரஸ் சர்க்கார்கள் ராஜிநாமா செய்துவிட்டன. உள்நாட்டிலேயே பிரிட்டிஷார்மீது குரோதம் வளர்வதாயிற்றென்றால் இனி இந்தியர்கள் நிரம்பவதியும் பர்மா, மலாயா போன்ற வெளிநாடுகளில் பிரிட்டிஷாருக்கு விரோதமாக எவ்வளவு குரோதமிருந்திருக்க வேண்டுமென வாசகர்கள் சுலபமாக ஊகித்துக்கொள்ளலாம்.

இந்த யுத்தம் தொடங்கும் முன்பிருந்தே மலாயா இந்தியர்களும், இந்தியப் பத்திரிகைகளும் பிரிட்டிஷாரின் சுயநல ஏகாதிபத்தியக் கொள்கையைக் கண்டித்துவந்திருக்கின்றனர். இந்தியாவில் காங்கிரஸ் சர்க்கார் ராஜிநாமா செய்துவிட்டதென்ற செய்தி கிடைத்ததும் இங்கு கொந்தளிப்பு இனியும் அதிகமாகிவிட்டது. இதன்றி இந்நாட்டில் இந்தியர்களின் அதிருப்திக்கு முக்கிய காரணம் இந்நாட்டிலிருந்த பிரிட்டிஷ் சர்க்கார் சீனர் போன்ற இதர சமூகத்தினருக்கு அளித்திருந்த உரிமைகளை இந்தியர்களுக்கும் சமத்துவமாக அளிக்க மறுத்ததுதான். மலாயா சர்க்கார் படித்த இந்தியர்களை ஏற்றுக் கொண்டதில்லை. பாமர இந்தியத் தொழிலாளர்களுக்கும் இதர சமூகத் தொழிலாளர்களுக்குக் கொடுத்திருந்த உரிமைகளில் பாதியைக்கூட அளித்ததில்லை. இந்தியத் தொழிலாளியை கால் சட்டை போட்ட இந்தியர் பலர் சுயநலத்திற்காக தத்தம் எஜமானரிடம் காட்டிக் கொடுத்திருக்கின்றனர். இவர்களின் கதியாதாகுமென பிரஸ்தாபிப்பது ஈண்டு பொருத்தமற்ற விஷயம்.

ஜப்பானிய யுத்தமேற்பட்ட பிறகு பர்மா இந்திய ஜனத்தொகை மலாயாவை விடக்குறைந்து விட்டது. எனவே கிழக்காசிய இந்திய சுதந்திர யுத்தத்திற்கு மலாயா தாயகமானதில் அதிசயமில்லை. இங்கு 1940-ல் சுமார் 7½ லக்ஷம் இந்தியர்கள் வசித்தனர். பெரும்பான்மையோர் தொழிலாளர்கள். இவர்கள் இந்தியாவுக்குள்ளேயே வதியும்போது சுதந்திரத்தின் அவசியத்தைப்பற்றியும், இந்தியத் தேசியக் காங்கிரஸின் நடவடிக்கைகளைப்பற்றியும் அதிகமாய்க் கவனிக்கவேண்டிய அவசியமில்லாது போயிற்று. ஆனால் மலாயா போன்ற வெளிநாடுகளுக்கு வந்து அந்நிய நாட்டினரின்கீழ் நசுக்கப்பட்டு வருந்துகையில்தான் "நிழலிலிருந்தவன் வெயிலில் சிக்கியபிறகு நிழலின்மகிமையை

உணர்வதுபோல்'' இந்தியா கட்டாயம் சுதந்திரமடைந்தாகா விடில்தமக்கும், தமது சந்ததியினருக்கும் இவ்வுலகில் கண்ணிய மாய்வாழ இடமில்லை யென்பதைச் சந்தேகமின்றி உணருவா ராயினர். இவ்வுகிலுள்ள சகல நாட்டினர்களும், சகலமதத்தினர் களும், சகலபாஷையினர்களும், சகல நாகரிகத்தினர்களும், சகல கொள்கையினர்களும் இந்த மலாயா நாட்டில் வாழுகின்றனர். அவர்களனைவரும் இந்தியர்களைக் கண்டால் அசட்டை செய் கின்றனர். "ஓ! இந்தியனா? இவனது தாய்நாடே அடிமை. இவனுக்கு இங்கு என்ன பெருமைவேண்டியிருக்கிறது? தினம் பத்தோ-ஐம்பதோ கர்சுக்கு ஏவல் வேலை செய்யும் கூலிதானே? ஆளுக்கொருவித பாஷை! ஆளுக்கொருவித உடை! ஆளுக் கொருவித மதம்! இத்தகைய அடிமைநாட்டானை இந்த அடிமை நாட்டில் இரட்டை அடிமையாகவே நடத்தவேண்டும்.'' இந் நாட்டைச் சுரண்டும் ஏகாதிபத்திய முதலாளிவர்க்கம் இந்தி யர்களை இவ்விதம் எள்ளிநகையாடி நசுக்குவதை இந்தியர்கள் எப்படி பொறுத்துக் கொண்டிருக்கமுடியும்? பாழும் கொலைக் கார கங்காணிகள் மூலம் இந்தியாவிலுள்ள பாமரர்களுக்கு இல் லாததும், பொல்லாததுமான துற்போதனைகளைச் செய்து அவர் களை இங்கு கொண்டுவந்து ரப்பர் தோட்டங்களில் சித்திர வதை செய்கின்றனர். "ஐயோ உங்களுக்கு ஈவிரக்கமில்லையா? எங்கள் மக்களை ஏன் இப்படி வதைத்து, நீங்கள் ஐரோப்பாவில் ஆயுத உற்பத்தி செய்து உலக மகாயுத்தத்தை ஏற்படுத்துகிறீர் கள்? சீனத் தொழிலாளர்களுக்குக் கொடுப்பதுபோல் எங்கள் தொழிலாளர்களுக்கும் உயர்ந்த சம்பளம் கொடுங்களேன்! எங்க ளின் வேலை குறைந்ததல்லவே! எங்களில் பாமரர்களை நீங்கள் சுயநலத்திற்கு விரும்புவதுபோல், படித்தவர்களையும் அவர்களின் நலத்தைக் கருதியாவது ஏற்றுக்கொள்ளுங்களேன்.'' என்று எந்த இந்தியனாவது சொல்லிவிட்டால் தொலைந்தது. அவனது உற் றார், உறவினர், நண்பர்கள், தெரிந்தவர்கள் கூட இந்த நாட்டை விட்டு வெளியில் துரத்தப்பட்டுவிடுவர்.

எனவே இந்நாட்டு இந்தியர்கள் ஹிந்து, முஸ்லிம், கிறிஸ் தவர், ஏழை பணக்காரர், வட இந்தியர், தென் இந்தியர், தமிழர், ஹிந்துஸ்தானிக்காரர் என்ற பாகுபாடு ஏதுவுமின்றி சகலரும் நசுக்கப்பட்டதால் அவர்கள் தம் வித்தியாசங்களனைத்தையும் மறந்து, ஒரேநாட்டுமக்களாகிய இந்தியர் என்ற கருத்தை செய்கை

யில் காட்டவாரம்பித்தனர். இந்திய சுதந்திரோதயமும் ஆரம்பமானது. ஆனால் சர்க்கார் இந்தியர்கள் இந்நாட்டில் அரசியல் ஸ்தாபனங்களையும், அரசியல் கட்சிகளையும் ஏற்படுத்திக்கொள்வதைத் தடைபடுத்தலாயிற்று. இந்திய அரசியலைப்பற்றி பேசவேண்டுமானால் இந்தியாவுக்குப் போய்விடுங்கள் என்று கருதி சிலரை நாடுகடத்தவும் செய்தது. இந்நாட்டில் நடந்த இந்திய (தமிழ்) பத்திரிகைகள் இந்திய அரசியலைப் பற்றி பிரஸ்தாபித்தால் உடனே 144. இங்கு இந்தியர்களுக்குச் சொந்தமாக ஒரு ஆங்கிலப் பத்திரிகைகூட முன்பு இல்லை. எனவே இந்தியாவில் நடந்த அரசியல் பத்திரிகை புத்தகப் பிரசுரங்களுக்கு மலாயா அருமையான விற்பனையிடமாகிவிட்டது. இக்நாட்டுச் சர்க்கார் இதையும் தடைபடுத்தியது. கிட்டாபிஸ்டான், பார்வேர்டு ப்ளாக் போன்ற ஸ்தாபனங்களின் பிரசுரங்களை இறக்குமதி செய்தவர்கள் தப்பிப்பிழைத்தது தம்பிரான் புண்யமாகிவிட்டது. இவ்விதமாக பிரிட்டிஷ் ஏகாதிபத்திய சர்க்காரின் அடக்குமுறைத் தாண்டவம் அதிகப்பட அதிகப்பட இந்தியர்களின் அரசியல் விழிப்பும் அதிகமாயிற்று. இந்நிலைமையில்தான் பண்டித ஜவாஹர்லால் நேரு 1937-ல் மலாய் நாட்டுக்கு விஜயம் செய்தார். இந்தியர்களின் அரசியல் விழிப்பு மேலும் பன்மடங்கு அதிகரிக்கத் தொடங்கியது. கனம் ஸ்ரீனிவாச சாஸ்திரி பிரிட்டிஷ் இந்திய சர்க்காரின் பிரதிநிதியாக மலாயாவிற்கு வந்து, இங்கு ஐரோப்பிய முதலாளிகள் வீட்டில் விருந்து சாப்பிட்டுவிட்டு, மலாயாவில் நாளொன்றுக்கு இந்திய ஆணுக்கு 50 காசும், பெண்ணுக்கு 40 காசும் சம்பள விகிதம் சரியாயிருக்குமென்று போய் புதுடில்லியில் சொல்லிவிட்டார். இது இந்தியர்களுக்குப் பெரும் வயிற்றெரிச்சலையுண்டுபண்ணியதில் அதிசயமில்லை. இந்தியர்களின் இதர பிரச்னைகளை சாஸ்திரியார் கவனிக்கவே இல்லை. இவ்விதமாக இக்நாட்டில் இந்தியர்களின் மனம் பற்றிஎரிந்துகொண்டிருக்கையில் எரிகிற நெருப்பில் எண்ணெயை வார்த்ததுபோல மலாயா தோட்ட முதலாளிகளும், சர்க்காரும் சேர்ந்து, ரப்பர் விலை இறங்கிவிட்டதென்று போலிக் காரணம் சொல்லி, இந்திய—மலாய் சர்க்கார்களுக்கிடையில் சாஸ்திரியார் மூலமேற்பட்டிருந்த ஒப்பந்தத்தைக்கூட (1939-ம் வருட ஜெர்மன்—ருஷ்ய 10 வருட நடுநிலைமை, அனாக்கிரமிப்பு ஒப்பந்தத்தை ஹிட்லர் 1941-ல் உதறித்தள்ளியதுபோல்) லக்ஷியம் செய்யாது, இந்திய சர்க்காரையும் கலந்தாலோசிக்காமல்

தினமொன்றுக்கு ஆணுக்கு 40 காசாகவும் பெண்ணுக்கு 32 காசாகவும் 1938 டிசம்பர் தொடக்கமாகத் தொழிலாளர்களின் சம்பளத்தைக் குறைத்துவிட்டனர். மலாயாவெங்கும் ஒரே பரபரப்பு. வேலைநிறுத்தமென்றால் போலீஸ் புலிகள் லாரிகளில் வந்து தொழிலாளர்களை வேட்டையாடுகின்றன. நல்விதிவசமாக அன்று இந்தியாவில் அரை சுயாக்ஷி நடத்திய காங்கிரஸ் சர்க்கார் மேற்கொண்டு இந்தியத் தொழிலாளர்கள் மலாயா வருவதை தடைசெய்து மலாய்நாட்டு ஐரோப்பிய முதலாளிகளுக்கும், சர்க்காருக்கும் நல்ல பாடம் கற்பித்தது.

1939 ஜூலை மாத வாக்கிலேயே ஐரோப்பிய அரசியல் வானில் யுத்தமேகம் சூழவாரம்பித்துவிட்டது. மலாயாவில் ரப்பர் விலை மிகவும் உயர்ந்துவிட்டது. ஆனால் இந்தியத் தொழிலாளர்களின் சம்பளம் ஒரு காசுகூட உயரவில்லை. அந்த 40 காசும் 32 காசுந்தான். 1939 செப்டம்பர் 1-ல ஐரோப்பிய யுத்தமும் ஆரம்பித்தது. மலாயாவில் வாழ்க்கை செலவு மலைபோலுயர்ந்தது. அப்பொழுதும் அந்த 40 காசும், 32 காசுந்தான். இந்தியர்களின் சகிப்புத்தன்மை மிதமிஞ்சியது. 1940 ஜனவரி வாக்கில் 50 காசும், 40 காசுமாயிற்று. ஆனால் ரப்பர் விலை உயர்வுக்குத் தக்கபடி சம்பளம் உயரவில்லை. வாழ்க்கைச் செலவின் உயர்வாலும், கிடைக்கும் சம்பளக் குறைவாலும் இந்தியத் தொழிலாளர்கள் பட்ட அவஸ்தை பஞ்சுகூட பட்டிராது. கெஞ்சினோம், மன்றாடினோம், பலனில்லை.

1940-ல் ஆசிய வானிலும் யுத்தமேகம் சூழ்ந்தது. லக்ஷக்கணக்கில் இந்திய—ஆஸ்திரேலிய—பிரிட்டிஷ் துருப்புகள் மலாயாவைப் பாதுகாக்கவந்தன. உணவுப்பொருட்கள் இதற்கிடையில் கட்டுப்படுத்தி விநியோகம் செய்யப்பட்டன. எனவே எங்கள் வாயிலும், வயிற்றிலும் மண்விழவாரம்பித்தது. மலாயாவின் பற்பல பாகங்களிலும் இந்தியர்கள் கதறலாயினர். மலாயாவெங்கும் இந்தியத் தொழிலாளர் வேலைநிறுத்தம் செய்துவிடுவரென்ற பயம் முதலாளிகளை வாட்டியதெனினும், அவர்கள் தொழிலாளர்களுக்கு ஒரு அணுப்பிரமாண உதவிகூட செய்ய முன்வரவில்லை. ஏனெனில் சீனர்களைப்போல இந்தியர்கள் பலாத்காரத்தில் இறங்கமாட்டார்களென்றும், வேலைநிறுத்தம் செய்ய இந்தியர்களுக்குப் போதிய பொருளாதார பலம் இல்லையென்றும், மேலும் அவர்களின் குறைபாடுகளைக்கேட்டு

உடனே பரிகாரம் செய்யத்தக்க வல்லமையுள்ள சுதந்திர சர்க்கார் இந்தியர்களுக்கு இல்லையென்றும் மலாயா சர்க்காரும், மலாயா ஐரோப்பிய முதலாளிகளும் நன்கறிந்து கொண்டிருந்தனர். இந்நிலைமையில் தாயற்ற சேய்களைப்போன்ற இந்நாட்டு இந்தியர்கள் தம் தலைவிதியை நிர்ணயிக்க தாமே முயற்சி எடுத்துக்கொள்ளவேண்டிய நிர்ப்பந்தமேற்பட்டது.

மலாயாவெங்கணுமுள்ள இந்தியர்கள் தம் அரசியல், பொருளாதார, சமுதாய நிலைமைகளைத் திருத்தியமைத்து உச்ச நிலையடையவேண்டிய வழிகளைத் தேடிக்கொள்ளும்படி ஆளும் வர்க்கத்தார் நிர்ப்பந்தித்துவிட்டனர். இவ்வுணர்ச்சி சகலரையும் தட்டியெழுப்பியது. ஆனால் பகிரங்கமாக அதற்கான ஸ்தாபனங்களை அமைத்துக்கொள்ளவும், நடவடிக்கைகளைக் கைக்கொள்ளவும் சர்க்கார் இடந்தரவில்லை. என்றாலும் எவ்வித நடவடிக்கை எடுத்துக்கொள்ளப்படினும், எந்த முகாந்திரத்தைக் கொண்டும், எந்த இந்தியரும் பலாத்காரத்தில் ஈடுபடக்கூடாதென்று ஒவ்வொருவரும் நன்குணர்ந்திருந்தனர்.

1940 மார்ச் மாத முதலில் கோலாலம்பூருக்கு சுமார் 25 மைல்களுக்கு மேற்கேயுள்ள கிள்ளான் பகுதியில் வேலைநிறுத்தம் ஆரம்பமாகிவிட்டது. இந்தியத் தொழிலாளர்களின் வேலை நிறுத்த ஜுரம் மலாயா முழுதும் பரவாது தடுத்து, பிரிட்டிஷ் மலாயா சர்க்காருக்கு நிலைமைகளை எடுத்துக்காட்டி, நம் மக்களுக்கு வேண்டியவற்றைச் சமாதானமான முறையிலேயே பெற்றுக்கொள்ளச் செய்யப்பட்ட பகீரதப் பிரயத்தனத்தின் கடைசிக் கட்டமாக ஒரு வார அவகாசத்தில் தொழிலாளர் கோரிக்கைகளைச் சர்க்காருக்கும் தோட்ட முதலாளிகளுக்கும் சமர்ப்பித்தனர். தொழிலாளர்களின் கோரிக்கைகளில் ஒரு சிலவற்றைக் கீழே தருகிறோம்:— (1) சீனத் தொழிலாளர்களைப்போலவே நாங்களும் அதிக வேலை செய்வதால் அவர்களுக்குக் கொடுக்கும் சம்பள விகிதம் எங்களுக்கும் கொடுக்கப்படவேண்டும். (2) எங்களை மிருகங்களைப்போல் நடத்தும் குமாஸ்தாக்களை விலக்கிவிட்டு, எங்கள் பாஷையினர்களையே குமாஸ்தாக்களாக நியமிக்க வேண்டும். (3) எங்கள் பிள்ளைகளுக்கு உண்மையாக கல்வி கற்பிக்கவேண்டும். (4) எங்கள் பெண்களை வெள்ளைத்துரைகளும், கருப்புத்துரைகளும் கற்பழிக்கும் பழக்கம் ஒழியவேண்டும். (5) நோய் வாய்ப்பட்ட காலத்தில் எங்களுக்கு உண்மை

யான வைத்திய உதவியளிக்கவேண்டும். (6) எங்கும் கள்ளுக் கடைகளை உடனே மூடிவிடவேண்டும். (7) எங்களுக்கு கூட்டம் கூட்டவும், பேசவும் உரிமைவேண்டும். (8) எங்கள் நண்பர்களும், உறவினர்களும் எங்களிடத்திற்கு வந்து பேசிப்போக அனுமதிக்கப்படவேண்டும். (9) நாங்கள் சைக்கிள்களில் ஏறிச் செல்ல அனுமதிக்கப்படவேண்டும். (10) நாளொன்றுக்கு 10—12 மணிநேரவேலை வாங்கும் பழக்கம் ஒழியவேண்டும். (11) குறைகளை எடுத்துக்காட்டுபவர்களையும், சிறிது சுதந்திர உணர்ச்சியுடன் நடப்பவர்களையும் போலிக்காரணங்கூறி வேலையினின்று விலக்கி, போலீஸிடம் ஒப்படைக்கும் பழக்கம் தொலையவேண்டும். (12) எங்களுடைய நலன்களைக் கவனிக்க இந்திய தேசியக் காங்கிரஸ் சபை கூறும் விதிகளை மனோவாக்குக்காய பூர்வமாக எடுத்து நடத்த ஓர் பலமுள்ள ஸ்தாபனம் இங்கு அமைக்கப்படவேண்டும். (13) படிக்காத தொழிலாளர்களை ஏற்றுக்கொள்வதுபோல இந்நாட்டுச் சர்க்கார் படித்த இந்தியர்களையும் ஏற்றுக்கொள்ளவேண்டும். (14) திருட்டுக் கங்காணிகள் மூலமும், தர்மார்டர் மூலமும் இந்தியாவிலுள்ள கிராம மணியக்காரர்களையும், எங்களையும் ஏமாற்றி ஆள்திரட்டி இங்கு கொண்டுவரும் பழக்கம் அறவே ஒழியவேண்டும்.

மலாயா முதலாளி வர்க்க சர்க்கார் மேற்படி கோரிக்கைகளை அலட்சியம் செய்ததோடு நிற்கவில்லை. கிள்ளானில் வேலை நிறுத்தம் செய்த தொழிலாளர்கள் உடனே குடியிருக்கும் இடங்களை விட்டுவிட்டு வேறு எங்காவது ஓடிவிடவேண்டுமென்று தோட்ட ஐரோப்பிய அதிகாரிகள் உத்திரவிட்டனர். தொழிலாளர்களுக்கு மாமூலாக வாராந்தரம் சப்ளை செய்யப்படும் உணவுப்பொருட்கள் நிறுத்தப்பட்டன. அவர்களுக்கு குடிக்கக் கூட தண்ணீர் கிடைக்காதபடி தண்ணீர் சப்ளை யந்திரங்களை மூடிவிட்டனர். என்னே ஐரோப்பிய முதலாளிமார்களின் மூர்க்கத்தனம். பச்சிளங்குழந்தைகள் தாகத்தாலும், பசியாலும், வாடிக் கதறுகின்றன. எனினும் தொழிலாளர்கள் தங்கள் கோரிக்கைகைகள் நிறைவேற்றப்பட்டாலொழிய தாம் எவ்விதக் கஷ்டங்களையும் பொருட்படுத்தாது தொடர்ந்து வேலைநிறுத்தம் செய்யத் தீர்மானித்து விட்டனர். இந்தப்பரிதாபகரத்தைக் கண்டு பட்டணங்களில் வதியும் இந்தியர்கள் மாட்டுவண்டிகளிலும், மோட்டார் வண்டிகளிலும் உணவுப் பொருட்களையும், தண்

ணீரையும் போலீஸ் அனுமதியுடன் கொண்டுபோய் இரன்
டொருநாள் தொழிலாளர்களுக்கு கொடுத்துதவினர். ஆனால்
இதற்கிடையில் இவ்விதம் செய்தவர்கள் கிளர்ச்சிக்காரர்களென்று
அதே போலீஸாரால் கைது செய்யப்பட்டனர். மேலும் ஐரோப்
பிய முதலாளிகளின் ஒத்துக்கு மத்தளம் போடும் போலீஸார்
தோட்டத்தொழிலாளர்களையும் இல்லாத பொல்லாத காரணங்
களைக்கூறி அடித்துப்பயமுறுத்தி வேலைக்குத் திரும்பும்படி செய்ய
வாரம்பித்தனர். கிள்ளான், பந்திங், போர்ட் ஸ்வெட்டன்ஹாம்,
பத்துதீகா, மோரிப், கோல சிலாங்கூர், காப்பார், ரவாங், குவாங்,
பத்து ஆராங், கோலாலம்பூர், தஞ்சமாலிம் ஆகிய விடங்களில்
தான் முதன்முதலாக நிராயுதபாணிகளான ஏழை இந்தியத்
தொழிலாளர்களுக்கும் ஆயுத சன்னத்தர்களான ஐரோப்பிய
தோட்டமுதலாளிகளின் தாஸானுதாஸர்களாகிய சர்க்கார் போலீ
ஸாருக்குமிடையில் கலகங்கள் மூண்டன. ஆங்காங்கு தொழி
லாளர்கள் அளவற்ற கஷ்டங்களடைந்தனர். இந்நிலைமையில்
மாலுமியில்லா மரக்கலம் போன்ற தொழிலாளர்கள் காந்திஜீ
யின் அஹிம்ஸாதர்ம முறையை மறக்கும்படி நிர்ப்பந்திக்கப்
பட்டு விட்டனர்.

சர்க்கார் பீதி கொண்டது. என்ன செய்வதெனவறியா
மல் மலாயா பாதுகாப்பிற்காக வந்திருந்த வெளியூர் துருப்பு
களையும், உள்ளூர் தற்காப்பு படையையும் நிராயுதபாணிகளான
இந்தியர்களை அடக்க அனுப்பியது. டாங்கிகளும், யந்திர பீரங்
கிகளும், கவசமோட்டார்களும், துப்பாக்கிகளும் வெடி கலகப்
பிரதேசங்களில் கிடுமுழங்கின. இவ்விதமாக 15-நாட்கள் அல்
லும் பகலாகப் போர்நடந்தது. இறுதியில் இந்தியத் தொழி
லாளர்கள் அடக்கப்பட்டு விட்டனரென்று சொல்ல வேண்டிய
தில்லை. மாண்டவர்களின் தொகை பெரிது. ஊனமடைந்தவர்
களின் எண்ணிக்கை இன்னுமதிகம். கைது செய்யப்பட்ட
ஆண் பெண் இந்தியர்கள் விசாரணையின்றி சிறையிலிருந்து ஜப்
பானியர்கள் வந்தபிறகு 1942-ல் விடுவிக்கப்பட்டனர். இதன்
எதிரொலி மலாயாவெங்கும் பரவியது. ஆங்காங்கு துருப்பு
களும், போலீஸாரும் கொன்று, சிறைபிடித்து, நாடுகடத்திய நம்
மக்களின் தொகை மிகப்பெரிது. இவ்விதமாக இந்தியர்களின்
சுதந்திர உணர்ச்சி தற்காலிகமாக பிரிட்டிஷ் ஆயுதவன்மையால்

அடக்கப்பட்டு விட்டதெனினும், எங்களிடம் ஏகாதிபத்திய எதிர்ப்பு நாளுக்கு நாள் அதிகரிக்கத்தொடங்கியது.

மலாயா இந்திய சமூகமென்பது இந்தியத் தொழிலாளர்களை முதுகெலும்பாகக்கொண்டது. அவர்கள் இங்கில்லையென்றால் பிறகு வேறு எத்தகைய இந்தியர்களுக்கும் இங்கு ஜோலியில்லை. இந்தத் தொழிலாளர்களைத்தான் பிரிட்டிஷ் முதலாளிகள் கசக்கிப்பிழிந்து லண்டனில் கோட்டைகளைக் கட்டிவந்தனர். தொழிலாளர்களின் பால் அனுதாபம் காட்டிய இந்தியர்களைப் புரட்சிக்காரர்களென்றும், பொதுவுடமைக் காரர்களென்றும் கூறி சர்க்கார் பலரைச் சிட்சித்தது; சிலரைப் பட்சித்தது. கிள்ளான் பகுதியை மலாயாவின் பஞ்சாப் என்றுதான் கூறவேண்டும். சரித்திரப்பிரசித்திப்பெற்ற பஞ்சாப் படுகொலையை நடத்திய அதே பிரிட்டிஷ் அதிகாரவர்க்கந்தான் அதே இந்தியர்கள்மீதுதான் கிள்ளான் பகுதியிலும் படுகொலையை நடத்தியது. முழுப்பூசணிகாயைச் சோற்றில் மறைக்க முயற்சிப்பதைப்போல் இச்சம்பவத்தை அறவே மறைக்க ஸ்தல பிரிட்டிஷ் அதிகாரிகள் தலைகீழாக நின்றனர். காலமோ யுத்தகாலம். எடுத்தது பிடித்ததற்கெல்லாம் அவசரச்சட்டம். பத்திரிகைகளுக்கு வாய்ப்பூட்டு. வெளியில் பிரஸ்தாபிப்பவரை ஐந்தாம் படையினரெனப் பிடிக்க ரகசிய போலீஸார் எஜமானைத்தொடரும் நாயைப்போல எங்கும் சுற்றுவர். இவ்வளவு அடக்குமுறையையும் மீறிக்கொண்டு இச்செய்தி எப்படியோ ஜெர்மனி, இத்தாலி, ஜப்பான் போன்ற நாடுகளுக்கு 24 மணி நேரத்திற்குள் எட்டிவிட்டது. ஆனால் லண்டனும், புதுடில்லியும் பெர்லின் ரேடியோவைக் கேட்டுத்தான் விஷயத்தை அறிந்தன. இது சம்பந்தமாய்ப் பிரிட்டிஷ் பார்லிமெண்டும், பிரிட்டிஷ் இந்திய சர்க்காரும் கேட்ட கேள்விகளுக்கு பிரிட்டிஷ் மலாயா சர்க்கார் தலைவராயிருந்த சர். ஷெண்டன் தாமஸ் "ஓ! அது ஒன்றுமில்லை. மலாயாவிலுள்ள கிளர்ச்சிக்காரர்களது தூண்டுதலால் நிகழ்ந்த அற்ப விஷயம். ஆனால் எதிரிநாட்டு ரேடியோக்கள் சிறிதைப் பெரிதாக மிகைப்படுத்திக் கூறுகின்றன." என்று மழுப்பலான பதிலளித்தார். மலாயாவிலிருந்த பிரிட்டிஷ் இந்திய சர்க்காரின் ஏஜண்டு எதுவும் செய்ய அவருக்கு அதிகாரமில்லை. பிரிட்டிஷார் இவ்விதம் ஆங்காங்கும் பாலுக்கும் காவல், பூனைக்கும் தோழர்களாக இருந்து வந்தனர். இப்படியாக 1941-ம் வருட முற்பகுதியில்

கிள்ளான் படுகொலை சம்பவம் ஒருவாறு முடிவடைந்ததும் சிங்கப்பூரில் எழுந்தருளியிருந்த பிரிட்டிஷ் அதிகாரிகள் மலாயா விலுள்ள இந்திய தேசாபிமானத்தை அடியோடு அகற்றுவதற் காக வேண்டிய புதிய சட்டதிட்டங்களை இயற்ற முனைந்தனர். இதையொட்டிதான் மலாயாவில் இந்தியர்கள் பிரிட்டிஷார்மீது கொண்டிருந்த துவேஷம் உச்சநிலையடைந்தது. இது நிற்க பிரிட்டிஷார் தம் ஆட்சிக்குட்பட்ட வெளிநாடுகளில் இந்திய அரசியல் ஸ்தாபனங்கள் ஸ்தாபிக்கப்படுவதைத் என்றுமே அனு மதிப்பதில்லை. ஆனால் இந்தியாவில் செய்துவந்தது போலவே ஆங்காங்கும் இந்தியர்களுக்கிடையில் வகுப்புவாதத்தை மட்டி லும் அபிவிருத்தி செய்துவந்தனர்.

## இந்திய சுதந்திர இயக்கம்

இந்தியாவை அடிமையாக்கி வைத்திருக்கும் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தினரும், அவர்களது நேசதேசத்தினரும் கிழக் காசியாவிலிருந்து அறவே விரட்டியடிக்கப்பட்டுவிட்டனர் என்று கடந்த அத்தியாயத்தில் பார்த்தோம். எனவே கிழக்காசியா வில் வசித்து வந்த இந்தியர்கள் இப்பொழுது தமது தாய் நாட்டுச் சுதந்திரத்திற்காக பகிரங்கமாகவும், தீவிரமாகவும் பாடு பட்டுத் திட்டவட்டமான நடவடிக்கைகளை எடுத்துக்கொள்ள நல்லசந்தர்ப்பமேற்பட்டது. பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் அடி மைகளாயிருந்த அமெரிக்கா, ஐர்லந்து போன்ற நாடுகள் இவ் வித சந்தர்ப்பங்களை உபயோகித்துதான் சுதந்திரமடைந்தன. எனவே கிழக்காசிய இந்தியர்களும் இச்சந்தர்ப்பத்தை வரவேற் றனர். இந்தியா சுதந்திரமடைந்தால்தான் ஜப்பானின் கிலி தீரும். ஆசியா மட்டுமின்றி அகில உலகும் சுதந்திரமடையும். ஆசியாவில் மேனாட்டு ஆக்கிரமிப்பும் முடிவடையும். எனவே இதை நன்குணர்ந்த ஜப்பானிய சர்க்காரும் இந்திய சுதந்திர இயக்கத்தை நடத்த மனோவாக்கு காய பூர்வமாக ஆதரவு காட் டியது.

இந்நிலைமையில் 8-12-1941-ல் மகா கிழக்காசிய யுத்தமாரம் பித்தது. ஜப்பானால் பிடிபட்ட, ஜப்பான் செல்வாக்கிற்குட் பட்ட ஒவ்வொரு நாட்டிலும் இருந்த இந்திய வகுப்புவாதஸ்தாப னங்கள் அனைத்தும் கலைக்கப்பட்டு "இந்திய சுதந்திர சங்கம்" என்ற ஒரே அரசியல் ஸ்தாபனம் மட்டும் ஆங்காங்கு நிறுவப்

பட்டுவந்தது. இதன் பிரகாரம் ஜப்பான், மஞ்சுகோ, கொரியா, ஷேங்காய், ஹாங்காங், இந்தோ சீனா, பர்மா, சயாம், அந்தமான், நிக்கோபார், மலாயா, ஜாவா, சுமத்ரா, பிலிப்பைன் ஆகிய சகலவிடங்களிலும் இந்திய சுதந்திர சங்கங்கள் ஏற்பட்டன. பிறகு இவ்வனைத்தினரும் பிரதிநிதிகளைக்கொண்ட மகா கிழக்காசிய இந்திய சுதந்திர சங்கத்தின் தலைமைக்காரியாலயம் சயாமின் தலைநகரான பேங்காக்கில் ஸ்தாபிக்கப்பட்டது. இச்சங்கத்தின் முதலாவது மகாநாடு டோக்கியோவில் 1942 மார்ச் மாதம் 28-29-30-ம் தேதிகளில் நடைபெற்றது. அதற்கு சயாம் இந்தியர்களின் பிரதிநிதிகளாக சுவாமி சத்தியானந்தபூரி, சர்தார் பிரிதாம் சிங் ஆகிய இருவரும், மலாயா இந்தியர்களின் பிரதிநிதிகளாக ஸ்ரீமான்கள் என். ராகவன், கே. ஏ. நீலகண்ட ஐயர், எஸ். ஸி. கோஹோ, கே. பி. கேசவ மேனன் ஆகிய நால்வரும், மலாயாவில் ஜப்பானியரிடம் சரணாகதியடைந்த இந்தியப்பட்டாளத்தின் பிரதிநிதிகளாக கேப்டன் மோகன்சிங்கும், கேப்டன் முகமது அக்ராம்கானும் சென்றனர். போகும் வழியில் தாம் சென்ற விமானம் விபத்திற்குள்ளானதால் சத்தியானந்தபூரி, பிரிதாம் சிங், நீலகண்ட ஐயர், அக்ராம்கான் ஆகிய நால்வரும் 24-3-1942-ல் விண்ணுலகெய்திவிட்டனர். பிரஸ்தாப மகாநாடு டோக்கியோ இந்திய சுதந்திர சங்கத்தின் ஆதரவில் நடைபெற்றது. அச்சங்கத் தலைவரான ஸ்ரீ ராஷ்பிகாரி போஸே அம்மகாநாட்டிற்குத் தலைமைவகித்தார். இறந்தோர் போக எஞ்சிய மலாயா, ஹாங்காங் இந்தியப் பிரதிநிதிகள் அம்மகாநாட்டில் கலந்துகொண்டனர். இறந்தவர்களுக்காக ஜப்பானிய பிரதம மந்திரி ஜெனரல் டோஜோ தலைமையில் ஓர் அனுதாபக்கூட்டமும் நடந்தது. பிறகு மலாயா இந்தியத் தலைவர்கள் ஜப்பானில் சில வட்டாரங்களைப் பார்வையிட்டனர். அவர்களின் கண்களுக்குத் தென்பட்டவர்கள் இந்தியாவிடம் உண்மையான அனுதாபம் கொண்டிருந்ததாக அவர்களுக்குத் தோன்றிற்று. பிறகு 21-4-1942-ல் சிங்கப்பூர் வந்து சேர்ந்தனர். 24-4-1942-ல் சிங்கப்பூரில் டோக்கியோ செல்லுகையில் இறந்தவர்களுக்காக நடந்த அனுதாபக்கூட்டத்தில் மலாயாவைப்பிடித்த ஜப்பானிய பிரதம சேனாபதி ஜெனரல் யாமாஷிதா, மலாயா இந்திய சுதந்திர சங்க மத்தியஸ்தரான பூஜிவாரா, கேப்டன் மோகன் சிங், ஸ்ரீ ராகவன் ஆகியோர் பிரசங்கம் செய்தனர். பிறகு அதே தினத்தில் சிங்கப்பூரில் நடந்த மற்றோர் இந்தியப் பொதுக்கூட்

டத்தில் டோக்கியோ மகாநாடுபற்றி ஸ்ரீ ராகவன் செய்த பிரசங்கச் சுருக்கம் கீழே தரப்பட்டிருக்கிறது:—

"டோக்கியோ செல்லுகையில் உயிர்நீத்த நான்கு தேசாபிமானிகளின் ஆத்ம சாந்திக்காக டோக்கியோ ஹாங்காஞ்சி தேவாலயத்தில் நடந்த பிரார்த்தனையின்போது ஜப்பானிய பிரதமந்திரி டோஜோ கூறியதாவது:- 'அவர்கள் எந்த லட்சியத்திற்காக உயிர் நீத்தனரோ அந்த லட்சியம் பயனற்றுப்போக வேண்டியதில்லை. 40 கோடி இந்திய மக்களும் இனியொரு கணங்கூட பிரிட்டிஷ் சுரண்டலுக்கு முடிசாய்க்கவே கூடாது. நான்கு வீரபராக்கிரம ஆத்மாக்களை இழந்ததற்காக அனுதாபம் காட்டுமுகத்தான் இந்தியாவின் பூரண சுதந்திரத்திற்காகச் சகல உதவிகளையும் செய்வதாகப் பிரமாணம் செய்கிறேன்.' இதன் பிறகு நாங்கள் பிரதமர் டோஜோவைப் பேட்டிகண்டபோது அவர் திரும்பவவும் எங்களிடம் வற்புறுத்திக் கூறியதாவது:- 'இங்கிலாந்து இந்தியாவையே தனது கிழக்கோடித் தற்காப்புத் தளமாகச் செய்யப்போகிறதென்பதைத் தெரிந்தும் ஜப்பானிய சர்க்கார் மௌனமாயிருக்கமுடியாது. இதையுத்தேசித்து இந்தியர்கள் தாமாகவே பிரிட்டிஷ் பளுவை விலக்கிவிட்டு ஒரு சுதந்திர இந்தியாவை சிருஷ்டித்துக்கொள்வாரென ஜப்பான் எதிர்பார்க்கிறது. உங்களது முயற்சிகளில் ஜப்பானுக்குப் பூரண அனுதாபமிருக்கிறது. இது சம்பந்தமாக தன்னாலியன்ற சகல உதவிகளையும் செய்ய அது தயங்காது. நீங்கள் தத்தம்மிடம் திரும்பியதும் எங்களது இக்கருத்தை ஆங்காங்கு எடுத்துரைத்து பிரிட்டிஷ் கொடுங்கோன்மையைப் போக்கவும், இந்தியர்களுக்கு ஒரு இந்தியாவை சிருஷ்டிக்கவுமாக நீங்களனைவரும் ஏகோபித்து நடவடிக்கை எடுத்துக்கொள்வீர்களென நம்புகிறேன்.' மகாகிழக்காசியாவிலுள்ள இந்திய சுதந்திர சங்கங்கள் தீவிரநடவடிக்கைகளுக்கான சகலமுகாந்திரங்களையும் ஏற்கனவே ஆராயத் தொடங்கிவிட்டன. நீங்கள் தயாராயிருங்கள்."

மகா கிழக்காசிய இந்திய சுதந்திர சங்கத்தின் இரண்டாவது மகாநாடு ஸ்ரீ ராஷ்பிகாரி போஸ் தலைமையில் பேங்காக்கில் 1942-ம் வருடம் ஜூன் மாதம் 15-ம் தேதி முதல் 22-ம் தேதி வரை நடந்தது. இதற்கு கிழக்காசியாவிலுள்ள பற்பலநாட்டு இந்தியப் பிரதிநிதிகளாகச் சுமார் 100 பேர்கள் வந்திருந்தனர்.


The Indian freedom is
necessary absolutely
for the peace of
the world &
happiness of
mankind.
Rash Behari Bose
20/6/42

ஸ்ரீ ராஷ்பிகாரி போஸ்

மேலும் சயாம் பிரதம மந்திரியும், அங்கிருந்த ஜப்பான், ஜெர்மன், இத்தாலிய ஸ்தானீகர்களும் இதற்கு விஜயம் செய்து தத்தம் நாட்டுச் சர்க்கார் சார்பாக இந்திய சுதந்திரத்தை அங்கீகரித்து பாராட்டி பிரசங்கமும் செய்தனர். ஜெர்மனியில் அஞ்ஞாத வாசம் செய்துவந்த ஸ்ரீயுத சுபாஷ் சந்திர போஸும், ஜப்பான் மந்திரிகளும் இதற்கு வாழ்த்துச் செய்திகளை அனுப்பியிருந்தனர். கிழக்காசியாவிலுள்ள 30 லக்ஷம் இந்தியர்களின் சார்பில் 57 அங்கத்தினர்களைக்கொண்ட ஓர் பொதுஜனக் கமிட்டியையும், 33 அங்கத்தினர்களைக்கொண்ட ஓர் இராணுவக் கமிட்டியையும், இவற்றிற்கெல்லாம் தலைமையாக ஸ்ரீமான்கள் ராஷ்பிகாரி போஸ் (தலைவர்) என். ராகவன், கே. பி. கே. மேனன், மோகன் சிங், கிலானி ஆகிய ஐவரையும் கொண்ட காரியக்கமிட்டியையும் ஷெ மகாநாடு நியமித்தது.

பேங்காக் மகாநாட்டில் ஏராளமான முக்கிய தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன. அவைகள் ஜப்பானிய சர்க்காரின் அங்கீகாரத்திற்காக அனுப்பப்பட்டிருந்தன. ஜெனரல் மோகன் சிங் இந்திய தேசிய இராணுவத்தையும் உருவகப்படுத்திவிட்டார். கிழக்காசிய இந்திய சுதந்திர இயக்கம் மிகத்தீவிரமாக வளர்ந்து வந்தது. பல மாதங்கள் கடந்தன. பேங்காக் தீர்மானங்களைப்பற்றிய அங்கிகாரம் வந்து சேரவில்லை. எனவே இயக்கத்தின் நாடி தளர்ந்தது. ஜனங்களுக்கிடையில் வதந்திகள் அதிகரித்தன. சிலர் ஜப்பான் மீது சந்தேகங் கொண்டனர். பலர் நம் தலைவர்களிடம் நம்பிக்கை இழந்தனர். இருசாராது அபிப்பிராயமும் நியாயமானதுதான். எனவே நெருக்கடி அதிகரித்துக்



கர்னல் என். எஸ். கில்



கேப்டன் மோகன் சிங்கை கிழக்காசிய இந்திய சுதந்திர சங்கக் காரியக் கமிட்டியானது இந்திய தேசீய இராணுவ சேனாதிபதியாக நியமித்து, அவருக்கு "ஜெனரல்" என்ற அந்தஸ்தையும் வழங்கியது.

கொண்டேவந்தது. இந்திய தேசிய இராணுவத் தோலைப் போர்த்திக்கொண்டு, பிரிட்டிஷாருக்கு வேவுபார்த்து வந்ததாக கர்னல் என். எஸ். கில் ஜப்பானியர்களால் திடீரெனக் கைது செய்யப்பட்டதைக் கண்டித்தும், ஜப்பானியரின் மீதுள்ள அவ நம்பிக்கையை ஊர்ஜிதப்படுத்தியும் மகா கிழக்காசிய தமுலாவ தாண்டுவிழாத் தினமாகிய 8-12-1942-ல் இ. சு. ச. காரிய நிர்வாகக்கமிட்டியங்கத்தினர் நால்வரும் ராஜினாமா செய்துவிட்டனர்.

இதனால் தலைவர்களே இயக்கத்தைப் பாழ்படுத்திவிட்டன ரென ஜனங்கள் கருதினர். கிழக்காசிய இந்திய சுதந்திர இயக்கம் மகா பெரியது. அதை சரிவரநடத்த அந்தரங்க சுத்தியும், சாமர்த்தியமும், யோக்கியதாம்சமுமுள்ள ஒரு தலைவர் கூட இங்கு இல்லையென்பதை ஜனங்கள் உணர்ந்து வருந்தினர். ஒன்று சுபாஷ் பாபு வரவேண்டும் அல்லது இந்திய சுதந்திர இயக்கம் கைவிடப்படவேண்டும். சுயநலமிகளின் விஷமப் பிரசாரத்தை நாங்கள் கண்டிக்கின்றோமென்று ஜனங்கள் கதறவாரம்பித்தனர். இச்சமயத்தில் நேதாஜீ ஜெர்மனியிலிருந்தார். எனவே ராஷ் பிகாரி போஸ் "உங்களுக்காகக் கொண்டுவந்தேன்" என்று கூறிக் கொண்டே மந்திரஜால வித்தைபோல் நேதாஜீ சுபாஷ் சந்திர போஸ் அவர்களை 4-7-1943-ந் தேதி ஷோனனில் கொண்டு வந்து நிறுத்தினர். தம் தலைமைப்பதவியையும் அவரிடம் கொடுத்துவிட்டார். அப்பொழுது இந்தியர்களுக்கு அன்னார் ஒரு செய்திவிடுத்தார். அதில் "இந்திய விடுதலைக்காக இறுதி வரை போரைவிடாது நடத்தவேண்டுமென்ற நெஞ்சுறுதியிலும், 'சுதந்திரம் அல்லது மரணம்' என்னும் கொள்கையிலும், உற்சாகத்திலும், ஊக்கத்திலும் நமது நேதாஜீயை ஒருவரும் மிஞ்சி விடமுடியாது. ஆதலின் நீங்கள் அனைவரும் நேதாஜீயைப் பின் பற்றுங்கள். அவரை நம்புங்கள்." என்றார்.

இதுவரை தக்க தலைவரின்றி தவித்துக்கொண்டிருந்த இந்தியர் அனைவரும் இம்மாதிரியான உணர்ச்சிமிக்க சம்பவத்தைக் கண்டு புளகாங்கிதமடைந்ததுடன் தங்கள் முழு ஆதரவையும் நேதாஜீக்கு அளிக்க முன்வந்து விட்டனர். உயிரையும் கொடுக்க வாலிபர்கள் மனமுவந்து நின்றனர். நேதாஜீயின் தலைமைப் பதவியில் இந்தியர்கள் அனைவரும் அளவிலா சந்தோஷமடைந்தனர். பாழுங்கிணற்றில் கண்ணை மூடிக்கொண்டு விழுந்து விடச் சொன்னாலும் அவ்வாலிபர்கள் நேதாஜீயின் ஆணை ஒன்றை

மட்டும் பெரிதாக மதித்து அதற்கும் தயாராயிருந்தனர். நேதாஜீயின் மீது அவ்வளவு நம்பிக்கை. நேதாஜீயும் அவ்வப்பொழுது பொதுமக்களின் மனதில் எழக்கூடிய சந்தேகங்களுக்கெல்லாம் திடமான பதிலளித்து ஊக்கமூட்டினார். அவர் செய்யும் ஒவ்வொரு பிரசங்கத்திலும் அவர் மக்களின் மனதையறிந்து பதில் கூறி ஊக்கத்தை ஊட்டினார். நேதாஜீ முதல் முதல் 4-7-1943ல் சிங்கப்பூரில் பேசிய கூட்டமொன்றில் எடுத்த எடுப்பில் ஜனங்களின் மதிப்பைக் கவர்ந்தார். அதன் காரணம் அவருடைய பிரசங்க வன்மையேயாகும். பிரசங்கத்தில் மட்டுமல்லாது அவர் செயலிலும் வன்மையுடையவர் என்பதைக் காட்டினார். அந்த முதல் பிரசங்கத்தில் அவர் கூறிய சில வார்த்தைகள் மட்டும் பொன் போன்றவையாகும். அவை பின்வருமாறு:—

"இந்தியாவிலிருந்து நான் வெளியேறியது ஒரு விந்தையாக உங்களுக்கு தோன்றலாம். அதிக கஷ்டத்துடன்தான் வெளியேறினேன். ஆயினும் அதைப்பற்றி ஈண்டு குறிப்பிட விரும்பவில்லை. அந்த சாம்ராஜ்யத்திலிருந்து நான் வெளியேறுவதை எந்த சக்தியாலும் தடுக்கமுடியவில்லை. அதைப்போலவே என் தேசமாகிய இந்தியாவிற்குள் நான் என் இஷ்டம் போல் நுழைவதையும் எந்த சக்தியாலும் தடுக்க முடியாது. ஜப்பானியர்களின் கைப்பொம்மையாக நான் இருந்து விடுவேனென நீங்கள் ஒருகாலமும் நினைக்கவேண்டாம். இந்தியாவுக்காக சுதந்திரப் போர் செய்வதையும் ஜப்பானியர் தடுத்துவிடமுடியாது. பரஸ்பரம் அவர்களின் உதவி நமக்கும், நம்முடைய உதவி அவர்களுக்கும் இருக்கவேண்டியது அவசியந்தான். எனினும் அவர்கள் இஷ்டப்படி நாம் நடந்துவிட மாட்டோம். அவர்கள் உதவிக்கு பதிலாக விலைகொடுத்து விடுவோமென்று உறுதி கூறுவோம். உங்கள் ஒற்றுமைதான் என்னுடைய பலமாகும். காந்திஜீயின் அஹிம்சையைப்பற்றி நீங்கள் சிந்திக்கவேண்டாம். ஆயுதப்போராட்டத்தையும் அவர் ஆமோதித்திருக்கின்றார். நான் ஒரு தடவை காந்திஜீயிடம், ஆயுதத்தினால் வெற்றி கிட்டினால் அப்பொழுது நீங்கள் என்ன சொல்வீர்கள்? எனக் கேட்டேன். "அப்படி வெற்றியுடன் வரும்பொழுது முதலில் வரவேற்பவன் நானாகவே இருப்பேன்." என்று அவர் புன்னகையுடன் என்னிடம் கூறியிருக்கிறார். இதனால் அஹிம்சையை நீங்கள் எண்ணி அல்லலுற வேண்டாம்.

என்னோடு வாருங்கள். நான் உங்களை சுதந்திர இந்தியாவில் சேர்த்து விடுகிறேன். என்னிடம் உங்கள் நம்பிக்கையை மட்டும் வையுங்கள். அதுவே போதும். நான் யாருக்கும் அடிமையல்ல. என்னை எந்த சக்தியும் அடிமையாகச் செய்யமுடியாது." என்றார்.

ஜனங்களின் உற்சாகம் பன்மடங்கு பெருகியது. அகில உலகமும் அதிரும்படியான இடிமுழக்கம் கிழக்காசியாவில் கேட்டது. சுதந்திர சங்கநாதம் இந்தியாவில் கேட்கும்படி பிளிறிற்று. ஒன்று திரண்டனர் மக்கள். கிழக்காசியா பூராவும் இந்திய சுதந்திர சங்கங்கள் தோன்றின. "சங்கம்" என்ற பெயர் இதற்குத் தகுதியுடையதல்ல. சங்கங்களாக அவை விளங்கவில்லை. ஒவ்வொரு ஊரிலும் அது ஒரு சட்டசபையாக விளங்கிற்று. இந்தியர்களைப்பொறுத்த விஷயம் யாவும் அங்கே தான் நடைபெறவேண்டும். இச்சங்கங்களின் பொருளாதாரம், மக்களின் பொருளாதாரம்தான். தங்களிடம் கிடைத்த சகலவற்றையும் அளித்தனர். சிலர் தங்களிடம் இருந்த சொத்து பூராவையும் அர்ப்பணித்து விட்டு, பெண்டு பிள்ளைகளுடன் இராணுவத்தில் சேர்ந்துகொண்டனர். பெண்டுபிள்ளைகளுடன் இராணுவத்தில் எப்படி சேரமுடியும் என்று நினைக்க இடமுண்டு. இதை உத்தேசித்தேதான் நேதாஜீ ஆடவருக்கு இராணுவமும், பெண்களுக்கு 'ஜான்ஸி ராணி ரெஜிமெண்டும்,' அவர்களின் குழந்தைகட்கு பாலக் சேனுவும் ஏற்படுத்தினர். ஏனெனில் ஆண்பிள்ளை படையில் சேர்ந்தால், பெண்பிள்ளையும், சிறுவருங்கூட அதில் சேர தமக்கும் உரிமையுண்டென முந்திக் கொள்ளும் அவ்வளவு ஆர்வம் நிறைந்து விளங்கினர் இப்பிரதேச இந்தியர். இதையுத்தேசித்தே மேற்படி மூன்று படைகளும் நிர்மாணிக்கப்பட்டன. என்னே! நேதாஜீயின் மூளைத் திறன்! இன்று உலகம் முழுதும் போற்ற இதுதான் காரணம் போலும்! இந்திய சுதந்திர சங்கத்தில் அங்கத்தினராக ஒவ்வொரு இந்தியரும் சேரவேண்டும். சேராதவர்களை ஜப்பானியரே எதிரிகளாகக்கூட கருதினர்.

## நேதாஜீ பிரசங்கம்

"நமது இயக்கத்திற்கும், இந்தியாவுக்கு வெளியில் நாம் செய்துக்கொண்டிருக்கும் ஒவ்வொரு காரியத்திற்கும் பாரத நாட்டிலுள்ள சகல பொதுமக்களினுடைய பரிபூரண ஆதரவு மட்டு

# நேதாஜி போஸும், ஹிட்லரும்



கல்கத்தாவிலுள்ள தனதில்லத்திலிருந்து 1941 ஆரம்பத்தில் நேதாஜீ சுபாஷ் சந்திர போஸ் புறப்பட்டு, பெஷாவர் மூலமாக ஓர் எல்லைப்புற பட்டாணியரைப்போல் மீசையுடனும், தாடியுடனும் வேஷந்தரித்து காபூல் வந்ததும், ஆப்கானிஸ்தான ரகசிய இலாகாவைச் சேர்ந்த ஓர் அதிகாரி நேதாஜீயை விசாரிக்க முயற்சித்தாரெனினும், நேதாஜீ தமது கைக் கெடியாரத்தை அந்தப் போலீஸ்காரனுக்குக் கொடுத்துத் தப்பிக்கொண்டார். பிறகு ரஷியா மூலம் விமானத்தில் பெர்லின் சென்று ஹிட்லருடன் கை குலுக்கும் ஷை படத்தில் கூட நிற்பவர் ஜெர்மன் அந்நிய நாட்டு மந்திரியான ரிப்பன் ட்ராப்.

யின்றி பிரிட்டிஷ் இந்திய இராணுவத்திலுள்ள பெரும் பகுதியினரின் ஆதரவும் இருக்கின்றது." என நேதாஜீ சுபாஷ் சந்திர போஸ் 21-10-1943-ல் ஷோனன் கத்தே தியேட்டரில் நடைபெற்ற கிழக்காசிய இந்தியப் பிரதிநிதிகளின் மகாநாட்டில் செய்த பிரசங்கத்தின் முழுவிபரம் கீழே தரப்பட்டுள்ளது.

நண்பர்களே!

அதிகக் குறுகிய கால அறிவிப்பின் பேரில் கூட்டப்பட்டிருக்கும் இம்மகா நாட்டிற்கு உங்களை நான் மனமகிழ்ச்சியுடன் வரவேற்கிறேன். சென்ற ஜூலை மாதம் நாம் இவ்விடம் சந்தித்ததன் பின்னர் அடைந்திருக்கும் அபிவிருத்திகளையும், அருஞ் செயல்களையும் கணக்கெடுப்பதற்காவும், அதன் பின்னர் நமது தேசிய லக்ஷியம் நிறைவேறுவதற்கான நடவடிக்கைகளைக் கையாளுவதற்குமாகவே இம்மகாநாடு கூட்டப்பட்டிருக்கிறது. கிழக்காசிய இந்திய சுதந்திரச் சங்கத்தின் தலைமைப் பதவியை நான் ஏற்றுக்கொண்டதும் முதன் முதலாகத் தலைமைக் காரியாலயத்தை யுத்த முஸ்தீபிற்கான நிலைமையில் திருத்தியமைப்பதில் எனது முழுக் கவனமும் செலுத்தப்பட்டது. இவ்வேலையானது ஜூலை மாதம் ஆரம்பிக்கப்பட்டு தலைமைக் காரியாலபத்தில் அநேக புதிய இலாகாக்கள் ஏற்படுத்தப் பட்டன. கிழக்காசிய இந்திய சர்வஜனசக்தி சாதனங்களையும் திரட்ட வேண்டுமென்ற சர்வாம்ச படைதிரட்டுக் கொள்கைக்கிணங்க தலைமைக் காரியாலயமானது திருத்தியமைக்கப்பட்டது. தலைமைக் காரியாலயம் திருத்தியமைக்கப்பட்ட பின்னர், கிழக்காசியாவிலுள்ள சகல கிளைச் சங்கங்களும் இதே அஸ்திவாரத்தின் பேரில் திருத்தியமைக்கப்பட்டதுடன் "சர்வாம்சப் படை திரட்டல்" என்ற கொள்கையானது அமுலுக்கும் கொண்டுவரப் பட்டது.

இதற்கடுத்தாற்போல் அஸாத் ஹிந்த் பௌஜை (இந்திய தேசிய இராணுவம்) திருத்தியமைப்பதில் நான் எனது கவனத்தைச் செலுத்தினேன். இதே நோக்கமாகத்தான் நமது இராணுவத்தின் தலைமைப் பதவியை நான் ஏற்றுக்கொண்டேன். அன்றையிலிருந்து நமது இராணுவத்தில் அநேக மாற்றங்கள் ஏற்கனவே செய்யப்பட்டுவிட்டன; இனிமேலும் அநேக புது மாற்றங்களும் செய்யப்படும். இப்புதிய மாற்றங்களைத் தொடர்ந்தாற்

போல் நமது இராணுவத்தின் உற்சாகம் அதிகரிப்பதுடன் பல மடைந்துமிருக்கிறது. ஷோனனிலிருந்து ஏதாவதொரு படை வடக்கு நோக்கி அனுப்பப்படும்பொழுது நமது இராணுவத்தினர்களின் முகத்தில் காணப்படும் சந்தோஷமும், உற்சாகமுமே இதற்கோர் உதாரணமாகும். அஸாத் ஹிந்த்பௌஜ்வீரர்கள் ஒவ்வொருவரும் 'டில்லிசெல்வோம்' என்ற சுலோகத்தையே உச்சரித்துக் கொண்டிருக்கின்றாரென்பதை நான் சந்தோஷத்துடன் உங்களுக்குக் கூறுகிறேன். இந்தியாவின் எல்லைக்கு மாற்றப்படும் நன்னாளையே நம் இராணுவம் பேராவலுடன் எதிர்பார்த்துக்கொண்டிருக்கிறதெனக் கூறப் புகுவோமாயின் அது மிகைப்படுத்திக் கூறுவதாகாது. தற்சமயமிருந்து வரும் இராணுவத்திற்கு ஆத்மீக, இயந்திரப் பயிற்சி அளித்து, அதை செலுத்துவதற்குத் தயார் செய்து வருவதுடன் இராணுவத்தை விஸ்தரிக்கும் வேலையும் நடைபெற்று வருகிறது. இராணுவத்தில் புதிதாகச் சேர்ந்துள்ளவர்களின் உற்சாகமும் நாம் எதிர்பார்த்த அளவிற்கு இருந்து வருகிறதென்பதை நான் பெரும் மகிழ்ச்சியுடனும், பெருமையுடனும் உங்களுக்கு அறிவிக்கின்றேன். மலாயா முழுவதும் நமது பயிற்சி முகாம்கள் நிறைந்திருந்தபோதிலும் ஏராளமான புது வாலண்டியர்களுக்கு நம்மால் பயிற்சி யளிக்கக்கூடிய நிலைமையில் நாம் இல்லை யென்றே புதிதாகச் சேர முன்வரும் வாலண்டியர்களின் எண்ணிக்கையைப்பற்றி நான் உங்களுக்குக் கூறவிரும்புகிறேன். ஆனால் வாலண்டியராக முன் வரும் ஒவ்வொருவரின் தேவையும் இனிமேல் உடனுக்குடன் கவனிப்பதற்கான ஏற்பாடுகள் செய்யப்படுமென நாம் நம்புகிறோம். இதை மனதில் கொண்டுதான் கிழக்காசியாவின் இதர இடங்களிலும்-உதாரணமாக தாய்லந்து, பர்மா-பயிற்சி முகாம்கள் திறக்கப்பட்டு வருகின்றன. எல்லாவிடங்களிலும் நம் யுவர்கள் மட்டும் வாலண்டியர்களாகச் சேர முன்வரவில்லை. எந்தவித தேச சேவையும் செய்யத் தயாரென நம் இளம் மாதர்களும் உற்சாகத்துடன் முன்வந்துகொண்டிருக்கிறார்கள். ஆகையால், ஜான்ஸி ராணி ரெஜிமெண்டை நாம் ஆரம்பிக்க வேண்டிய தவசியமாயிற்று. இப்படையில் நம் சகோதரிகளுக்கு இராணுவ பயிற்சியும், செஞ்சிலுவைப் பயிற்சியும் அளிக்கப்படும். ஜான்ஸி ராணி ரெஜிமெண்டிற்குப் பயிற்சி அளிக்க மத்திய பயிற்சி முகாமொன்றும் இம்மாதம் 22-ம் திறந்து வைக்கப்படும்.







நேதாஜீ போஸ்

இந்திய தேசிய இராணுவத்தின்
பிரதம சேனைபதி

'சர்வாம்சப் படை திரட்டல்' திட்டத்திற்கிணங்க சுதந்திர இயக்கத்திற்கு வேண்டிய பணம் திரட்டும் முயற்சியும், நம் இராணுவத்திற்கவசியமான சப்ளைப் பொருட்களை வாங்குவதும், சேகரிப்பதும் மும்முரமாக நடைபெறுகின்றன. மொத்தத்தில் ஜனங்கள் காட்டிய உற்சாகம் குதூகலத்தை அளித்துள்ளது. மத்திய, எளிய வகுப்புகளைச் சார்ந்த மக்களிடையே காணும் தியாக உணர்ச்சி பெருமிதமென்பதுடன் சுதந்திரம் விரும்பும் இந்தியர் ஒவ்வொருவருக்கும் அது பெருமையும் திருப்தியும் அளித்துள்ளது. செல்வந்தர்களும் சிறிது சிறிதாக முன்வந்து கொண்டிருக்கிறார்கள். தேசீய சேவையிலும், தியாகத்திலும் இவர்களும் சமூகத்தின் இதரர்களுக்குக் கொஞ்சங் கூடப் பின் வாங்க மாட்டார்களென்று நம்புகிறேன். கடந்த ஜூலை மாதத்திலிருந்து இந்திய சமூகத்தினிடம் விரிவான முறையில் பிரசாரம் நடைபெற்று வந்திருப்பதுடன், சென்ற காலங்களில் அலக்ஷ்யமாகவிருந்த நம் சமூகத்தின் ஓர் சில பகுதியினரிடமும் நாம் கவனஞ் செலுத்தி வந்தோம். இவ்வகையிலும் நாம் போதிய அபிவிருத்தியடைந்திருப்பதை நான் உங்களுக்கு மகிழ்ச்சியுடன் தெரிவித்துக்கொள்கிறேன். இந்திய சுதந்திரத்திற்கான வகையில் எல்லாவித உதவியும் செய்ய கிழக்காசிய இந்திய சமுதாயத்தினரிடையே ஒருவிதப் பேராவல் இன்று நிலைபெற்று வருகிறது. இவ்வழியில் அதிகப்படியான நடவடிக்கைகளை அவர்கள் ஆவலுடன் எதிர்பார்த்து வருகின்றனர். மக்கள் படும் கஷ்ட நஷ்டங்கள் அதிகமாகியே வந்திருந்த போதிலும் கடந்தசில மாதங்களாகவே இந்தியாவினுள்ளிருந்து வரும் நிலைமையும் நமக்குச் சாதகமாகவே அபிவிருத்தியடைந்து வருகிறது. உயர்தர உத்தியோகஸ்தர்கள் சிலர் சிற்சில சமயங்களில் சமாதானத்தைப்பற்றிப் பிரஸ்தாபித்த போதிலும் பிரிட்டிஷ் அதிகாரிகளின் அரசியல் கொள்கை எப்பொழும் போல்தானிருந்துவருகிறது. பிரசித்தி பெற்ற இந்திய தேசிய வாதிகளனைவரும் ஏராளமான சேவையாளர்களுடனும், வீரர்களுடனும் சிறைச்சாலையில் அடைப்பட்டுக் கிடக்கின்றனர். இந்திய மக்களைப் பிரிட்டன் அகௌரவமானதொரு சமாதானம் செய்து கொள்ளச் செய்வதற்கான வீண் முயற்சிகள் யாவும் செய்யப்படலாம். இதைத் தவிர உள்நாட்டு நிலைமையில் வேறெவ்வித மாற்றமும் ஏற்படாது. இந்தியாவிலிருந்து வரும் அரசியல் கொந்தளிப்பை இந்தியாவின் பல பாகங்களிலும்—முக்கியமாக வங்காளத்திலும்—காணப்படும் பஞ்சநிலைமை

அதிகரிக்கச் செய்துள்ளது. இந்தியாவின் உணவுப் பொருட்களையும், இதர மூலப்பொருட்களையும் பிரிட்டன் தனது போருக்காகச் சென்ற நான்கு ஆண்டுகளாகக் கொள்ளையிட்டு வந்ததே இப்பஞ்சத்திற்கடிப்படையான காரணமென்பதற்குக் கொஞ்சங்கூட சந்தேகங் கிடையாது. நமது சங்கத்தின் சார்பில் நான் முதல் தடவையாக ஒரு லக்ஷம் டன் அரிசி, வறுமையால் வாடும் நம் மக்களுக்கு அளிப்பதாகக் கூறினது உங்களுக்கு ஞாபகமிருக்கலாம். இந்தியாவிலுள்ள பிரிட்டிஷ் அதிகாரிகள் இதை ஒப்புக்கொள்ளாதது மட்டுமல்ல; இதற்கு மறுமொழியாக நாம் ஏளனஞ் செய்யப்பட்டோம். ஆனால் கல்கத்தா நகர சபை போன்ற பொது ஸ்தாபனங்கள் ஜனாதிபதி ரூஸ்வெல்டிற்கும், பிரிட்டிஷ் பிரதம மந்திரி சர்ச்சிலுக்கும் வறுமை நோய்க்குட்பட்டு மரிக்கும் லக்ஷக்கணக்கான மக்களுக்கு உணவுப்பொருள் அனுப்பவேண்டுமென விடுத்த வேண்டுகோள்கள் யாவும் செவிடன் காதில் ஊதிய சங்குபோலாயின. புரட்சியை வளர்ப்பது பட்டினிநோய் என்பதே நாம் மனம் வெடிக்கும் இந்நிலைமையிலிருந்து கற்றபாடமாகும்.

அச்சு-எதிர்ப்பு நாடுகள் வட ஆப்ரிக்காவிலும், இத்தாலியிலும் சில அற்ப வெற்றிகளடைவதற்கு முன்னர் உலக நிலைமை நமக்கு எவ்வளவு சாதகமாகவிருந்ததோ அதேபோன்றுதான் இன்றுமிருந்துவருகிறதென்பதை நான் உங்களுக்குக் கூற மகிழ்ச்சியடைகிறேன். தாய்நாட்டிலுள்ள நம் சகோதரர்களும் இதையுணர்ந்திருக்கின்றனர். ஆகையினால் வட ஆப்ரிக்காவிலும் இத்தாலியிலும் சமீபத்தில் நடைபெற்ற நிகழ்ச்சிகளின் விளைவு இந்தியாவிலுள்ள பிரிட்டிஷ் எதிர்ப்பு உணர்ச்சியை வலுவடையச் செய்திருப்பதுடன் பிரிட்டிஷ் நுகத்தடியினின்றும் விடுபடுவதென்ற மக்களின் தீர்மானத்தையும் உறுதியடையச் செய்திருக்கிறது. உலகத்தில் எத்தகைய மாறுதல்கள் ஏற்பட்டபோதிலும் கிழக்காசியாவிலுள்ள இந்திய சுதந்திர சங்கம், இந்திய தேசிய இராணுவம் சம்பந்தப்பட்டமட்டில் போரிட்டு வெற்றிபெறுவதென்ற உறுதியானது நாள் செல்லச்செல்ல வலுவடைந்து வருகிறது. மலாயா, தாய்லந்து, பர்மா, இந்தோ சீனா ஆகிய இடங்களுக்கு நான் கடந்த ஜூலை மாதத்திலிருந்து சுற்றுப்பிரயாணஞ் செய்திருப்பதைப்பற்றி நீங்கள் ஒரு வேளை அறிந்திருக்கலாம். நான் மேற்கூறிய இடங்களில் எங்கெல்லாம் எனது தாய்

நாட்டு அன்பர்களைச் சந்தித்தேனே அங்குள்ளவர்களிடையே தோன்றின வைராக்கிய மனோபாவமானது எனக்கு உற்சாக மூட்டக்கூடியதாய் மட்டுமல்லாது எனது நம்பிக்கை மனோபாவத்திற்கும் சர்வானுகூலத்திற்கும் பெரும் பக்க உதவியாயுமிருந்தது.

தாய்லந்திற்கும், பர்மாவிற்கும் விஜயஞ்செய்திருந்தபோது நான் தாய்லந்தின் பிரதம மந்திரியுடனும், இன்னும் இதர தாய் மந்திரிகளுடனும், பர்மியப் பிரதம மந்திரி அதிபதி டாக்டர் பாமா, இன்னும் இதர பர்மிய மந்திரிகளுடனும் பிரத்தியேக முறையில் சந்தித்துப் பேசும் பாக்கியத்தைப் பெற்றது எனது அதிர்ஷ்டமேயாகும். இவ்விரண்டு அரசாங்கங்களிடமிருந்து நான் நமது போராட்டத்திற்கான அனுதாபத்தையும் நல்லெண்ணத்தையும் மட்டுமின்றி ஒவ்வொரு துறையிலும் அத்தியாவசியமான உதவியின் வாக்குறுதியும் பெற்றிருக்கிறேன். நடக்கவிருக்கும் போராட்டத்திற்கும், போருக்குப் பின்னருள்ள புனருத்தாரண வேலைகளுக்குரிய திட்டங்களையும், தயாரிப்பு நடவடிக்கைகளையும் நாம் செய்து கொண்டு வருகிறோமென்பதை உங்களுக்குத் தெரிவிக்க விருபுகிறேன். பிரிட்டிஷ்-அமெரிக்கர்களும், அவர்களுடைய சகாக்களும் நமது நாட்டிலிருந்து துரத்தப்பட்ட பின்னர் நாம் நமது பூமியில் ஏற்பட்டிருக்கும் நிலைமை என்னவாயிருக்குமென்பதை முன்கூட்டியே அறிந்துகொள்ளக்கூடும். ஆகவேதான் நமது தலைமைக்காரியாலயத்தில் புனர் நிர்மாண இலாகா ஒன்றை நாம் ஏற்படுத்தியுள்ளோம். இவ்விலாகாவில் யுத்தத்திற்குப் பின்னருள்ள புனருத்தாரணப் பிரச்னைகள்பற்றி கலந்தாலோசிக்கப் படுகின்றன. இந்தியாவினுள் செய்யவிருக்கும் புனர் நிர்மாண வேலைகளுக்கான பயிற்சிகள் இராணுவ நடவடிக்கைகளின் அபிவிருத்தியையொட்டி மக்களுக்கு ஏககாலத்தில் அளிக்கப்பட்டு வருகின்றன. சுருங்கக்கூறுமிடத்து வரவிருக்கும் போராட்டம் இனிமேல் நாம் எடுத்துக்கொள்ளவேண்டிய மகத்தான காரியம் ஆகியவைகளுக்குத் தேவையான ஒவ்வொரு நடவடிக்கையையும் நாம் தயார்செய்து கொண்டேயிருக்கிறோம். எந்தத் துறைமூலம் பார்த்தாலும் நமது போராட்டத்தின் அடுத்த கட்டம் இப்பொழுது சமீபித்துவிட்டதென்றே சொல்லவேண்டும். நாம் இச்சமயம் அரசியல் இரா

ணுவத் தன்மையிலான நடவடிக்கைகளை எடுத்துக் கொள்ள வேண்டும்.

இராணுவ நடவடிக்கைகள் சம்பந்தப்பட்ட மட்டில் கிழக்காசியாவிலுள்ள இந்தியர்கள், அதிலும் குறிப்பாக அஸாத் ஹிந்த் பௌஜ் (இந்திய தேசீய இராணுவ) வீரர்கள், இந்திய எல்லைப்புறத்தைக் கடந்து நமது இறுதி விடுதலைப் போரை நடத்தும் நன்னாளை ஆவலுடன் எதிர்பார்த்த வண்ணமிருக்கின்றனர். அந்நடவடிக்கைகளை எடுத்துக் கொள்வதற்கு முன்னர் நாம் ஒரு சில அரசியல் திட்டங்களை வகுத்தாக வேண்டும். உதாரணமாக அஸாத் ஹிந்த் தற்காலீக அரசாங்கத்தை (சுதந்திர இந்திய தற்காலீக அரசாங்கம்) ஸ்தாபித்து அவ்வரசாங்கத்தின் தலைமையில் நாம் நமது போராட்டத்தைத் துவங்க வேண்டும். இந்நேரத்தில் இம்மாதிரியான அரசாங்கம் ஸ்தாபிக்கப் படுவதானது உலகமெங்கும் வதியும் இந்தியர்களிடையே ஒருவித உத்வேகத்தையும், விசேஷப் பலனையும் அளிப்பதுடன் தாங்கள் நடத்தவிருக்கும் போராட்டத்தில் அவர்களுக்கு மகத்தான சக்தியையும் வீராவேசத்தையும் கொடுக்கும். உண்மையில், அஸாத் ஹிந்த் தற்காலீக அரசாங்க ஸ்தாபித தினத்தை கிழக்காசியாவிலுள்ள இந்திய மகாஜனங்கள் அதிக ஆவலுடன் எதிர்பாத்துக் கொண்டிருக்கின்றனர். இந்திய சுதந்திர சங்கம் கிழக்காசிய இந்தியர்களின் ஒரே பிரதிநிதி சபையாகவும், இந்திய சமூகத்தினரின் முழுநம்பிக்கையைப் பெற்றும் இருக்கிறபடியால், அது அம்மாதிரியான ஒரு அரசாங்கத்தை ஸ்தாபிக்கத் தகுதி வாய்ந்ததாயிருக்கிறது. இந்திய சுதந்திரச்சங்க அமைப்பின்கீழ் எனக்கு அதிகார மளிக்கப்பட்டிருக்கிறபடியால் அஸாத் ஹிந்த் தற்காலீக அரசாங்கத்தை ஸ்தாபிக்கும் வேலையானது எனது கடமையாகும். இது மாதிரியான அரசாங்கம் ஒன்று இந்தியாவினுள் ஸ்தாபிக்கப்பட்டிருந்து, அவ்வரசாங்கம் தனது இறுதி விடுதலைப் போராட்டத்தை ஆரம்பிக்குமாகில் அது ஒரு மகத்தான விஷயமாயிருந்திருக்கும். இந்தியாவினுள் எவ்வளவோ மாற்றங்கள் ஏற்பட்டிருப்பதாலும், நமது மாபெருந் தலைவர்களெல்லாம் காராக்கிருகத்தில் அடைபட்டுக் கிடப்பதாலும் இந்தியாவின் உட்பாகத்தில் ஒரு தற்காலீக அரசாங்கத்தை ஸ்தாபிப்பதென்று எதிர்பார்ப்பது முடியாத காரியமேயாகும். அத்துடன் நமது தாய்நாட்டினுள் இந்தியாவின் இறுதி விடு

தலைப் போர் ஏற்படுத்துவதையோ அல்லது ஆரம்பிப்பதையோ பற்றி எதிர்பார்த்து நிற்பதும் பகற்கனவேயாகும். இந்தப் புனித கைங்கரியத்தை எடுத்து நடத்துவது கிழக்காசிய இந்தியர்களால்தான் முடியும். ஆனால் இந்தியாவின் எல்லைப்புறங்களிலிருந்துக்கொண்டு அரசியல், இராணுவ ரீதியான ஆரம்ப நடவடிக்கைகள் எடுத்துக்கொள்ளப்பட்ட போதிலுங்கூட வெளிநாட்டில் நடைப்பெற்றுவரும் சுதந்திர இயக்கமானது, தாய் நாட்டு இயக்கத்தின் நெருங்கிய சம்பந்தத்துடனேயே வேலை செய்துகொண்டு வருகிறதென்பது இன்று சகலருக்குந் தெரியும் உண்மையேயாகும். வெளியிலிருந்து நாம் செய்து கொண்டிருக்கும் ஒவ்வொரு காரியத்திற்கும் இந்தியாவிலுள்ள நம் மக்களிடமிருந்தும், பிரிட்டனின் கீழுள்ள இந்திய இராணுவத்தினர் பெரும்பாலோரிடமிருந்தும் மகத்தான ஆதரவு கிடைத்துக் கொண்டுதானிருக்கிறது. இந்தியாவில் வேலை செய்துவரும் தேசபக்தர்களுக்கும், வெளி நாடுகளிலிருந்துகொண்டு தாய்நாட்டிற்காகச் சேவை செய்து வரும் இந்திய தேசபக்தர்களுக்குமிடையே நிரந்தரமான தொடர்பு இருந்துகொண்டிருப்பதும் இன்று சகலருக்கும் வெட்டவெளிச்சமாக அறியக்கிடக்கின்றது. நம்முடன் தொடர்பு கொண்டிருக்கும் ஏஜண்டுகளிற் சிலரை பிரிட்டிஷ் அதிகாரிகள் அடிக்கடி கைது செய்தும், துன்புறுத்தியும், கொன்றும் வருகின்றனர். ஆனால் பிரிட்டிஷாரின் இந் நடவடிக்கைகளால் நமக்கிருக்கும் தொடர்பிற்கு எந்த வழியிலும் பங்கம் ஏற்பட்டதே கிடையாது. இத்தியாதி உண்மைகளைக் காணுமிடத்து, நாம் நமது இராணுவத்துடன் இந்திய எல்லையைத் தாண்டி நமது தேசீயக்கொடியைப் பாரத புண்ணிய பூமியில் பறக்கவிட்டதும், நாட்டிலுள் உண்மையான புரட்சி இந்தியாவிலுள்ள பிரிட்டிஷ் ஆட்சியின் முடிவை ஏற்படுத்திவிடும். புரட்சி மிக உக்கிரத்துடன் நடைபெறும் என்பதில் நமக்கு எள்ளளவும் சந்தேகமில்லை.

நண்பர்களே! இப்பொழுது நாம் செய்துக்கொண்டிருக்கும் காரியங்கள் யாவும் இறுதிப்போருக்கான தயாரிப்பு வேலைகளைத் தவிர வேறொன்றுமில்லை. நாம் இந்திய எல்லைப் புறத்தைத் தாண்டியவுடன்தான் நமது போராட்டம் ஆரம்பமாகும். அதன்பின் சரித்திரப்பிரசித்தி பெற்ற நமது "டில்லி மார்ச்" தொடங்கி, பிரிட்டிஷாரின் இறுதி நபர் துரத்தியடிக்கப்படும்

வரையோ அல்லது சிறையில்தள்ளப்படும் வரையோ நடைபெறும். அத்துடன் இந்தியாவின் தேசியக்கொடி வைஸ்ராய் மாளிகைமீது பறக்கவிடப்பட்டு, அஸாத் ஹிந்த் பௌஜ் தன்னுடையவெற்றி அணிவகுப்பை இந்தியாவின் தலைநகரிலுள்ள பழைய செங்கோட்டையினுள் நடத்தும்வரை இந்த டில்லி மார்ச் நடைபெறும்.

நண்பர்களே! அஸாத் ஹிந்த் தற்காலீக அரசாங்கத்தின் அமைப்பைப்பற்றிய பிரகடனம் இன்றைய பிற்பகல் மகாநாட்டில் வெளியிடப்படும்.

ஜேய் ஹிந்த்!

## சுதந்திர இந்திய சர்க்கார் பிரகடனம்

இந்திய மகா ஜனங்கள் 1757-ல் வங்காளத்தில் பிரிட்டிஷாரின் கையில் முதன் முதலாகப் படுதோல்வியுற்றபின்னர், இழந்த விடுதலையை மீண்டும்பெற நூறு வருடகாலமாக ஓயாது, ஒழியாது கடும்போர் நிகழ்த்திவந்தனர். அக்காலத்தில் தேசத்தின் பெயரால் நம் மக்கள் செய்த வீரச்செயல்களும், தியாகமும் கேட்போரை மயிர் சிலிர்க்கச் செய்யும். தங்களின் ஒப்பற்ற இராணுவ சாகசங்களாலும், ஈடில்லா வீரத்தாலும் ஒப்பாருமிக்காருமற்று விளங்கியவருள் ஸுராஜ் உத்தவுலா, ஹைதர் அலி, திப்பு சுல்தான், வங்காளத்தைச் சார்ந்த மோகன்லால், தக்ஷிணத்தைச் சார்ந்த வேலுத்தம்பி, அப்பா சாகிப், பான்ஸ்லே, மராட்டிய சிங்கமான பேஷ்வா பாஜீ ராவ், அயோத்தி பீகம் முதலியவர்களின் பெயர்கள் இந்திய சரித்திரத்திலேயே சாகாவரம்பெற்ற சிரஞ்சீவிகளாக விளங்குவதுடன், பாரத நாட்டின் வீரத்திற்கே ஒரு கலங்கரை விளக்கம்போன்று பிரகாசிக்கின்றன. ஜான்ஸிராணியான வீராங்கனை லக்ஷ்மி பாய், அஞ்சா நெஞ்சம் படைத்த தாந்தியா தோப்பி, மகாராஜா கன்வார் சிங், வீராதி வீரனை நானா சாகிப் முதலானோரின் பெயர்கள் அச்சரித்திரத்திலேயே பொன்னெழுத்துக்களால் பொறிக்கப்பெறும் அந்தஸ்துடையவை என்பதை எவரே மறுக்கவல்லார். நம்மைப் பிடித்த துரதிர்ஷ்டவசமாக நமது மூதாதையர், பிரிட்டிஷார் நமது நாட்டிற்கு எவ்வாறு பிற்காலத்தில் அஷ்டமத்துச் சனியனாக விளங்கப் போகின்றார்கள் என்பதை உணராதவராய் ஏகோபித்துப் பிரிட்டிஷ் எதிரிகளை நாட்டின் எல்லையினின்றும் விரட்டும்

எத்தனங்களைக் கையாளவில்லை. காலஞ் செல்லச்செல்ல பிரிட்டிஷாரின் மனோபாவமும், உள்ளக்கிடக்கையும் பட்டவர்த்தனமாகத் தெரிந்த காலத்தில், பாரதநாட்டின் எல்லையினின்றும் மாற்றாரை விரட்ட 1857-ல் பகதூர்ஷாவின் தலைமையில், தேசமக்கள் போர்க்கோலம்பூண்டு பொங்கியெழுந்தனர். யுத்த ஆரம்ப காலத்தில் அதிசயிக்கத் தக்கவண்ணம் வெற்றிகளை நமது போர் வீரர்கள் அடைந்தபோதிலும், காலச்சக்கரத்தின் சூழ்ச்சியாலும், தகுந்த தலைவரில்லாக் குறையாலும் நமது தேசிய சைனியம் க்ஷீணித்து, நாளடைவில் எதிரிகளிடம் அடிபணியவேண்டியதாயிற்று. விடுதலை யுத்தத்தின்போக்கு எவ்வாறாகவிருந்தபோதிலும் இன்றளவும் வெஞ்சமரில் பகைவரும் அதிசயிக்கத்தக்கவண்ணம் நாட்டிற்காக ஆருயிர் துறந்த வீர ஜான்ஸிராணி லக்ஷ்மிபாயும், சாணக்கியத்திற் சிறந்த தாந்தியா தோப்பியும், நானாசாகிபும் இந்திய அரசியல் சரித்திரவானில் துருவ நட்சத்திரம் போன்று பிரகாசித்து வருகின்றனர் என்பது கண்கூடு. அவர்களின் இணையில்லா தியாகமும், உயிரினைத் துரும்பென மதித்து அன்னை வெம்பணியில் ஈடுபட்டு ஆவிநீத்து வீர சுவர்க்கம் அடைந்தமையும் உலகுள்ளளவும் அழியாது என்பது திண்ணம்.

1857-ம் ஆண்டிற்குப் பின்னர், இந்திய மக்கள் பலவந்தமாக நிராயுதபாணிகளாக ஆக்கப்பெற்றதுடன் பிரிட்டிஷாரின் கொடுங்கோன்மைக்கும், மிருக பலத்திற்கும் ஆளாகி அசக்தர்களாக வறிதே கிடந்தனர். நம் மக்கள் உணர்ச்சி இழந்தனர். தாம் வாழும் நாடு தமதென்பதை மறந்தனர். 1885-ம் ஆண்டில் இந்திய தேசிய காங்கிரஸ் மகாசபை தோன்றிய காலத்தில் நம் நாட்டிடையே புத்துயிரும், நம் மக்களின் மனதில் புத்துணர்ச்சியும் தலைதூக்கித் தாண்டவமாட ஆரம்பித்தன. அக்காலந்தொட்டு சென்ற உலக மகா யுத்தத்தின் இறுதி காலம் வரையிலும் இழந்த சுதந்திரத்தினை மீண்டும்பெற நம் மக்கள் பல வகையிலும் பகீரதப் பிரயத்தனம் செய்யலாயினர். அரசியல் புரட்சியும், பிரிட்டிஷ் துவேஷப் பிரசாரமும், அந்நாட்டு சாமான்களின் பகிஷ்காரமும், கடைசியாக ஆயுதங்கள் தாங்கிய அரசியல் குழப்பமும் நமது நாட்டிடையே நிலவலாயின. நமது சலியா முயற்சியினால் வெற்றி கிடையாமை கண்டு நம் மக்கள் ஏங்கி நின்றனர். ஊக்கமும், ஆக்கமும் குறைந்து நமது பாரத வாசிகள் விடுதலை ஒளி காணக்குறைவால் வாடி வதங்கிநின்ற

காலையில், ஆண்டவன் அருளால் கோடைகாலத்து மழைபோல் 1920-ல் இந்திய அரசியல் வானில் ஒத்துழையாமை, சாத்வீகச் சட்டமறுப்பு என்னும் நவீன ஆயுதங்களுடன் மகாத்மா காந்தி அடிகள் தோன்றினர். அக்காலந்தொட்டு 20 ஆண்டுகளாக தேசிய இயக்கம் புது உருப்பெற்று, நாடெங்கும் தணியா சுதந்திர தாகத்தினைத் தோற்றுவிக்கலாயிற்று. விடுதலை, சுதந்திரம் என்னும் தாரக மந்திரத்தைப் பாரத நாட்டிலுள்ள குக்கிராம வாசியும், நகரவாசியும் உச்சஸ்தாயியில் கூறத்தலைப்பட்டனர். ஒரே லக்ஷியமும், ஒரே நோக்கமுங்கொண்ட தேசிய காங்கிரஸ் சபை அம்மக்கள் அனைவரையும் ஒருவயப்படுத்தித் தன்னகத்தே உட்கொண்டது. பாரத மக்கள் வீறுகொண்டெழுந்தனர். 1937-லிருந்து 1939 வரை எட்டு மாகாணங்களில் காங்கிரஸ் மந்திரி சபைகள் யாவரும் மெச்சும் வண்ணம் அரசாங்க நிர்வாகப் பொறுப்பேற்று செவ்வனே கடமையாற்றின. இந்தியர்கள் தங்கள் நாட்டின் காரியங்களைத் தாங்களே பொறுப்பேற்று நிர்வகிக்கும் திறமைசாலிகள் என்பதை காங்கிரஸ் மந்திரி சபைகள் ஏனைய மக்கட்கு ஐயந்திரிபற உணர்த்தின. பாரதநாடு விழிப்படைந்து தனது விடுதலைக்காக எப்பணியும் ஆற்றும் வல்லமையுடையதாய் இம்மகாயுத்தத்தின் ஆரம்ப காலத்திற்குச் சிறிது முன்பு விளங்கலாயிற்று. நமது பரம்பரை எதிரிகள் வல்லமை மிக்க ஜெர்மனியாலும், அதன் சகாக்களாலும் ஐரோப்பாவில் பல யுத்த அரங்கங்களில் தோற்கடிக்கப்பெற்று படு நஷ்டங்கட்கு உள்ளாயினர். மீண்டும் கிழக்காசியப் பிரதேசங்களிலும் ஜப்பானின் நிகரிலா இராணுவ வலிமையால் அப்பிராந்தியத்திலிருந்தே அவர்கள் விரட்டப்பெற்றனர். ஆகவே, இயற்கையன்னையின் பேரருளால் இச்சம்பவங்கள் யாவும் நமது விடுதலை இயக்கத்திற்கு ஒரு இணையிலாப் பொற்றருணத்தை அளித்திருக்கின்றன. நமது நாடு விடுதலையடைய நாம் ஆர்ப்பரித்தெழ இதுவே சமயம். அதிர்ஷ்டவசமாக வெளிநாட்டிலுள்ள இந்தியர்களும் ஒரே கட்டுப்பாட்டிற்குட்பட்டு, சுதந்திர வேட்கை கொண்டவர்களாய் இன்று நாட்டின் விடுதலைப்போருக்கு யுத்த சன்னத்தராக விளங்குகின்றனர். தாய்நாட்டில் வதியும் நமது சகோதரர்களின் அபிலாஷையும், நோக்கமும், அவர்களின் விருப்பமும் ஒன்றே. சுதந்திர அன்னையின் ஆலயம் நோக்கிச்செல்ல, தமது சகோதரர்களுடன் அவர்கள் தோள்கொட்டி நிற்கின்றனர். கிழக்காசியாவில் இன்று 30 லக்ஷம் இந்தியர் "பரிபூரண தியாகம்"

என்னும் மின்சாரத்தால் தூண்டப்பெற்று, பாரத நாட்டின் தர்மப்போரில் ஈடுபட தோள்கள் தினவுற்று நிற்கின்றனர். இவர்கட்கு முன்னணியாக "டில்லி செல்லுவோம்" என்னும் வீரகோஷத்துடன் இந்திய சுதந்திர இராணுவம் கச்சைகட்டி முரசொலி செய்து, ஆர்ப்பரித்து நிற்கும் கண்கொள்ளாக்காட்சியைக் காண்கின்றோம்.

தங்களின் ஒழுக்க ஹீனத்தால், மட்டற்ற பேராசையால், பிரிட்டிஷார் ஏழை இந்திய மக்களைப் பலவகையிலும் சுரண்டி ஓட்டாண்டிகளாக்கிவிட்டதின் பயனாக இன்று பரந்த பாரத நாடெங்கும் கொள்ளைநோயும், பஞ்சமும் தலைவிரித்துத் தாண்டவமாடுகின்றன. பசியின் கொடுமையால் மக்கள் வாடி அனுதினமும், நசித்து ஆயிரக்கணக்கில் மடிந்துவருகின்றனர். பிரிட்டிஷ் துராத்மாக்கள் இன்று நமது சகோதரர்களின் ஏகோபித்த வெறுப்பிற்கும், பகைமைக்கும் ஆளாகியிருப்பதை நாம் நிதர்சனமாகக் காண்கிறோம். அவர்கள் ஆட்சியின் வாழ்வும் இன்று ஊசலாடிக்கொண்டிருக்கின்றது. நீதியும், ஒழுங்குமற்ற அக்கொடுங்கோலரசு மடிந்து சாம்பலாக ஒரு சிறு நெருப்புப் பொறியேதேவை. பிரிட்டிஷ் அரசாட்சிக்கு இறுதித் தீ, ஈமத்தீ ஏற்றும் பொறுப்பு-அத்தனிப்பெருங் கடமை-இந்திய சுதந்திர இராணுவத்தைச் சேர்ந்ததாகும். தாய்நாட்டில் வதியும் சகோதரர்களின் வாஞ்சையும், பிரிட்டிஷ் இந்திய சைனியத்தின் தருணோபாயமான உதவியும், பொதுமக்களின் ஆதரவும், வல்லமைமிக்க நேசதேசங்களின் உதவியும் தங்கட்கு நிச்சயமாகவிருக்கும் என்று நமது தேசிய இராணுவத்தினர் நம்புவதால் அவர்கள் அன்னையின் இப்புனித கைங்கரியத்தில் சரித்திரப் பிரசித்தி பெறப்போகும் இவ்விடுதலைப் போரில் நிச்சயமாக வெற்றி தங்களுடையது என்று இறுமாந்து நிற்கின்றனர். அத்துடன் அவர்கள் இம்மகத்தான போரில் முதன் முதலாகத் தங்களின் சொந்த பலத்தையே முற்றிலும் நம்பியிருக்கின்றனர். அடிமைத்தனம் என்னும் இருளில் இதுகாறும் அகப்பட்டுத் தவித்துவந்த நேசபாரதம் நீங்கி, மகாபாரதம் பரிபூரண விடுதலை பெற்று, சுதந்திர ஒளியுடன் தோன்றவிருப்பதால், ஒரு தற்காலிக அரசாங்கத்தை சிருஷ்டித்து, அதன் குடையின்கீழ், கொடியின்கீழ் நின்று இறுதிவிடுதலைப்போரை நடத்தத் துவஜா ரோகணஞ்செய்வது இந்திய மகாஜனங்களின் கடமை

யாகும். ஆனல் இன்றைய நிலைமையில் இந்தியாவின் மாபெருந் தலைவர்கள் யாவரும் சிறையிலடைப்பட்டிருப்பதாலும், நாம் பிறந்த பொன்னுட்டில் மக்கள் நிராயுதபாணிகளாகவிருப்பதாலும், தற்காலிக தேசிய அரசாங்கத்தை ஆங்கு நிறுவுவதோ, அல்லது அதன் பெயரால் ஆயுதந் தாங்கிப் போர் செய்வதோ சாத்தியமன்று. இந்த நிலைமையில் கிழக்காசியாவில் வதியும் தேசாபிமானம் நிறைந்த இந்தியர்களின் கடமை என்னவெனின், வெளிநாட்டு இந்தியரின் ஆதரவும், தாய்நாட்டில் வதியும் சகோதரர்களின் அன்பும், ஆசியுங்கொண்டு, அஸாத் ஹிந்த் தற்காலிக அரசாங்கத்தை (சுதந்திர இந்தியத் தற்காலிக அரசாங்கம்) நிறுவுவதுடன், இந்திய சுதந்திர சங்கத்தின் ஆதரவில் இன்று போர் முரசொலித்து நிற்கும் அஸாத் ஹிந்த் பௌஜுடன் நாட்டின் பரிபூரண விடுதலைக்காக உயிர்போகும்வரை உறுதியுடன் போராடுவதேயாகும். கிழக்காசிய இந்திய சுதந்திர சங்கத்தால் உத்தாரணஞ் செய்யப்பட்ட அஸாத் ஹிந்த் தற்காலிக அரசாங்கம் தனது கருமமுணர்ந்து முழுப்பொறுப்பேற்றுக் கடனுற்றப் புகுகின்றது. எல்லாம்வல்ல முழுமுதற்கண்ணுதல் நமது மருவிலா திவ்விய அன்னையின்விடுதலை இயக்கத்திற்கும், அதன் முழுவெற்றிக்கும் வேண்டுவது வேண்டியவாறு ஈய மன, மொழி, மெய்களால் இறைஞ்சுகின்றனம். தாரணி விளக்காம் எம்மரு நாடு, ஏனைய சுதந்திர நாடுகள் போன்று மூவளமுஞ் செறிந்து பிறநாடுகளின் சார்விலதாகி, அவைகளுடன் சரிநிகர்சமானமாகத் தனது பண்டைப் பெருமையுடன் தலை தூக்கி நிற்கும்வரை, அதனிடை நமது சொந்த துவஜம் கம்பீரமாகப் பறக்கும்வரை போர்புரிவோமென்ற சபதத்தைத் திரிகரண சுத்தியாகச் செய்கிறோம். இந்திய நாட்டின் புண்ணிய பூமியிலிருந்து பிரிட்டிஷாரும், அவர்களின் நேசதேசவாசிகளும் விரட்டி அகற்றப்படும்வரை கடும்போர் நடத்தும் பொறுப்பு தற்காலிக அரசாங்கத்தைச் சார்ந்தாகும். விடுதலையடைந்த இந்தியாவில் தேசிய மக்களின் நம்பிக்கையையும், பொறுப்பையுங் கொண்ட நிரந்தர தேசிய அரசாங்கத்தை நிர்மாணித்து அதன் கையில் தேசப் பொறுப்பை நல்குவதும் தற்காலிக அரசாங்கத்தின் மற்றையப் பொறுப்பாகும். பிரிட்டிஷார் இந்திய எல்லையிலிருந்து விரட்டப்பெற்று, இந்திய மக்களால் இந்திய மக்களின் நன்மைக்கான தேசிய அரசாங்கம் தோன்றி நிலவும்வரையும் இந்திய மகாஜனங்களின் பெய

ரால் தேசிய காரியங்கள் யாவும் தற்காலிக அரசாங்கத்தால் நிர்வகிக்கப்பட்டு நடைபெற்றுவரும். ஒவ்வொரு இந்திய மகனும், மகளும் இயற்கை தேசபக்தியால் தூண்டப்பெற்று தனது கடமையை இயற்கையாகச் செய்ய முன்வரவேண்டுமென்று தற்காலிக அரசாங்கம் எதிர்பார்த்து அறைகூவி யழைக்கின்றது. களங்கமில்லாத மத சுதந்திரமும், சரிசமானமான பிரஜா உரிமைகளும் இந்திய நாட்டு மக்கள் யாவருக்கும் நேரியமுறையில் வழங்கப்பெறுமென இத்தற்காலிக அரசாங்கம் உறுதிகூறுகின்றது. ஹிமாலயம் முதல் குமரி வரை வாழும் இந்திய மக்கள் யாவரும் சர்வ சுபீட்சத்துடனும், பொங்கும பொருளாதாரத்துடனும் வாழவேண்டுவதற்கான வகைகள் யாவையும் வகுப்பதே தனது முழுமுதல் லட்சியம் என இத்தற்காலிக அரசாங்கம் உலகிற்கு பறையறிவிக்கின்றது. மீண்டும் எல்லா இந்திய மக்களும் ஓர் குலம், ஓர் இனம் என்ற முறையில் அணுவளவு வித்தியாசமுமின்றி நடத்தப்பெறுவர் என்பதுடன், பிரிட்டிஷாரின் துராக்ருத அரசியல் முறைகளால் நயவஞ்சகமாக சிருஷ்டிக்கப்பெற்ற மக்களின் ஏற்றபேத உணர்ச்சிகளும், உயர்வு தாழ்வு பேதங்களும் நமது புண்ணிய பூமியிலிருந்து மாண்டு மடிவதற்கான வகை கோலவும் இத்தற்காலிக அரசாங்கம் உறுதி கூறுகின்றது.

பேரருட்கடவுள் திருவடியாணை; பிறப்பளித்து எமையெலாம் புரக்கும் தாரணிவிளக்காம் எம்மருநாட்டின் மீதாணை; நம்தாய் நாடு வாழ்க என வீழ்ந்த விழுமியோர் திருப்பெயர்கள் அதன் மிசையாணை; பாரதநாட்டின் வெம்பணியில் ஈடுபட்டு சொல்லரிய அளப்பிலா தியாகங்கள் செய்துள்ள தவராஜகோளரிகளின் மீதாணை; இந்திய மக்களே! இந்திய நாட்டினிற் பிறந்த நீங்கள் நாட்டின் விடுதலைக்காகத் தாயின் மணிக்கொடியின் கீழ் ஒருங்கு கூடுங்கள்; ஆயுதமேந்துங்கள்; அந்நியனை நாட்டினின்றும் விரட்டக் கங்கணங் கட்டிக்கொள்ளுங்கள்; தாய்நாட்டின் விடுதலைக்காக நடைபெறவிருக்கும் இறுதிப்போரில் வெற்றிகிடைக்கும் வரை ஜெய சங்கநாதம் ஒலிக்கும்வரை எவ்விடுக்கண் நேரினும், அங்கு ஆவி மாயினும் சரி, சுதந்தரப்போர் நிகழ்த்த பரிசுத்ததேசபக்தர்களினுடைய ஆவிகளின் பெயரால் உங்களை வரவேற்கின்றனம்—அறைகூவி அழைக்கின்றனம். எழுமின்! எழுமின்!

ஒப்பம்—அஸாத் ஹிந்த் தற்காலிக அரசாங்கத்தின் சார்பாக:-

சுபாஷ் சந்திர போஸ் (அரசாங்கத்தலைவர், பிரதம மந்திரி, யுத்த மந்திரி, அந்நிய நாட்டு மந்திரி); காப்டன் ஸ்ரீமதி லக்ஷ்மி (மாதர் பகுதி மந்திரி); எஸ். ஏ. ஐயர் (பிரசார விளம்பர மந்திரி); லெப்டினண்ட் கர்னல் ஏ. ஸி. சாட்டர்ஜி (பொக்கிஷ மந்திரி); லெப்டினண்ட் கர்னல் அஸீஸ் அஹமது, லெப்டினண்ட் கர்னல் என். எஸ். பகத், லெப்டினண்ட் கர்னல் ஜே. கே. பான்ஸ்லே, லெப்டினண்ட் கர்னல் குல்ஸரா சிங், லெப்டினண்ட் கர்னல் எம். ஸெட். கியானி, லெப்டினண்ட் கர்னல் ஏ. டி. லோகநாதன், லெப்டினண்ட் கர்னல் ஷா நாவாஸ் (ஆயுதந்தாங்கிய படைகளின் பிரதிநிதிகள்); ஏ. எம். ஸஹாய், காரியதரிசி (மந்திரி அந்தஸ்துடன்); ராஷ் பிகாரி போஸ் (பிரதம ஆலோசனையாளர்); கரீம் கனி, தேவநாத் தாஸ், டி. எம். கான், ஏ. எல்லப்பா, ஜே. திவி, ஸர்தார் இஷார் சிங், (ஆலோசனையாளர்கள்); ஏ. என். சர்க்கார் (சட்ட ஆலோசனையாளர்). ஷோனன், அக்டோபர் 21, 1943.



நமது மந்திரி சபை

## மறக்கமுடியாத ஓர் அருங்காட்சி.

கிழக்காசியாவில் வதியும் முப்பது லக்ஷம் இந்தியர்களால் தனக்களிக்கப்பட்டிருக்கும் அதிகாரத்தைக்கொண்டு சுதந்திர இந்

திய தற்காலிக அரசாங்கத்தை நேதாஜீ 21-10-1943-ல் மாலை மணி-4-15-க்கு கூட்டத்தினருக்கும், உலகிற்கும் பிரகடனஞ் செய்தபோது மண்டபம் முழுதும் உணர்ச்சி பிரவாகம் கரை புரண்டோடிற்று. இயல்பான அடக்கத்துடனும் தணிந்த குரலுடனும் நேதாஜீ தனது பெயரை உச்சரித்து தான் பிரதம மந்திரியாகவும், யுத்த மந்திரியாகவும், அயல் நாட்டு விவகார மந்திரியாகவும் நியமிக்கப்பட்டிருப்பதாகக் கூறியபோது மண்டபம் முழுதும் அதிரும்படியான ஆரவாரம் சுருள் சுருளாகக் கிளம்பிக்கொண்டிருந்தது. மண்டபத்தில் திரண்டிருந்தோரனைவரும் தங்கள் தங்கள் ஆசனத்திலிருந்து எழும்பி 'நேதாஜீ ஜிந்தாபாத்' 'சுபாஷ் சந்திர போஸுக்குக்கு ஜே' என்ற கோஷங்களால் வான் முகட்டைத் தொடச்செய்தனர். பின்னர் நேதாஜீ உயரக் குரலெழுப்பி இதர மந்திரிகள், ஆலோசகர்கள் ஆகியவர்களின் பெயரை ஒவ்வொன்றாகப் படித்தார். ஒவ்வொருவரின் பெயர் வெளியிட்டபோதும் சபையினர் பெருத்த குதூகலத்துடன் அதை அங்கீகரித்தனர்.

மந்திரிகளும், ஆலோசகர்களும் மேடைமீதேறி நேதாஜீக்குப் பின்னிருந்த ஆசனங்களில் அமர்ந்தனர். அடுத்தபடியாக ஏற்பட்ட நிகழ்ச்சி இந்தியாவிலோ, கிழக்காசியாவிலோ இதற்குமுன் ஏற்பட்டிராத வகையில் அமைந்தது. இக்காட்சிமிக்க உருக்கமாகவுமிருந்தது. அன்றையக் கூட்டத்திற்கு வந்திருந்தோரது உள்ளக்கமலத்தைவிட்டு இந்த மகத்துவமும், புனிதமும் நிறைந்த காட்சி என்றென்றும் அகலாது. திடீரென நேதாஜீயின் முகபாவம் முற்றிலும் மாறுபட்டது. கம்பீரமும், திடசித்தமும் அவரது வதனத்தில் தவழ்ந்தது. மேடைக்கு வெகு தொலைவிலிருந்த ஆடவர், பெண்டிர் அனைவருங்கூட இம்மாற்றத்தை துல்லியமாக காணமுடிந்தது. ஒவ்வொருவர் நாடி நரம்புகளிலும் அவருக்கேற்பட்ட உணர்ச்சி ஏறியது. அவரவரும் அறியாமலே உணர்ச்சிப்பெருக்கில் மூழ்கினர். திடசித்தங்கொண்டனர். ஆசனங்களில் சிலைபோல் இருந்தனர். மூச்சடைத்த பாவைபோல் விளங்கினர். கண்களை அகலத்திறந்து நரம்பு முறுக்கேறி தலையை நிமிர்த்தி நேதாஜீயைப் பார்த்தவண்ணமேயிருந்தனர். நேதாஜீ அச்சடித்தபதுமைபோல் தனக்கு முன்னுள்ள ஜனங்களை நோக்கி சிங்க ஏறுபோல் பார்த்தனர். பின்னர் ஒரு சிறுதுண்டுக் காகிதத்தை

மேஜைமீதிருந்து எடுத்து அதை அழுத்தந்திருத்தமாகப் படிக்க முற்பட்டார்.

இந்தியாவிற்கு விசுவாசமாகயிருப்பதென்ற தனது பிரதிக்ஞையை (ஹிந்துஸ்தானியில்) நேதாஜீ படிக்கலாயினர். அவர் ஆரம்பித்து சில வார்த்தைகள் கூறினர். "சுபாஷ் சந்திர போஸாகிய நான் ஆண்டவன் சாட்சியாக இந்த தெய்வீகம் பொருந்திய பிரதிக்ஞையை எடுத்துக்கொண்டு" என்ற வார்த்தைகள் பிறந்தன. பின்னர் நெஞ்சடைக்குந் தன்மை ஏற்பட்டது....மேலே...வார்த்தைகள் பிறக்கவில்லை. அவரது உள்ளக்கேணியிலிருந்து பிறந்த வார்த்தைகளாதலால் இதன் புனிதத்தன்மை அவரை நாவெழவொட்டாது செய்தது. இந்த நெருக்கடியான தருணத்தில் தான் எடுத்துக்கொள்ள விருக்குக்கும் பொறுப்பு மகத்தானது என்பதை அவரது அந்தராத்மா கூறியது. சபை எங்கும் ஊசி விழுந்தாலும் சப்திக்கும் மௌனம் தென்பட்டது..........கூட்டத்தினரின் சப்த நாடிநரம்புகளெல்லாம் ஒடுங்கின... தோற்றம்......ஆயிரக்கணக்கான வாய்களில் மௌனம்...ஆயிரக்கணக்கான கண்கள் மேடைமீது நிற்கும் அடலேறு மீது வைத்தகண் வைத்தபடி பதிவாகியிருந்தன...இருதயத்தினூடே ஓர் மானசிகப் பிரார்த்தனை...அடுத்து என்ன நடக்கப்போகிறது ? என்பதே அது......நேதாஜீயின் மனவெழுச்சி குமுறிக்கொண்டிருந்தது. பின்னர் மிகுந்த சிரமத்துடன் தனது பிரதிக்ஞையை தொடர்ந்தார். "இந்தியாவினதும் அதன் 38 கோடியுள்ள என் தாய்நாட்டினரதும் விடுதலைக்காக இப்புனித சுதந்திர யுத்தத்தை எனதுஉடலில் கடைசிமூச்சு இருக்கும்வரையும் தொடர்ந்து நடத்திவருவேன் என பிரமாணமெடுத்துக் கொள்கிறேன்......" உடனே மீண்டும் ஓர் உள்ளக் குமுறல். தாங்கமாட்டாத உணர்ச்சி, உறுதி, வைராக்கியம் ஆகியவைகள் ஒருங்கே சேர்ந்த நிலைமை......நேதாஜீ மீண்டும் தம்மையும் தமது சூழ்வையும் மறந்தார்......தமக்கு முன்னல் கத்தே மண்டபத்திலுள்ள மக்களைமட்டும் அவர் காணவில்லை! இந்தியாவிலுள்ள ஆண், பெண் அடங்கலுமுள்ள 38 கோடி இந்தியர்களை அவர் மனக்கண் முன்னர் நிறுத்தினர்...... தன்னை மதிக்கும், கண்ணியஞ் செய்யும் இந்தியர்களின் பரிதாபகரமான முகங்கள் அவர் முன்னல் தென்பட்டன!......அடிமையிலாழ்ந்து தினசரி மரணவஸ்தையுற்றுவரும் கோர முகங்கள்

அவர் முன்னால் காட்சியளித்தன......இந்திய சிறைகளில் இன்னமும் லட்சக்கணக்கான தோழர்களது உருவங்கள் அவரை உற்று நோக்கின......தாய்நாட்டு பலி பீடத்தில் ஒன்னலர்க்கஞ்சாது உயிரையீந்த பல்லாயிர மக்களது உருவம் அவரை விருடன் பார்த்தன......தமது அருமையுள்ள தாய்நாடு......இந்திய விடுதலையை ஈட்ட தம்மை எதிர்பார்த்துக்கொண்டிருக்கும் லட்சக் கணக்கான உள்ளங்கள்........முதலிய காட்சிகள் அவருக்கு முன்னால் ஏற்பட்டனபோலும்! கல்கத்தா எஸ்பிளனேட் மைதானத்திலோ அல்லது டில்லி சாண்ட்னி சௌக்கிலோ நின்றுகொண்டிருப்பதையொத்த எண்ணம் அவருக்கேற்பட்டது. ஒத்துழையாமை இயக்கம் நடந்துகொண்டிருந்தபோது பிரிட்டிஷ் கை லஞ்சம் வாங்கும் போலீசார் இந்திய மக்களிற் பல்லாயிரக் கணக்காயினோரை சுட்டு வீழ்த்தி, மண்டை உருளச்செய்த காட்சி அவர் முன் ஏற்பட்டதுபோலும்! இதற்கு பழிக்குப்பழி வாங்கவும், இந்தியாவில் தவக்கோலங்கொண்டு சிறைக்கிடங்கில் வாடும் எண்ணற்றோரை விடுவிக்கவும் கொள்ளும் சபதம் என இதைக்கொண்டனர். தமது உடலில் கடைசி மூச்சு உள்ள வரை இக்கைங்கரியத்தை வழுவாது நடத்தவேண்டுமென அவர் கொண்ட உறுதியின் பிரதிபலிப்பே இவைகளெல்லாம்!

ஆண்டவன் முன்னிலையிலும் மனிதர்கள் முன்னிலையிலும் தாம் கொண்ட சபதத்தின் ஒவ்வொரு வார்த்தையையும் அவர் உள்ளப்பூர்வமாக ஏற்றுக்கொண்ட அர்த்தபாவம் அவரது செயலில் மதர்த்து நின்றது......அவரது ஆழ்ந்த வார்த்தைகளில் இக்காட்சி மிளிர்ந்தது......அதனால்தான் அவரது உணர்ச்சி குமுறுதலடைந்தது.......அதனால்தால்தான் அவரது நாத்தடுமாறியது......சில வினாடிகள் அச்சடித்த சித்திரம்போல் நின்றனர்........இது பல மணி நேரம் இப்படியே இருந்துவிடுமோ வென்ற நிலை ஏற்பட்டது......சபையினரின் நாடி ஒடிந்துவிடுந் தன்மையை நிகர்த்திருந்தது......நேதாஜீயின் கண்களில் கண்ணீர் மல்கிற்று......கண்ணீர்க்கடலில் அவரது கண்கள் மிதந்தன......அதை அடக்க அவர் அதிக பிரயாசைப்பட்டார்; அதை நிறுத்தப் பெரிதும் முயன்றார்; ஆனால் உள்ளக்குமுறல் அவர் சக்தியை மீறியது......அப்புயல் அவரை அழுத்திற்று......கூட்டத்தினர் இதைக்கண்டு மலைத்தனர்; கலங்கினர். ஆனால் இது நடந்தது இரண்டொரு விநாடிகளேயாகும்......பின்னர் நேதாஜீ

யின் மனவேதனையைக் கூட்டத்தினர் காண நேர்ந்தது......அவரது நிலையை எல்லோரும் அனுபவித்தனர். அதற்காக இரங்கினர்; ......தாங்களும் அவரைப்போலக் கண்ணீர் மல்கி நிற்பது சரியா......அல்லது அவரை உற்சாகமூட்டி ஆரவாரிப்பதா? என்ற சிந்தனையிலாழ்ந்தனர்......சில நிமிடங்கள் ஆயிரக்கணக்கானவர்கள் உள்ளத்தில் இதைப்பற்றிய சர்ச்சை ஏற்பட்டது... பின்னர் மௌனநிலை மாறியது......புயல் வீசியது......சபை முழுவதும் ஏக ஆரவாரமும், கரக்கம்பமும் ஏற்பட்டன...... சபையினர் தத்தம் ஆசனங்களிலிருந்து எழும்பி தங்கள் மகிழ்ச்சியை பல்வேறு வகையில் தெரிவித்துக்கொண்டனர். தங்கள் அனுதாபத்தைக் காட்டி எத்தகைய இடையூறுமின்றி முன்னேறிச் செல்லலாம் என்ற நம்பிக்கையையும், தைரியத்தையும் அவர்கள் செயல் மூலமாகக் காட்டிக்கொண்டனர்......பிரதிக்ஞையின் எஞ்சிய பாகத்தைப் படிக்க நேதாஜீ முற்பட்டார்......அப்போது மிகுந்த மனவெழுச்சியுடன் நடுக்கமுறும் தொனியில் பின்வரும் வாசகங்களைப் படித்தார்.

"நான் எப்பொழுதும் இந்தியாவின் தொண்டனுகவே இருந்து வருவேன். 38 கோடியுள்ள எனது இந்திய சகோதர சகோதரிகளின் நலனைக் கவனிப்பதே எனது முழுமுதற் கடமையாகவிருக்கும்"......பின்னர் மீண்டும் மௌனமேற்பட்டது. இம்முறை இந்நிறுத்தம் மேலும் அதிக நேரம் பிடிக்குமோவென்ற ஐயப்பாடு சபையிலேற்பட்டது......பிரதிக்ஞை முற்றுப் படித்து முடிக்கப்படுமோ? வென்ற சந்தேகமேற்பட்டது...... சபையினர் இவரது மனவெழுச்சியை அடக்கிக்கொள்ளாதபடி கேட்டுக்கொண்டு பிரதிக்ஞையை செய்து முடிக்கத் தூண்டுவார்களோ என்ற நிலை காணப்பட்டது. இந்நிலையில் நேதாஜீயின் இடது கரம் அவரது ஜேபிற்குச் சென்றது! துல்லிய வெண்மை நிறமுடைய கைக்குட்டையை அவர் எடுத்தார்! முகத்தில் காணப்பட்ட கண்ணீர்த் துளிகளை துடைத்தார்......சபையில் இருந்து மீண்டும் இடியோசையொத்த ஆரவாரம் முகிழ்த்தது... நேதாஜீ நிலைமையை சரிப்படுத்திக்கொண்டார்......எப்படியோ சமாளித்தார்......ஒருவாறு பிரதிக்ஞையை படித்து முடித்தார்! ......அவரது முகத்தில் கொஞ்சமேனும் சுருக்கம், தளர்வு இவைகள் காணப்படவில்லை......மீண்டும் தான் ஆரம்பத்தில் பிரதிக்ஞையைப் படிக்க முற்பட்டபோது எப்படி சிலையாக எழு

போல் நின்றாரோ அதே நிலையில் காட்சியளித்தார்......ஆனால் கடவுளின் அனுகூலத்திற்கிணங்க அவர் தமது பிரதிக்ஞையைப் படித்து முடித்துவிட்டார்......மண்டபம் முழுவதும் ஒரு நீண்ட பெருமூச்சு வந்தது! ஜனங்களின் மத்தியில் காணப்பட்ட கவலைத் தேக்கமும், துடி துடிப்பும், நரம்பொடுக்கமும் யதார்த்தத்திற்கு வந்தது. அப்போதுதான் அப்பாடா! என்ற பெருமூச்சு ஜனங்களுக்கு ஏற்பட்டு தர்மசங்கடமான நிலையிலிருந்த கூட்டத்தினர் மனச்சாந்தியடைந்தனர். இச்சம்பவத்தை எவரும் எளிதில் மறந்துவிடமுடியாது.

## யுத்தப் பிரகடனம்

பிரிட்டன், அமெரிக்கா மீது நாம் செய்துள்ள யுத்தப்பிரகடனம் வெறும் மிரட்டல் நடவடிக்கையல்லவென்றும், நமது சரீரத்தில் ஒரு துளி ரத்தம் இருக்கும்வரையும் நாம் அதை நிறைவேற்றவே உறுதிகொண்டுள்ளோமென்றும் நேதாஜீ சுபாஷ் சந்திர போஸ் 24-10-1943 மாலை ஷோனன் முனிசிபல் மைதானத்தில் நடைபெற்ற பிருமாண்டமான பொதுக்கூட்டத்தில் செய்த பிரசங்கமாவது:—

நண்பர்களே!

தேசிய சுதந்திரமடைந்த பிலிப்பைனுக்கு வாழ்த்துக் கூறும் பொருட்டு அக்டோபர் 17-ந் தேதி நடைபெற்ற பொதுக் கூட்டத்தில் நான் பேசியபொழுது பர்மாவுக்கும், பிலிப்பைனுக்கும் பிறகு இனி இந்தியா அடுத்து விடுதலை பெறவேண்டுமெனக் குறிப்பிட்டேன். இந்தியாவின் விடுதலைக் காலமும் வந்துவிட்டதென நான் உங்களுக்கு இன்று கூறுவதில் பெரும் மகிழ்ச்சி கொள்கிறேன். அஸாத் ஹிந்த் தற்காலிக அரசாங்கம் ஸ்தாபிக்கப் பட்டதுடன் அதை உலகமும் அங்கீகரித்துள்ளது. நமது சுதந்திர இயக்க சரித்திரத்தில் மிக முக்கியமான இம்மாறுபாடு நிகழ்வதற்கு முன்னர் ஏற்பட்ட தொடர்ச்சியான சம்பவங்களை நாம் ஊன்றிக் கவனிப்போமாகில் கடவுளின் கட்டளைக்கிணங்கவே அனைத்தும் நடைபெற்று வந்திருக்கின்றனவென்பதை அறிவோம். கடவுளின் கடாக்ஷம் நமக்கு இருந்து வருகிறது. அஸாத் ஹிந்த் தற்காலிக அரசாங்கம் இன்று ஸ்தாபிக்கப்பட்டு உலகிற்கு அறிவிக்கப்பட்டிருப்பதானது சரியான காலத்தில் காலநிலைக்கொப்பவே நடைபெற்றிருக்கிறது.

ஐரோப்பாவில் தற்சமயம் நடைபெற்றுவரும் போர் ஆரம்பமானதும் நமது ஜென்ம விரோதிகளான பிரிட்டிஷாருக்கு முதன் முதலாவதாக மேற்கில் பலத்த உதைகிடைத்தது. அதனால் அவர்களின் பலங் குன்றியது. அவர்கள் மேற்கில் மட்டுமே உதை வாங்கிக்கொண்டிருந்தால் இந்திய சுதந்திர லக்ஷியத்திற்கு அதனால் யாதொரு நன்மையும் ஏற்பட்டிராது. ஆனால் மகா கிழக்காசியப் போர் கிழக்கில் ஆரம்பித்ததும் நமது விரோதிகள் இன்னும் பலமான அடி வாங்கியதுடன் தோல்வியின் மேல் தோல்வியடைந்து பலம் மிகவும் குன்றப் பெற்றனர். கிழக்கில் அவர்களடைந்த நஷ்டங்களைவிட மிகவும் முக்கியமானதொரு அதிசயமும் நடைபெற்றது. இந்தியாவின் மீட்சிக்குப் புதியதொரு பாதை கிழக்கில் திறக்கப்பட்டதுதான் இவ்வதிசயமாகும். இத்தகையதொரு மார்க்கம் ஏற்படலாமென பிரிட்டிஷார்கள் கனவிலுங்கூடக் கருதவில்லை. இந்தியாவிற்கு பிரிட்டிஷ் இராணுவ நிபுணர்கள் எப்பொழுதும் வடமேற்கு எல்லைப்புறத்திலிருந்தே ஆபத்தை எதிர்பார்த்திருந்தனர். வடகிழக்கு எல்லை வழியாக விடுதலை இராணுவமொன்று இந்தியாவினுள் பிரவேசிக்கும் சந்தர்ப்பம் நிகழலாமென அவர்கள் கொஞ்சங்கூடக் கருதவில்லை. இம்மாதிரியானதொரு நிகழ்ச்சியை அவர்கள் ஒருநாளும் எதிர்பார்க்கவில்லை யாதலால் இத்திசையிலிருந்தும் வரும் தாக்குதலை சமாளிக்கவும் வேண்டிய முஸ்தீபுகளை அவர்கள் செய்யவில்லை. இப்பிரச்னையில் மிகவும் ருசிகரமான விஷயமும் ஒன்றிருக்கிறது. பிரிட்டிஷார்கள் மேற்கில் தோல்விக்கு மேல் தோல்வி அடைந்து இந்தியாவின் வடமேற்கு எல்லைப்புரமாகாணம் வரையும் பின்வாங்குகிறார்களென்று வைத்துக்கொண்டாலுங்கூட அதனாலொன்றும் இந்திய சுதந்திரத்துக்கு நன்மை ஏற்பட்டு விடாது. ஏனெனில் மேற்கு ஆசியாவில் இந்தியர்கள் குடியேறியிருக்கவில்லை. ஆனால் கிழக்காசியாவில் முப்பது லக்ஷம் இந்தியர்களைக் குடியேறச் செய்ததும் விதியின் நியமம்போலும்! கிழக்காசியாவினின்றும் விரோதி விரட்டப்பட்டதுடன் ஆசியர்களின் உதவியும் கிடைக்கும்பொழுது சுதந்திரமடைய உண்மையிலேயே முயற்சி செய்ய இம் முப்பது லக்ஷம் இந்தியர்களிடம் போதிய சாதனங்களிருக்கின்றன.

நான் கிழக்காசியாவிற்கு வந்து இவ்வியக்கத்தின் தலைமைப் பதவியைவகித்ததும் இந்திய சுதந்திர சங்கத்தைத் திருத்திய

மைத்து வலுவடையச் செய்யவேண்டுமென்றும், அஸாத் ஹிந்த் இராணுவத்தை சீர் திருத்தி உறுதியடையச் செய்ய வேண்டுமென்றும் உள்ள ஒரே நோக்கத்தைக் கொண்டிருந்தேன். இவ்வருஷ முடிவிற்குள் புனித பூமியாகிய இந்தியாவினுள் காலடி எடுத்துவைக்க நான் உறுதிகொண்டிருக்கிறேன் என்று ஆகஸ்ட் 15-ந் தேதியன்று பேசியபொழுது கூறினேன். நான் சொல்வதை எப்பொழுதும் செயலில் காண்பிப்பவனுவேன். வெறும் பிரகடனங்களுக்காகவோ அல்லது வீண் பெருமைக்காகவோ நான் ஒன்றும் கூறுபவனல்ல. அன்றையிலிருந்து நமது பிரயத்தனங்கள் யாவும் மெதுவாக ஆனுல் நிதானமாக நிறைவேறி வந்திருக்கின்றன. ஜூலை மாதம் 9-ந் தேதி இதே மைதானத்தில் நடைபெற்ற இராணுவ அணிவகுப்பைப் பற்றி உங்களுக்கு ஞாபகமிருக்கலாம். இன்று காலை நடைபெற்ற இராணுவ அணிவகுப்பில் கலந்துகொண்ட அஸாத் ஹிந்த் பௌஜ் ஜூலை மாதத்தைவிட மிகமிக சொற்பமானதென்பதை நீங்களும் கவனித்திருப்பீர்கள். அஸாத் ஹிந்த் பௌஜைச் சார்ந்த பெரும்பாலான இராணுவத்தினர் ஷோனனினின்று ஏற்கனவே வெளியே சென்று விட்டனரென்றும், அவர்கள் இப்பொழுது இந்தியாவிற்குச் செல்லும் பாதையிலிருந்து வருகிறார்களென்றும் இன்று காலை நான் இராணுவ அணிவகுப்பைப்பார்வையிட்டு நிகழ்த்திய பிரசங்கத்தில் கூறினேன். நமது முஸ்தீபுகளனைத்தும் திருப்திகரமாகவே நிறைவேறி வந்திருக்கின்றன.

இச்சமயத்தில் சுதந்திரத்தைப் பெறுவதற்கான மார்க்கத்தில் நாம் மிகவும் முக்கியமான நடவடிக்கையை கைக்கொள்ள வேண்டியதவசியமாயிற்று. அஸாத் ஹிந்த் பௌஜ் யாருடைய தலைமையில் போரிடுமென்ற கேள்வி எழுவது நியாயமேயாகும். நமது நிலைமையையும் கொஞ்சமேனும் சந்தேகத்திற்கிடமின்றி தெளிவு படுத்துவதற்கும் இதுதான் சரியான சந்தர்ப்பமாகும். அஸாத் ஹிந்த் இராணுவம் யாருடைய தலைமையில் போரிடுமென்பதைப் பற்றியும், எதிரிகள் விரட்டியடிக்கப் பட்டதும் நிர்வாக உரிமையை யார் கைக்கொள்வார்களென்பதைப்பற்றியும் பொதுவாக உலகத்தினருக்கும், குறிப்பாக இந்தியர்களுக்கும் அறிவிக்கப்படவேண்டியது மிகவும் அவசியமாகும். ஆகையினல், சரியான சமயத்தில் அக்டோபர் 21-ந்

தேதி கூடிய கிழக்காசிய இந்தியர்களின் மகாநாட்டில் நாம் அஸாத் ஹிந்த் தற்காலீக அரசாங்கத்தை ஸ்தாபித்தோம்.

இவ்வரசாங்கத்தை அமைப்பதினால் நாம் ஒன்றும் புதுமையாகச் செய்துவிடவில்லை. ஏனெனில் சுதந்திரத்திற்கான கடைசிப் போராட்டம் ஆரம்பிக்கும் முன்னர் ஒரு தற்காலீக அரசாங்கத்தைப் பிரகடனஞ் செய்வது புரட்சியின் ஓர் அம்சமாகும். இவ்வழியைப் பின்பற்றியதற்குப் போதுமான ஆதாரங்கள் சரித்திரத்தில் இடம்பெற்றிருக்கின்றன. ஐரிஷ்காரர்களும், ஸெக் நாட்டவர்களும் நமக்குப்போதிய உதாரணமாக விளங்குகின்றனர். துருக்கிய சுதந்தரப் போரிலுங்கூட முஸ்தாபா கமால் பாக்ஷா அனடோலியாவில் ஒரு சுதந்திர அரசாங்கத்தை ஸ்தாபித்தார்.

ஆஸாத் ஹிந்த் தற்காலீக அரசாங்கம் ஸ்தாபிக்கப்பட்டிருக்கிறதென அக்டோபர் 21-ந் தேதி வெளியிட்ட பிரகடனத்தில் இவ்வரசாங்கத்தின் நோக்கங்களையும், ஜீவிய காலத்தையும், நான் தெளிவாகக் குறிப்பிட்டுள்ளேன். நமது அரசாங்கம் சாதாரண காலங்களில் நிர்வாகத்திற்காக ஸ்தாபிக்கப்படும் அரசாங்கத்தைப் போன்றதல்ல. ஆகையால் நாம் சாதாரண வழிகளைப் பின்பற்றவில்லையென்பதுடன், சாதாரண காலங்களில் ஒரு நாட்டில் நிர்வாகம் நடத்துவதற்கவசியமான இலாகாக்களையும் நாம் திறக்கவில்லை. சுதந்திரப் போரை நடத்துவதென்பதே இவ்வரசாங்கத்தின் முதலாவதும், மிக முக்கியமானதுமான வேலையாகும். ஆகையால் நமது மந்திரிசபை ஒரு யுத்த மந்திரி சபையேயாகும். இரண்டாவதாக, விடுவிக்கப்பட்ட பிரதேசங்களின் நிர்வாகத்தை இடைக்காலத்தில் மட்டும் இவ்வரசாங்கம் நடத்திவரும். கடைசி ஆங்கிலேயன் இந்தியாவினின்று துரத்தப்படும் வரையும், இந்தியா சுதந்திரமடைந்து, சுதந்திர இந்தியாவில் நீதியும், ஒழுங்கும், சமாதானமும் நிலவும் வரையும், இந்தியாவிலுள்ள 38 கோடி இந்தியர்களின் விருப்பத்திற்கிணங்க ஒரு நிரந்தரமான அஸாத் ஹிந்த் அரசாங்கம் ஸ்தாபிக்கப்படும் வரையும் நாம் வேலை செய்து வருவோம். அக்டோபர் 21-ந் தேதியன்று நம்மால் வெளியிடப்பட்ட பிரகடனத்தை வாசிக்குமாறும் நமது தற்காலீக அரசாங்கத்தின் உண்மையான கருத்தையுணர்ந்துகொள்ளுமாறும் நான் கிழக்காசியாவில் வசிக்கும் ஒவ்வொரு இந்தியரையும் கேட்டுக்கொள்கிறேன்.

அரசாங்கத்தின் அங்கத்தினர்களாக ஒரு சிலர் மட்டும் தேர்ந்தெடுக்கப்பட்டிருப்பதினால் பெரும்பான்மையான இதரர்களின் பொறுப்பும், கடமையுந் தீர்ந்துவிட்டதெனக் கருதக் கூடாதென நான் இச்சந்தர்ப்பத்தில் வலியுறுத்திக்கூற விரும்புகிறேன். நிர்வாக சௌகரியத்திற்காகவும், அவசியத்திற்கிணங்கவுமே ஒரு சிலர் அரசாங்க அங்கத்தினர்களாக நியமிக்கப்பட்டிருக்கின்றனர். ஆனால் அரசாங்கத்தின் பொறுப்பு கிழக்காசிய இந்தியர்களனைவரையுமே சமமாகச் சார்ந்திருக்கிறது. புது அரசாங்க இயந்திரத்தில் வேலைசெய்யத் தெரிந்தெடுக்கப்பட்டவர்கள் எந்த விதமான உயர்வான பதவியையும் வகித்துவிடவில்லை. உண்மையில் அவர்கள் கூடுதலான பொறுப்பையும், பாரத்தையுமே மேற்கொண்டிருக்கிறார்கள். இவ்வரசாங்கத்தின் பாதையானது ரோஜா இதழ்களின் மீது நடப்பதைப்போலல்ல. அதிவிரைவில்தானே இவ்வரசாங்கம் போர்க்களத்தில் சோதனைக்குட்படுத்தப்படுவதைக் காணலாம். தனிப்பட்ட நபர்களுக்கு உயர்வான ஸ்தானம் கிடைத்திருக்கிறதென நீங்கள் ஒரு நிமிஷங்கூட நினைக்கக்கூடாது. ஸ்தானத்தில் ஏதாவது உயர்வு கிடைத்திருக்குமேயானால் அது இந்தியாவினுடையவும், இந்தியர்களினுடையவும் உயர்வேயாகும். இவ்வரசாங்கம் ஸ்தாபிக்கப்பட்டதுடன், உலகத்தினரின் அங்கீகாரமும் பெற்றதன் பின்னர் உலகத்தினரின் முன்பாக இந்தியர்களின் ஸ்தானமும், கௌரவமும் உயரவில்லையென யார்தான் கூறமுடியும்? இவ்வியக்கம் உங்களுடையதென்றும், இவ்வரசாங்கம் உங்களுடைய அரசாங்கமென்றும், இந்திய சுதந்திர சங்கத்தின் அங்கத்தினர்கள் என்ற அளவில் உங்கள் கடமை பன்மடங்கு அதிகரித்துவிட்டதென்பதையும் நீங்கள் எப்பொழுதும் உணர்ந்துகொள்ளவேண்டும்.

தற்காலிக அரசாங்கம் ஸ்தாபிக்கப்பட்டதைத் தொடர்ந்தாற்போல் 'சர்வாம்சப் படைதிரட்டு' என்ற நமது திட்டமும் மிகவும் ஜரூராக நிறைவேற்றப்பட்டுவரவேண்டுமென்பதை நான் மீண்டுமொருமுறை வலியுறுத்திக் கூறவிரும்புகிறேன். ஜன சக்தி சாதனங்களுக்கு விடுத்த வேண்டுகோளை நான் மீண்டும் விடுக்கிறேன். இறுதி வெற்றி நாம் அடையும் வரையும், நமக்கு வேண்டிய ஆட்பலம், பொருளுதவி, தளவாட சாமான்கள் இவைகளைக் கொஞ்சமேனும் தடையின்றி அளித்துவரவேண்டிய கடமை கிழக்காசிய இந்தியர்களைச் சார்ந்ததாகும். இரா

வத்திற்கு ஆள்வேண்டுமென நான் விடுத்த வேண்டுகோள் நல்ல பலனையளித்திருப்பதுடன், எனக்கும் திருப்தியைக் கொடுத்திருக்கிறது. வாலண்டியர்களாகச் சேருவதற்குக் கிழக்காசிய இந்திய இளைஞர்கள் முன்வந்த விதமும், ஜான்ஸிராணி ரெஜிமெண்டையமைப்பதற்கு நமது சகோதரிகள் முன்வந்த விதமும் மிகவும் உற்சாகமூட்டத்தக்கனவாகும். பொருளுதவியையும், சாதன தளவாடங்களையும் பொறுத்தமட்டில் ஏழைகளும், மத்திய வகுப்பினரும் தங்களாலியன்ற அளவு உதவி வருகிறார்களென்பதை நான் இச்சந்தர்ப்பத்தில் கூறவிரும்புகிறேன். கல்நெஞ்சம் படைத்தவர்களையுங்கூட கலங்கச்செய்யும் தியாக உணர்ச்சியை நான் நமது ஏழை சகோதரர்களிடம் அநேக தடவை கண்டிருக்கிறேன். சலவைத் தொழிலாளியொருவன் என்னிடம் அவனுடைய சர்வத்தையும் கொடுத்துவிட்டு, தான் ஜான்ஸியிலிருந்து வந்திருப்பதால் ஜான்ஸிராணி ரெஜிமெண்டிற்கு சலவைத்தொழில் செய்துகொண்டு அவர்களுடன் செல்ல அனுமதிக்கவேண்டுமெனக் கேட்டுக்கொண்டான். எளிய உடைதரித்துள்ள ஓர் ஏழை இந்தியன் என்னிடம் அவனது அநேக வருஷ மீதமாகிய 200 வெள்ளியையும் மனமுவந்து கொடுத்துவிட்டான். எல்லாவற்றையும்விட மனமிளகச் செய்யக்கூடியது யாதவ சமூகத்தினரின் தியாகமேயாகும். இவர்கள் தங்களிடமுள்ள ரொக்கம் முழுவதையும் கொடுத்ததுடன் தங்களுக்கிருந்த கால்நடைகளையும் அளித்துவிட்டு அஸாத் ஹிந்த் இராணுவத்தில் தாங்களும் வாலண்டியர்களாகச் சேர முன்வந்துள்ளார்கள். எளிய ஜனங்கள் தங்கள் செய்கையினாலும், நடத்தையினாலும் சர்வாம்சப் படைதிரட்டு என்றால் என்னவென்பதை விளக்கிவருகிறார்கள். சர்வாம்சப் படைதிரட்டு என்றால் தங்களின் சேமிப்பில் ஐந்து அல்லது பத்து சத விகிதத்தையா குறிப்பிடுகிறதென பணக்காரர்கள்தான் அறியவிரும்புகிறார்கள். ஏழைமக்கள் தங்களின் முழு உடமைகளையும், தங்களின் உயிர்களையும் அளிக்க ஏராளமாக முன்வந்துகொண்டிருக்கிறார்கள். பணக்காரர்கள் தங்களின் மனோபாவத்தை மாற்றிக்கொள்ள வேண்டிய காலமும் வந்துவிட்டது. வாலண்டியர் ஒருவர் இராணுவத்தில் சேர்ந்து போர்க்களத்திற்குச் செல்லும்பொழுது தனது ரத்தத்தில் ஐந்து அல்லது பத்து சத விகிதம் சிந்தினால் போதுமாவென்ற கேள்வியைக் கேட்பதில்லை என்பதை இவர்கள் உணர்ந்துகொள்ளவேண்டும். தனது ரத்தம் முழுவதையும்

சிந்தத் தயாராகவே அவன் போர்க்களம் செல்லுகிறான். அவ்விதமான வாலண்டியர்களில் ஒருவனின் உயிர் எனக்கு லக்ஷக்கணக்கான வெள்ளிக்கும் உயர்வாகும். ஆகையினால் பணக்காரர்களை நான் கேட்டுக்கொள்வதென்னவென்றால் அவர்கள் தங்களின் உயிர்களைத் தியாகஞ்செய்யத் தயாராகவில்லையெனில் தங்களின் உடைமைகளைக் கொடுக்கவாவது முன்வரவேண்டும்.

நாங்கள் ஓர் உபத்திரவக்காரர்களாகவிருக்கிறோமென்றும், இந்தியா செல்வதற்காக நாங்கள் ஷோனானை விட்டதும் இத்தொல்லைகள் நீங்கிவிடுமெனவும் சில பணக்காரர்கள் பேசிக்கொள்வதாக நான் கேள்விப்பட்டேன். நாங்கள் சென்றுவிட்டாலுங்கூட இந்திய சுதந்திர சங்கம் இங்கு வேலைசெய்துவருமென்பதை இவர்கள் அறிந்துகொள்ளவேண்டுமென நான் விரும்புகிறேன். நாம் போர்க்களத்தில் எதிரிகளுடன் சமர் செய்துகொண்டுவரும்பொழுது இந்திய சுதந்திர சங்கம் இங்கு 'ஹோம் பிரண்ட்' திட்டத்தை நிறைவேற்றிவரும். பணக்காரர்களை நாம் விட்டுவிடமுடியாது. ஏனெனில் நமது போராட்டம் 'வாழ்வு அல்லது மரணம்' என்பதைத் தீர்மானிக்கக்கூடியதாகும். வெற்றிகிட்டும்வரை நமது போராட்டத்தை எல்லா வகையாலும், எவ்விதத் தியாகத்தாலும் நடத்த நாம் உறுதிகொண்டிருக்கிறோம். இந்திய சுதந்திர சங்கம் நிதி கோருவதிலிருந்து தப்பித்துக்கொள்வதற்காக சில பணக்காரர்கள் தங்களின் பிரஜாபத்திய உரிமைமையே மாற்றிக்கொள்ள ஆலோசித்துவருவதாகவும் நான் கேள்விப்பட்டேன். இவ்விதமான மாறாட்டங்களால் சஞ்சலப்படுபவர்களுக்கு இரு வழிகளே உண்டென்பதை நான் தெரிவிக்க விரும்புகிறேன். அவர்கள் உண்மையான இந்தியர்களென்றமுறையில் மிக முக்கியமான இந்நேரத்தில் தங்களின், கடமையைச் செய்யவேண்டும்; அல்லது தாங்கள் பிரிட்டிஷாரின் நண்பர்களெனக் கூறுவதுடன், பிரிட்டிஷாரை நடத்துவதைப்போன்று தங்களையும் நடத்திவரவேண்டுமெனக் கூறிவிடவேண்டும். பிரிட்டிஷார்களுக்கும் அவர்களது நண்பர்களுக்கும் கிழக்காசியாவில் ஜெயிலைத்தவிர வேறிடங்கிடைக்காது. இந்தியாவிலும அவர்களுக்கு இதே நிலைமை ஏற்படக்கூடிய காலம் அதிக தூரத்திலில்லை. நமது வேண்டுகோளுக்கு திருப்திகரமான முறையில் செவிமடுக்காத ஓர் சில பணக்கார இந்தியர்

கள் தங்களின் நிலைமையை மீண்டும் புனராலோசனை செய்து கொள்வார்களென நான் விசுவாசிக்கிறேன்.

அஸாத் ஹிந்த் தற்காலிக அரசாங்கம் தீர்மானித்துள்ள இரு முக்கியமான விஷயங்களை உங்களுக்கு நான் இப்பொழுது அறிவிப்பதுடன் உங்களின் அங்கீகாரத்துக்காகவும் அவைகளை சமர்ப்பிக்கிறேன். கிழக்காசியாவிலுள்ள நமது இயக்கத்தை பிரிட்டிஷார்கள் தங்களது பிரசாரத்தில் அலக்ஷியப்படுத்தியும், குறைகூறியும் வந்த ஒரு காலமுமிருந்தது. ஆனால் அவர்கள் இப்பொழுது நமது இயக்கத்தை தீவிரமாகக் கருதிவருவதுடன் வேறுவழியின்றி என்னையும் ரேடியோ மூலமாக தூஷிக்கவும் துணிந்துள்ளனர். ஒருவனை தூஷிப்பதென்பது கோழையின் கடைசி ஆயுதமாகும். நமது சக்தியை எதிரிகள் அறிந்துகொண்டார்களென்பதுடன் நமது பிரயத்தனங்கள் யாவும் வெறும் பிரசார தந்திரமல்லவென்பதையும் உணர்ந்துவிட்டார்களென்பதை இது தெளிவாகக் காட்டுகிறது. அஸாத் ஹிந்த் அரசாங்கத்தை நாம் ஸ்தாபித்ததும் அது உலகமுழுதும் பெரும் திகிலை உண்டுபண்ணியிருக்கிறது. லண்டனிலும், வாஷிங்டனிலும் இது பெருங் குழப்பத்தை உண்டுபண்ணிவிட்டதென நான் கூறினால் அது மிகைப்படுத்திக் கூறுவதாகாது. அஸாத் ஹிந்த் அரசாங்க ஸ்தாபிதச் செய்தியை வெளியிடுவதில் எதிரி வானொலி நிலையங்கள் மிக சுறுசுறுப்பாக வேலை செய்தன. இதனிடையில் நமது அரசாங்கத்தை ஜப்பானிய இம்பீரியல் அரசாங்கம் அங்கீகரித்துள்ளதென்ற செய்தியும் நாம் கிடைக்கப்பெற்றிருக்கின்றோம். இது மிக முக்கியமானதொரு சம்பவமாகும். வேறெந்தவொரு முன்னிகழ்ச்சியுமின்றி இவ்வங்கீகாரம் மாத்திரம் அளிக்கப்பட்டிருக்குமாயின் இதன் அந்தரங்க சுத்தியை ஜனங்கள் சந்தேகிக்க இடமளித்திருக்கும். ஆனால் இதுவோர் புதிய நடவடிக்கையல்ல. நியாயம், சமத்துவம் ஆகியவற்றை ஆதாரமாகக் கொண்டு ஜப்பான் கடைப்பிடித்துவரும் ஆசியக்கொள்கையில் இதுவுமொன்றேயாகும். ஜப்பானின் இக்கொள்கையை உலகத்தினர் நன்கறிவர். பர்மிய சுதந்திரத்தையும், அதைத்தொடர்ந்து பிலிப்பைன் சுதந்திரத்தையும்பற்றி உலகத்தினர் ஏற்கனவே கேள்விப்பட்டிருப்பர். ஆகையினால் இக்கொள்கையின் முடிவாகவே அஸாத் ஹிந்த் தற்காலிக அரசாங்கமும் அங்கீகரிக்கப்பட்டுள்ளது. சுதந்திரம், ஜனநாயகம் ஆகியவற்றிற்குத் தாங்

களே பாதுகாப்பாளர்களென ஆங்கிலோ-அமெரிக்கர்கள் உரக்கக் கூக்குரலிட்டு வருகின்றனர். ஆனால் அவர்களின் நடத்தைகளே அவர்கள் கூறுவதை பொய்ப்பித்து வருகின்றன. இந்தியாவில் தங்களின் பிடியை நழுவவிடாததுடன் ஈரான், ஈராக் போன்ற சுதந்திர நாடுகளையும் அடிமையிலாழ்த்தியிருக்கின்றனர். சுதந்திர பர்மாவையும் அடிமையிலாழ்த்த முயன்று கொண்டுவருகின்றனர். இவர்களின் செய்கைக்கெதிராக ஜப்பான் ஏற்கனவே சுதந்திர பர்மா, சுதந்திர பிலிப்பைன் ஆகிய தேசங்களை அங்கீகரித்திருப்பதுடன், இப்பொழுது அஸாத் ஹிந்த் தற்காலீக அரசாங்கத்தையும் அங்கீகரிக்க முன்வந்துள்ளது. நமது ஜப்பானிய நண்பர்கள் நம்மிடம் எப்பொழுதுமே அனுதாபங்காட்டிவந்திருக்கின்றனர். இப்பொழுது அவர்கள் நமது அரசாங்கத்தை அங்கீகரித்ததன் மூலம் நமக்கு மட்டற்ற ஆத்மீகபலத்தை அளித்துள்ளனர். இதற்கு நமது நன்றியறிதல் உரித்தாகட்டும்!

எனது மந்திரி சபையால் ஏகமனதாக நிறைவேற்றப்பட்டிருக்கும் அடுத்த தீர்மானமும் மிகமுக்கியமானதாகும். இந்தியாவின் அரசியல், பொருளாதார, இராணுவ நிலைமைகளைப்பற்றி விவாதித்தபின்னர் பிரிட்டன், அமெரிக்கா ஆகிய நாடுகளின் மீது அஸாத் ஹிந்த் தற்காலீக அரசாங்கம் போர்ப்பிரகடனஞ் செய்ய வேண்டியசமயமும் வந்துவிட்டதென எனது மந்திரிசபை ஏகமனதாக முடிவிற்கு வந்துள்ளது. கடந்த இரவு 12-55-மணிக்கு ரேடியோ மூலமாக நாம் போர்ப்பிரகடனத்தை வெளியிட்டோம். எதிரி ரேடியோ நிலயங்களும் நமது போர்ப்பிரகடனச் செய்தியை காலை 2-மணிக்கு வெளியிட்டன. நமது நடவடிக்கை ஒவ்வொன்றையும் அவர்கள் எவ்வளவு ஜாக்கிரதையாகக் கவனித்து வருகிறார்களென்பதற்கு இது ஒன்றே போதிய சான்றாகும். இந்தியாவில் நான் நடத்தி வந்த போராட்டங்களிலிருந்து பிரிட்டிஷார்கள் என்னை நன்கறிவர். நான் கூறுவதைச் செயலில் நடத்திக்காட்டப் போதிய வலிமை இல்லாதவரை நான் ஒன்றும் அறிவிக்கமாட்டேன் என்பதையும் அவர்கள் நன்கறிவார்கள். நமது பிரகடனமொன்றும் வெறும் பிரசார தந்திரமல்ல. அடுத்துவரும் நடவடிக்கைகள் நாம் கூறியதை மெய்ப்பித்துக்காட்டும்.

பிரிட்டன், அமெரிக்கா ஆகிய நாடுகளின்மீது போர்ப்பிர கடனம் விடுத்த நமது தீர்மானத்தை உங்களின் அங்கீகாரத் திற்கு சமர்ப்பிக்கு முன்னர் அதன் கஷ்ட நஷ்டங்களைத் தீர ஆராய்ந்து உங்களின் முடிவைத்தெரிவிக்க வேண்டுமென நான் உங்களைக் கேட்டுக்கொள்கிறேன். நமது பிரகடனம் வெறும் பயமுறுத்தல் நடவடிக்கையல்லவென்பதை நான் மீண்டுமொரு முறை ஞாபகமூட்டுகிறேன். நமது சரீரத்தில் ஒரு துளி இரத் தம் இருக்கும்வரையும் நாம் அதை நிறைவேற்றவே உறுதி கொண்டுள்ளோம். உங்களை இத்தீர்மானத்தை அங்கீகரிக்கு மாறு கேட்டுக்கொள்ளும் பொழுது சாதாரண கொண்டாட் டங்களில் நடைபெறுவதைப் போன்று இதையும் நிறைவேற்ற வேண்டுமென நான் விரும்பவில்லை. நீங்கள் இதை அங்கீக சித்தால் நமது பிரகடனத்தை அமுலுக்குக் கொண்டுவருவதில் எங்களைப் போன்றே நீங்களும் உங்களின் கடைசிச் சொட்டு இரத்தத்தையும் சிந்தத் தயாராயிருக்கிறீர்களென்றே பொருள் படும். அஸாத் ஹிந்த் இராணுவத்தினிடம் இக்கேள்வியைக் கேட்கவேண்டிய அவசியமில்லையென்பதை நான் அறிவேன். ஏனெனில் அவர்களின் மனதையும், டில்லி செல்லும் பாதை யில் பிரவேசிக்க அவர்கள் கொண்டுள்ள துடிதுடிப்பையும் நான் நன்கறிவேன். இப்போர்ப் பிரகடனத்தை விடுப்பதில் பொது மக்களும் நம்முடன் ஒற்றுமைப்பட்டிருக்கிறார்களாவென் பதை அறியவே நான் இப்பொழுது விரும்புகிறேன். அவர் களும் நம்முடன் ஒன்றியிருப்பதினால் சர்வாம்சப்படைதிரட்டு என்ற திட்டத்திற்கு அவர்களின் பரிபூரண ஒத்துழைப்பை உடனே அளிக்க முன்வரவேண்டும். நண்பர்களே! நாம் இங்கு இப்பொழுது நடத்தும் கூட்டம் ஓர் கொண்டாட்டத்தை முன் னிட்டு நடைபெறவில்லை. வாழ்வு அல்லது மரணம் என்ற பிரச்னையை தீர்மானிப்பதற்காக நாம் இங்கு குழுமியுள்ளோம். இத்திட்டத்தில் நாம் வெற்றிபெற்றால் 38 கோடி இந்தியர்க ளும் விடுதலை பெறுவர். துரதிருஷ்டவசமாக நாம் இம்முயற்சி யில் தோல்வியுறுவோமேயானால் இன்னும் ஒரு நூற்றாண்டிற்கு நமது நாடு சகிக்கவொண்ணாத கஷ்டத்திற்கும் துன்பத்திற் கும் உட்படநேரிடும். ஆண்டவன் நமக்கு அத்தகைய நிலைமையை அளிக்கமாட்டார். இத்தகைய பொன்னான தருணத்தை ஏற்ப டுத்தித் தருவதில் கடவுளின் கடாக்ஷம் நமக்கு எவ்விதம் கிடைத்திருக்கிறதென்பதை நான் ஏற்கனவே உங்களுக்கு விளக்

கிக் கூறியுள்ளேன். நாம் ஒவ்வொரு படியாக எவ்வாறு தாண்டி வந்துள்ளோமென்பதை நான் உங்களுக்குத் தெளிவாகக் காட்டியிருப்பதுடன் நமது எதிரிகளைத் தாக்குவதற்கான உற்றகாலத்தையும், தகுந்த சந்தர்ப்பத்தையும் எவ்வாறு அடைந்துள்ளோமென்பதையும் நான் உங்களுக்கு விளக்கிக் கூறியுள்ளேன். நமக்கு எவ்வாறு ஒரு ஸ்தாபனமும், இராணுவமும், உலகத்தினுல் அங்கீகரிக்கப்பட்டுள்ளதோர் அரசாங்கமும் கிடைத்ததென்பதைப் பற்றியும், நாம் எவ்வாறு சகல உதவியையும் ஒத்துழைப்பையும் பெற்ருேமென்பதையும் நான் விவரித்துக் கூறியுள்ளேன். இந்தியாவின் சரித்திரத்திலேயே மிக முக்கியமான இச்சந்தர்ப்பத்தில் நாம் நமது தேசத்தை கைவிட்டுவிடுவோமா? மேற் கூறிய விஷயங்களை நன்கு ஆராய்ந்துகொள்வதுடன் போர்ப் பிரகடனத்தின் கஷ்ட நஷ்டங்களையும் திர ஆலோசனை செய்த பின்னர் யுத்தப் பாதையைப் பின்பற்ற நீங்கள் தீர்மானித்தால், பிரிட்டிஷாருக்கெதிராக நடைபெறப்போகும் பிரசித்திபெற்ற போரில் எதிர்ப்படும் எத்தகைய சுகதுக்கங்களையும் சகித்துக் கொள்வதென உங்களின் அந்தரங்க பூர்வமாக நீங்கள் உணர்ந்தால், வெற்றி கிட்டும்வரை உங்களின் உயிர் உடல் பொருள் ஆவி ஆகிய அனைத்தையும் அர்ப்பணித்து எதிரியுடன் போர் புரிவதென நீங்கள் பிரியப்பட்டால் எழுந்து நின்று உங்களின் ஆரவாரத்தின் மூலமாக எங்களது போர்ப்பிரகடனத்திற்கு அங்கீகாரம் அளியுங்கள்.

குறிப்பு:—உலகத்தின் இப்பாகத்தின்கண் இதுவரை கண்டிராத இந்தியர்களின் மகத்தானதோர் ஆரவாரத்திற்கு இதுவே சைகையாக அமைந்தது. கூட்டத்திற்கு வந்திருந்த 50,000 பேர்களும் எழுந்து நின்று தங்களது அங்கீகாரத்தைத் தெரிவித்துக்கொண்டனர். புரட்சி சுலோகங்களும், ஆரவாரமும் 15 நிமிஷங்கள்வரை ஓயாமல் ஒலித்துக்கொண்டிருந்தன. சொற்ப நேரத்திற்கு முன்னர் 50,000 தலைகள் மட்டும் கண்டவிடத்தில் இப்பொழுது எங்கும் ஒரே துப்பாக்கி மயமாகக் காணப்பட்டது. அஸாத் ஹிந்த் பௌஜ் வீரர்களும், வாலண்டியர்களும், ஆண், பெண் குழந்தைகளும் தங்கள் ஆர்ப்பாட்டங்களின் மூலமாக நேதாஜிக்குத் தங்களது சம்மதத்தைத் தெரிவித்துக்கொண்டனர். 15 அடி உயரமுள்ள மேடை

பின் மீது நேதாஜீ ஓர் சிம்மத்தைப்போன்று காட்சியளித்தார். நேதாஜீ பின்னர் கூறியதாவது:—

நண்பர்களே! உங்களின் உற்சாகத்தையும் விடுதலை வேட்கையையும் நேரில் கண்ட எனது சந்தோஷமும், பெருமையும் அளவிடற்பாலதாகும். கிழக்காசிய இந்தியர்களிடம் இத்தகைய மனோசக்தி யிருக்கும்பொழுது நமது போர்ப்பிரகடனத்திற்கு ஒரு முடிவுதானிருக்கமுடியும். வெற்றியில் முடிவும் ஒருபேர்தான் அம்முடிவாகவுமிருக்கும். இந்திய மக்களின் ஒன்றுபட்ட உறுதியினாலும் ஆத்ம சக்தியினாலும் எதிரிகளை வெற்றி கொள்வதென்பது மிக சுலபமாகும். கூட்டம் இத்துடன் முடிவுறுகிறது. நமது போராட்டத்தை வெற்றிகரமான முடிவிற்குக் கொண்டுவர உங்களாலான சகலவற்றையும் செய்வதென்ற தீர்மானத்துடன் அமைதியாக நீங்கள் வீடு செல்லவேண்டுமென உங்களைக் கேட்டுக்கொள்கிறேன். கடைசியாக, புரட்சிக்கும், சுதந்திர இந்தியாவிற்கும், ஜப்பானிய அரசாங்கத்திற்கும் மும்முறை கோஷிக்குமாறு உங்களை நான் வேண்டுகிறேன்.

## படையெடுப்பு

சுதந்திர இந்திய தற்காலீக சர்க்காரை ஜப்பான், ஜெர்மனி, இத்தாலி, பர்மா, பிலிப்பைன், குரோஷியா, தேசீய சீனா, மஞ்சுகோ, ஐரிஷ் குடியரசு ஆகிய ஒன்பது நாடுகளும் அங்கீகரித்தன. 6-11-1943-ல் டோக்கியோவில் நடைபெற்ற கிழக்காசிய நாடுகளின் மகாநாட்டில் கலந்துகொண்ட ஒவ்வொரு நாட்டுப் பிரதிநிதிகளும் இந்தியா சுதந்திரமடைந்தால்தான் தாம் நிம்மதியாக வாழமுடியுமென்றுணர்ந்து நேதாஜீக்குப் பரிபூரண உதவியளிப்பதாக வாக்களித்து, நாளாவட்டத்தில் செய்கையில் காட்டினர். பிரிட்டிஷாரிடமிருந்து பிடித்த அந்தமான்-நிக்கோபார் தீவுகளை ஜப்பான் 17-11-1943-ந் தேதி சுதந்திர இந்திய சர்க்காருக்கு விட்டுக்கொடுத்தது. அடிமை இந்தியாவின் நரகலோகமாயிருந்த அந்தமான்—நிக்கோபார் தீவுகள் சுதந்திர இந்தியாவின் அனுதாபத்தைக் கவர்ந்து, சுதந்திர இந்திய சர்க்காரின் முதல் ஹைகமிஷனராகிய கர்னல் லோகநாதன் மேற்பார்வையில் தேவலோகம்போல் பிரகாசிக்கத்தொடங்கின.



ஜான்ஸிராணி அணிவகுப்பில் கர்னல் லெக்ஷ்மியும் நேதாஜீயும்



இராணுவ, டாங்கிகளை நேதாஜீ பார்வையிடுகிறார்



நேதாஜீ வாரம்:—இந்திய தேசீய இராணுவத்தில் நேதாஜீ காட்சியளிக்கிறார்.

இவ்வாறாக நேதாஜீ தனது பக்கம் வெற்றியைத் தேடிக் கொண்டார். இராணுவத்தின் உயர்தர சேனாதிபத்தியத்தையும் ஒப்புக்கொண்டார். தற்காலீக சர்க்காரையும் 21-10-1943-ல் ஏற்படுத்தி மந்திரி சபையையும் உண்டாக்கினார். ஷை சர்க்காருக்கு இந்தியர்கள் அனைவரும் விசுவாசப் பிரமாணம் செய்து ஆங்கிலோ-அமெரிக்கர்கள்மீது யுத்தப் பிரகடனமும் செய்தனர். இதைக் கேட்ட ஆங்கிலோ-அமெரிக்க அரசாங்கங்கள் திடுக்குற்றன. ஆயுத முழக்கத்துடன் பர்மா சென்று தன் தாய்த்திருநாட்டின் செல்வங்கொழிக்கும் மண்ணில் தனது படைகளுடன் தானும் வீராவேசத்துடன் 4-2-1944-ல் புகுந்தார். ஒரே அமளி! குதூகலம்! மூவர்ணக்கொடி இந்தியாவின் ஒரு பகுதியை ஆக்ரமித்து அரசாட்சி செய்தது. இதைக் கண்டு பொறாத பிரிட்டிஷார் தங்களுடைய புஜபல பராக்கிரமம் அனைத்தையும் நேதாஜீயிடம் காட்டினார்கள். ஆயிர ஆயிரக்கணக்கான ராக்ஷஸ விமானங்களில் லக்ஷக்கணக்கான டன்கள் குண்டுகளைக் கொண்டுவந்து கொட்டினார்கள். பாச்சா பலிக்கவில்லை.

முன்னணியில் நின்றார் நேதாஜீ! பின்னாலிருந்த பொது மக்களின் ஊக்கம் அவரை வெற்றியோடு முன்னால் தள்ளிக்கொண்டு சென்றது. கிழக்கிந்தியாவிலுள்ள இம்பால், கோஹிமா போன்ற சுமார் 15,000 சதுரமைல் விஸ்தீரணமுள்ள இந்தியப்பிரதேசம் இந்தியராட்சிக்குட்பட்டது. இவ்வெற்றியைத் தடைசெய்ய ஆங்கிலேயரால் முடியவில்லை. இந்தியத் தாயின் புதல்வர் ஒருவரிடம் சூரியன் அஸ்தமிக்காத சாம்ராஜ்யமும், அமெரிக்காவுமாக இரண்டு வல்லரசுகள் எதிர்த்து நின்று போரிட்டன. பொய்ப்பிரசாரங்களைச் செய்தன. இந்த தனியொரு மஹானை எதிர்த்து நிற்கவேண்டி துருப்புகள், விமானங்கள், பிரசாரங்கள், வாகனங்கள் முதலிய யாவும் வல்லரசுகளினால் உபயோகிக்கப்பட்டன. மீண்டும் நேதாஜீ சளைக்கவில்லை. எதிரில் குண்டுகளைக்கொட்டிய போதும் எதிர்த்து நின்றார் நேதாஜீ. லக்ஷக்கணக்கான கூலிப்படைகளை முள்வேலி போட்டதைப் போல் கொண்டுவந்து பின்னால் கொட்டி நம் நேதாஜீயைத் திகைக்கும்படி தங்களின் மாயாஜாலவித்தையைக் காட்டினார்கள். எனினும், அதையும்—அந்த முள்வேலியையும்—தாண்டிச் சென்று தன் பராக்கிரமத்தைக் காட்ட யத்தனிக்கும்பொழுதுதான் ஜப்பான் சரணடைந்தது. இன்றைய அணுகுண்டு சகாப்தமும் தோன்றியது. அதற்கும் அவர் அஞ்சவில்லை. ஏதோ ஒரு திட்டத்துடன் விமானத்தில் ஏறினார். போன இடம் தெரியவில்லை. அஹிம்ஸா மூர்த்தி—காந்திஜீ—தன் பொக்கை வாயால் சிரித்துக்கொண்டு "சுபாஷ் உயிருடன் இருக்கிறார்" என்றும் கூறிவிட்டார். இதன் கருத்து பின்னால் விளங்குமென்பதற்கையமில்லை. காந்தி—ஒரு அஹிம்ஸாமூர்த்தி; சுபாஷ் ஒரு தியாக மூர்த்தி; இதிலும் ஒரு ஐயமுமில்லை.



இ. தே. இ. ஞாபகார்த்த சின்னம்

ஜப்பான் சரணாகதியடைந்ததன் பயனாக அதிகமாக வருந்துபவர்கள் கிழக்காசிய இந்தியர்கள்தான். ஏனெனில் தன் தாய்நாட்டை விடுதலை செய்யும்

லட்சியத்தில் தற்காலிகமாக அவர்கள் தோல்வியுற்றனர். அதுவும் போதாதென பழையபடி மேனாட்டினர் தம்மைத் திரும்பவும் அடக்கி, நசுக்கிப்பிழிய கிழக்காசிய நாடுகளுக்கு வந்து சேர்ந்தனர். இந்திய சுதந்திர சங்கத்தையும், இந்திய தேசீய இராணுவத்தையும் சேர்ந்த ஆயிரக்கணக்கான இந்தியர்கள் இன்று பிரிட்டிஷ் சிறைகளில் தவிக்கின்றனர். நேதாஜீயின் மறைவால் அவரின் படைகளும், இந்தியர்களும் கண்ணீர் விட்டழும் காக்ஷி கல்நெஞ்சத்தையும் கரையச் செய்கிறது.

ஓர் சுதந்திர இந்திய அரசாங்கத்தை ஸ்தாபித்து அதன் மூலம் தாய்நாட்டு விடுதலைக்காக ஓர் பெரும் யுத்தம் செய்து, கடந்த இரண்டு வருட காலமாகச் சுதந்திர உணர்ச்சியுடன் வாழ்ந்ததற்காகக் கிழக்காசிய இந்தியர்கள் பெருமையடைகின்றனர். அவர்கள் இன்று சிங்கம்போல் தலையை நிமிர்த்தி நடக்கின்றனர். அவர்கள் காந்திஜீயை புறக்கணிக்கவில்லையாயினும், அஹிம்சையில் நம்பிக்கை கொள்ளவில்லை. தம்மையும் தம் தவப்பயனாகிய தலைவர் நேதாஜீயையும் உதாசினமாகப் பேசும் எவரையும், எந்த சக்தியையும் கண்டதுண்டமாக்க வேண்டுமென அவர்களின் கரமும், மனமும் துடிக்கின்றன.

---

## அத்தியாயம்—11

---

### அச்சு நாடுகளின் சரணாகதி

[இத்தாலி, ஜெர்மனி, ஜப்பான் ஆகிய அச்சு நாடுகள் தோல்வியுற்றதற்குக் காரணங்கள்—அவைகள் எவ்விதம் சரணாகதியடைந்தன—அதனால் அவற்றிற்கேற்பட்ட மானபங்கங்கள், கஷ்டநஷ்டங்கள், சிதைவுகள்—அச்சுத் தலைவர்களுக்கு ஏற்பட்ட கதி போன்ற விவரங்கள் இவ்வத்தியாயத்தில் குறிப்பிடப்பட்டுள்ளன.]

அச்சு வல்லரசுகளில் முதலாவதாக சரணாகதியடைந்தது இத்தாலிதான். இரண்டாவதாக ஜெர்மனியும், மூன்றாவதாக ஜப்பானும் சரணாகதியடைந்தன. அச்சு நாடுகள் தோல்வியுற்றதற்குள்ள முக்கிய காரணங்களாவன:—

உறுதியான லக்ஷியமெதுவுமில்லாத சுயநல இத்தாலியை இதில் கலந்துகொள்ள அனுமதித்ததால் ஜெர்மனிக்கு நஷ்டமேயொழிய லாபமில்லை. முதலாவது உலக மகா யுத்தத்தில் பிரிட்டனுக்கும் இத்தாலி இதே கஷ்டத்தையுண்டாக்கியது. இரண்டாவதாக ஐரோப்பிய யுத்தம் முடிந்ததும் ஹிட்லர் பிரிட்டன் மீது படையெடுக்காமல் தாமதித்தது. மூன்றாவதாக அவர் ரஷியாமீது படையெடுத்தது. இதனால் ஜெர்மன் ஐக்கிய பலம் பல பக்கங்களிலும் பிரிக்கப்பட்டதோடு, பிரிட்டன் போர் புரிய அமெரிக்க உதவியுடன் தயாராகிக்கொள்ளப் போதிய அவகாசமுமேற்பட்டது. நான்காவதாக ஜப்பான் பர்மா யுத்தம் முடிந்த கையோடு இந்தியாமீது படையெடுக்காமற்போனது. இந்தியாவை மீட்க ஆரம்பித்த கிழக்காசிய இந்திய சுதந்திர இயக்கத் தலைவர்கள் சுமார் 20 மாதங்களை வீணாகப் பேசிக் கழித்தது. இதனால் கிழக்காசிய யுத்தத்தில் ஜப்பானைத் தோற்கடிக்கவேண்டிய ஆள், பொருள், ஆயுத வசதிகளை இந்தியாவிலிருந்து நேசதேசத்தினர் திரட்டிக்கொள்ளப் போதிய அவகாசமேற்பட்டது. ஐந்தாவதாக பிடிபட்ட நாடுகளில் அச்சு வல்லரசுகள் ஏற்கனவே இருந்த ஏகாதிபத்தியங்களைவிட மிகக் கொடுமையாகவும், பயங்கரமாகவும் மிருக நிர்வாகம் நடத்தியதால் அவர்களுக்கு உள் நாட்டிலேயே பொதுஜன எதிர்ப்பு அதிகமானது. ஆறாவதாக நேசதேசத்தினர் உபயோகித்த அணுகுண்டு போன்ற ராக்ஷஸ ஆயுதங்களை அச்சு நாட்டினர் உபயோகிக்கத் தவறியது. ஏழாவதாக தலைவிதி என்று ஒன்றிருக்குமானால் அது.

அச்சு நாடுகளுக்கு 1939 முதல் 1942 முடியும் வரை 4 வருடங்களாக சுக்கிர தசை இருந்து வந்தது. அதன் பிறகு அவற்றின் கை இறங்கவாரம்பித்தது. பிரிட்டிஷ் நேசதேசத்தினர் அச்சு நாடுகள் மீது எறியடிக்க முதன் முதலாக 19-8-1942-ல் ஆரம்பித்து மேற்கு ஐரோப்பாவிலுள்ள டியப்பியில் தம் படைகளை இறக்கினர். ஆனால் 9 மணி நேரத்தில் ஜெர்மன் அடி உதைகளைத் தாங்க முடியாமல் சகலத்தையும் போட்டது போட்ட மாதிரி விட்டுவிட்டு ஓட்டம் பிடித்தனர். டங்கர்க், கிரீட், சிங்கப்பூர் ஆகியவிடங்களில் அடைந்த தோல்விகளைவிட பிரிட்டனுக்கு டியப்பியில் இன்னும் பெரிய தோல்வியும், நஷ்டமும் ஏற்பட்டன.

1943 ஆரம்பத்தில் வட ஆப்ரிக்காவில் இந்தியத் துருப்புகளும், அமெரிக்கத் துருப்புகளும் தீவிரமான நடவடிக்கைகளை எடுத்துக்கொண்டன. ஜெர்மன் இத்தாலியத் துருப்புகள் பின் வாங்கிக்கொண்டேபோயின. நேசதேசத் துருப்புகள் இத்தாலிய சிஸிலியில் 10-7-1943-ல் இறங்கி, 38 நாட்கள் கடும் யுத்தத்திற்குப் பிறகு அத் தீவைத் தம் வசமாக்கிக்கொண்டன. சிஸிலி வீழ்ச்சியோடு முஸோலினியும் கவிழ்க்கப்பட்டார். அவரைச் சிறையில் வைத்துவிட்டு, புதிய இத்தாலியப் பிரதம மந்திரியாக வந்த படாக்ளியோ 3-9-1943-ல் பிரிட்டிஷ் நேசதேசத்தினருடன் யுத்த நிறுத்த ஒப்பந்தம் செய்து கொண்டனரெனினும், இத்தாலியில் ஒவ்வொரு அங்குல நிலத்தையும் பிரிட்டிஷ், இந்திய, அமெரிக்கர் யுத்தம் செய்தே பிடிக்க நேர்ந்தது. ஏனெனில் ஹிட்லர்—முஸோலினித் துருப்புகள் அவ்வளவு கொடூரமாகப் போராடின. இதற்கிடையில் அவைகள் முஸோலினியையும் விடுவித்துவிட்டன. எனவே இத்தாலி தரைமட்டமாகியது. என்றாலும் தலைநகரான ரோமாபுரி 4-6-1944-ல் நேசதேசத்தினர் வசமாயிற்று.

இந்த சமயம் பார்த்து நேசதேசத்தினர் செர்போர்க் தீபகற்பத்தில் 6-4-1944-ல் மிகமிக முன் ஜாக்கிரதையுடனும், போதிய பலத்துடனும் ஜெர்மனியைத் தாக்கவேண்டி கரையிறங்கினர். உலகமே அதிசயித்தது. ஜெர்மன் பிரசார மந்திரி டாக்டர் கெப்பல்ஸ், விமானப்படைத் தலைவர் கோரிங், அந்திய நாட்டு மந்திரி ரிப்பன்ட்ராப் ஆகிய சகலரும் டங்கர்க், கிரீட், டியப்பி முதலியவற்றின் பெயர்களைச் சொல்லி வாய்ப்பறை சாற்றினர். ஜெர்மனியிலிருந்து பயங்கர வெடிகுண்டுகள் தாமாகப் பறந்துபோய் பிரிட்டனில் வெடித்தன. ஜெர்மன் இராணுவ நிபுணத்துவம் எத்தனையோவித இந்திரஜாலங்களைச் செய்தது. எனினும் இம்முறை நேசதேசத்தினர் ஏமாறவில்லை. 25-6-1944-ல் செர்போர்க் அமெரிக்கர் வசமாகிவிட்டது. இதிலிருந்து அச்சுத் துருப்புகள் நாளுக்குநாள் பின்வாங்கிக் கொண்டேபோயின. இதற்கிடையில் பிரான்ஸிலும், பெல்ஜியத்திலும் நேசதேசப் படைகள் இறங்கி, அங்கிருந்த அச்சுத் துருப்புகளைத் துரத்திவிட்டு 3-9-1944-க்குள் அவ்விரு நாடுகளையும் விடுவித்தன. ஆனால் பெல்ஜியத்தை ஜெர்மானியர் திரும்பவும் பிடித்துவிட்டனரென்றாலும், இதற்குள் அமெரிக்க நேசதேசத்

துருப்புகள் அசல் ஜெர்மன் பிரதேசத்திற்குள் அடிவைத்து விட்டன.

## இத்தாலி முடிந்தது

பிரிட்டிஷ்—கனடியத் துருப்புகள் ஹாலந்து வழியாக கிழக்குமுகமாகவும், பிரிட்டிஷ்—அமெரிக்கத் துருப்புகள் ரர், ரைன்லந்து வழியாகவும், அமெரிக்க—பிரஞ்சுப் படைகள் ரைன் வழியாகவும் மூன்று திக்குகளிலும் ஜெர்மனியைத் தாக்கவாரம் பித்தன. இதற்குள் இத்தாலியில் உள்நாட்டுக் குழப்படியும் ஏற்பட்டது. 1945 ஏப்ரலில் முஸோலினியை சில இத்தாலியர் களே கொன்றுவிட்டனர். சர்வாதிகாரியாக விளங்கிய முஸோ லினியின் சவம் அநாதைப்பிணமாகியது. இதனுல் இத்தாலி முழுதும் நேசதேசவசமாயிற்று. அதன் குடியேற்ற நாடுகளும் மாற்ருன் வசமாயின. அங்கிருந்த ஜெர்மன் துருப்புகள் சரணு கதியடைந்தன. இதனுல் மற்ற ஜெர்மன் துருப்புகளுக்கும் பெரும் மனத்தளர்வேற்பட்டது.

ஜெர்மனியைத் தொலேத்தது ஜெர்மனிதான். அதன் துருப்புகள் நண்டு கொழுத்தால் வளேயிலிராதென்பதுபோல ரஷியாமீது பாய்ந்தன. ஆரம்பத்தில் சூரப்புலிகளாக ஸ்டா லின்கிரேட் வரைச்சென்றன. அங்கு வாய்க்கொழுப்பு சேலே யில் வடியத்தொடங்கியது. லக்ஷத்திற்கதிகமான துருப்புகளே யும், கோடிக்கணக்கில் மதிப்புள்ள தளவாடங்களேயும் அங்கு இழந்துவிட்டு 19-11-1942-ல் பின்வாங்க ஆரம்பித்த ஹிட்லரின் கதி நெப்போலியனின் கதியையே தொடர்ந்தது. ரஷியத்துருப்புகள் நாளுக்கு நாள் முன்னேறிச் சென்று, தமது இழந்தபிரதேசங்கள் முழுவதையும் பிடித்தபிறகு ருமேனியா, போலந்து, பின்லந்து, லாட்வியா, லிதுவேனியா, பல்கேரியா, யூகோஸ்லேவியா, ஹங்கேரி, கிழக்குப்பிரஷ்யா முதலியநாடுகளே ஒவ்வொன்ருகப் பிடித்துக்கொண்டு 15-2-1942-ம்டை வாக்கில் அசல் ஜெர்மன் பிரதேசத்திற்கு மாயமாக முன்னேறிவந்து விட் டன. ரஷியர்களுக்கும், ஜெர்மானியர்களுக்குமிடையில் கோரப் போர் நிகழ்ந்தது. இதுவரை உலக சரித்திரத்திலேயே இது போன்ற கடும்போர் நிகழ்ந்ததே இல்லே. ஹிட்லரே நேரில் நின்று தனது துருப்புகளே ரஷியர்களுக்குக்கெதிராக நடத்திச் சென்ருர். ஜெர்மானியரின் கவனம் இவ்விதமாக ரஷியர்களிடம்

சென்றிருக்கையில், அமெரிக்க—கனடிய—பிரிட்டிஷ் துருப்புகள் திரும்பவும் முன்னேறி 4-2-1945-ல் பெல்ஜியத்தைக் கைப்பற்றிவிட்டன. பிறகு சிறிது வேகமாக அசல் ஜெர்மனிக்குள் முன்னேறத் தொடங்கின.

## சாவு மணி

ஹிட்லர் ஜெர்மனியின் அந்திய காலத்தை நினைக்கவே நெஞ்சு துடிக்கிறது. தோற்றவரிடம் கருணைகாட்டுவது நீதிமான்களின் குணம். நான்கு பக்கங்களிலிருந்தும் ரஷிய-பிரஞ்சு-அமெரிக்க-பிரிட்டிஷ் படைகள் கிட்டிபோட்டதுபோல் பெர்லினை நோக்கி பயங்கரமாக வந்துகொண்டிருக்கையில், ஜெர்மானியர்களின் மனம் எவ்விதம் துடிதுடித்திருக்குமோ நாமறியோம். ஜெர்மன் சர்க்கார் பிரிட்டிஷ்-அமெரிக்கரிடம் மட்டும் சரணடைய விரும்புவதாகவும், ரஷியரை எதிர்த்துப்போரிடப் போவதாகவும் ஜெர்மன் எஸ். எஸ். படைத்தலைவர் ஹிம்ளர் ஸ்வீடன் ஸ்தானீகர் வழியாக 24-4-1945-ல் அறிவித்தார். இதை ஏற்றுக் கொள்ளவில்லை. ஏனெனில் பொதுவுடமை ரஷியக்காடி பொல்லாதது. அடுத்த நாள் ஜெர்மன் படைத்தலைவர் பிரமன் பிரிட்டிஷாரிடம் சரணடைந்தார். இதற்கிடையில் ஜெர்மனி இரு துண்டங்களாகிவிட்டது. ஒரு பாதி ரஷியா வசம். மறு பாதி ஆங்கிலோ-அமெரிக்க-பிரஞ்சுத் துருப்புகள் வசமாயிற்று. ஏப்ரல் 29உ அமெரிக்கர்கள் மியூனிக்கில் நுழைந்தனர். ஆஸ்திரியாவும், ஸ்லோவகியாவும் 13-ந் தேதியே ரஷியர்களிடம் போய்விட்டன. மே மாதமும் ஆரம்பித்தது. ஜெர்மனியின் சாவுமணி ஓசையும் கேட்டது.

இங்குமங்குமாக இருந்த ஜெர்மன் துருப்புகளுக்கு முன்போல வேகமில்லை. நாடி தளர்ந்துவிட்டது. பெர்லின் தலைமைக்காரியாலயத்திலிருந்து ரஷியர்களுடன் போர்புரிந்தவாறே ஹிட்லர் 1-5-1945-உ இறந்துவிட்டாரென்று ஜெர்மானியர்கள் கூறினர். அட்மிரல் டோனிட்ஸ் ஹிட்லருக்குப் பதிலாக நியமிக்கப்பட்டு, புதிய சான்சலரானார். பெர்லின் நகரம் ரஷியர்களிடம் சரணாகதியடைந்தது. அடுத்தநாள் ஹேம்பர்கைப் பிரிட்டிஷ் துருப்புகள் பிடித்தன. இதற்குமேல் அங்கு ஆங்கிலோ-அமெரிக்க-பிரஞ்சுத் துருப்புகள் செய்ததெல்லாம் "செத்த பாம்பை அடிக்கும்" விக்கிரம சாகஸங்கள் தான்.

ஏனெனில் ரஷியர்கள் ஜெர்மன் கொம்பேறி மூக்கனின் பல்லை ஏற்கனவே பிடுங்கிவிட்டனர்.

இறுதியாக ஐரோப்பாவெங்குமிருந்த ஜெர்மன் துருப்புகள் அனைத்தும் 7-5-1945-ல் நிபந்தனையின்றி சரணாகதியடைந்தனவென்று நேசதேசங்கள் கூறின. ஆனால் ஜெர்மனியெங்கும் நேசதேச ஆக்ஷிக்கெதிராக ஜெர்மானியர்கள் இங்குமங்குமாகக் கலகம் செய்து வருகின்றனரென செய்தி ஸ்தாபனங்கள் கூறின. எங்ஙனமாயினும் யுத்தத்தால் வந்த யுத்தமாகிய இந்த இரண்டாவது உலகமகா யுத்தத்தை ஆரம்பித்து வைத்த ஜெர்மனி இறுதியில் தோற்று விட்டது. அது இன்று அமெரிக்க ஜெர்மனி, பிரிட்டிஷ் ஜெர்மனி, பிரஞ்சு ஜெர்மனி, ரஷிய ஜெர்மனி என்று சித்திரவதை செய்யப்பட்டிருக்கிறது. இவ்விதமாக மூன்றாவது மகாஜெர்மனியும் பகற்கனவாயிற்று.

## ஜப்பான் வீழ்ச்சி

1942-ம் வருட முடிவிற்குள் ஜப்பான் கிழக்காசியாவில் மேற்கு நாடுகளுக்கிருந்த சகல பிரதேசங்களையும் பிடித்துக் கொண்டு வெற்றிவீரனாய் விளங்கிற்று. கால்நுழையாத இடத்தில் தலையை மாட்டிக்கொண்டது. 1943-ம் வருடமும் ஆரம்பித்தது. எழரை நாட்டானும் ஜப்பானைத் தொடர்ந்தான். அமெரிக்கத் துருப்புகள் பிலிப்பைனிலுள்ள கூடல் கேனாரை கடும் போரிட்டு பிப்ருவரியில் திரும்பப் பிடித்தன. ஜப்பானியக் கடற்படையையும் இதற்கிடையில் கண்டகண்ட விடங்களில் அமெரிக்கரால் நிர்மூலமாக்கப்பட்டது. மே மாதத்தில் அட்டுவையும், அடுத்த ஆகஸ்டில் கிஸ்காவையுங்கூட அமெரிக்கா திரும்பப் பிடித்துவிட்டது. ஆனால் இதெல்லாம் ஜப்பானுக்குப் பிரமாதமாகத் தோன்றவில்லையெனினும் 1944 ஆகஸ்ட் 9-உ குவாமிலும், சைப்பானிலும் ஜப்பானிய கடற்படை சின்னபின்னப் படுத்தப்பட்டுவிட்டதுதான் அதற்குப் பெருங்கஷ்டமாயிற்று. இதன் பிறகு ஜப்பான் எறியடிக்கமுடியாமற் போயிற்று. இதன் பயனாக டோஜோ ராஜிநாமா செய்ய நேர்ந்தது. ஜெனரல் குனியாகி கொய்ஸோவும், பிறகு அட்மிரல் சுசுகியும் ஜப்பானியப் பிரதம மந்திரிகளாயினர். ஆனால் ஜெயித்தப்பாடில்லை. தோல்வி மேல் தோல்வி. என்றாலும் ஜப்பானியர்கள் தமது பாரம்பரிய

வீராவேசத்துடன் போராடினர். எதிரிகளுக்கு அளவற்ற சேதத்தை யுண்டாக்கினர். ஆனால் ஜப்பான் பிடித்த பிரதேசங்களை அமெரிக்கா ஒவ்வொன்றாகப்பிடித்துக் கொண்டேவந்து 1-4-1945-ல் ஜப்பானுக்குச் சொந்தமான ஒகினவா தீவில் தனது துருப்புகளை இறக்கிவிட்டது.

செபஸ்டபோல், ஸ்டாலின் கிரேட், பெர்லின் முதலிய விடங்களில் நடந்ததுபோன்ற கோர யுத்தம் ஒகினவாவில் மூன்று மாதம்வரை நடந்தது. இதற்கிடையில் அமெரிக்க ராக்ஷஸ விமானங்கள் ஜப்பானியர் வசமிருந்த சகல பிரதேசங்களையும் கண்மூடித்தனமாகத் தாக்கிப் பாழ்ப்படுத்திவிட்டன. கடவுளாகக் கருதப்பட்ட ஜப்பானிய சக்ரவர்த்தியின் அரண்மனைகூட தரைமட்டமாயிற்று. 1945 ஜூலை முடியுமுன்பே கொஞ்ச நஞ்சம் மீந்திருந்த ஜப்பானியக் கடற்படையையும் பிரிட்டிஷ்-அமெரிக்கர்கள் வேலைதீர்த்துவிட்டனர்.

எனவே ஜப்பான் தனது தூரப்பிரதேசங்களுக்குப் போதிய சப்ளைகளைச் செய்தனுப்ப முடியாது போயிற்று. இதற்குள் இந்தியாவிலிருந்த பிரிட்டிஷ் நேசதேசப் படைகள் கிழக்கு இந்தியாவை ஆண்டுவந்த இந்திய தேசிய இராணுவத்தை எதிர்த்துப் போராடிய பிறகு, பர்மாவிற்குள் நுழைந்தன. மே மாதம் முடியுமுன்பே தரைமட்டமாகத் தகர்ந்துபோன பர்மா பிரிட்டன் வசமாயிற்று. அங்கிருந்து தப்பிய இந்திய தேசிய இராணுவம் சயாம் வந்து சேர்ந்தது. ஜப்பானியர்கள் பின்வாங்குவதும், சரணடைவதும் பழக்கமில்லை. சகலரும் யுத்தம் செய்து மாண்டனர். ஜப்பான் இழந்த ஒவ்வொரு பிரதேசத்திலும் இப்படியேதான். உதாரணமாக ஒகினவாவிலிருந்த சிவிலியன் ஆண், பெண், குழந்தைகள்கூட கூண்டோடு கைலாசம் சென்றுவிட்டனரென்றால் ஜப்பானியரின் சுயமரியாதை உணர்ச்சி எத்தகையதென்பதை வாசகர்கள் நன்கு ஊகித்துக்கொள்ளலாம். இத்தாலியும், ஜெர்மனியும் சரணடைந்துங்கூட ஜப்பான் தனிமையாகத் தொடர்ந்து போராடத் தீர்மானித்ததற்குக் காரணம் அதனுடைய சுயமரியாதையுணர்ச்சிதான்.

ஜெர்மனி சரணடைந்ததும் நேசதேசத்தினர் தமது முழுப் பலத்தையும் ஒன்றுதிரட்டி ஜப்பானைத் தாக்கத் திட்டம்போட்டனர். ஜப்பானும், அமெரிக்காவும் தனித்தனியாக யுத்தம் செய்திருந்தால் அமெரிக்கா தோற்றிருக்கும். ஆனால் ஓர் சிறிய

நாடாகிய ஜப்பானைத் தோற்கடிக்க சர்வலோகமும் ஒன்று சேர்ந்தது. 5000 நேசதேச பூதவிமானங்கள் ஜப்பானை இடைவிடாது இரவுபகலாகத் தாக்கி, சுற்றிவளைத்துக் கொண்டன. ரியூகியூ தீவுகளில் ஜப்பானியர் நடத்திய போரைப்போல இந்த உலகில் இதுவரை அவ்வளவு பயங்கரப்போர் எதுவும் நடந்ததே இல்லை. என்றாலும் ஜப்பான் அடிபணிய மறுத்துவிட்டது. ஆனால் 5-8-1945-ல் அணுகுண்டு என்ற ராக்ஷஸ வெடிகுண்டை அமெரிக்கர் ஹிரோஷிமா எனும் ஜனநெருக்கமிருந்த ஜப்பானிய நகர்மீது வீசினர். 4 சதுரமைல்கள் நாசமாயின. அங்கிருந்த ஈங்குருவிகூட இறந்துவிட்டது. எனினும் ஜப்பான் அடிபணிய மறுத்தது. பிரதமர் சுசுகி ராஜிநாமாசெய்தார். ஷிதஹாரா பிரபு புதிய ஜப்பானிய பிரதமரானார். எரிகிற வீட்டில் பிடுங்கியது லாபம். ஆங்கிலோ-அமெரிக்க வேண்டுகோளுக்கிணங்க 9-5-1945-ல் ரஷியாவும் ஜப்பான்மீது யுத்தப்பிரகடனம் செய்தது. அன்றே நாகாசகி நகரும் அணுகுண்டுக்கு இரையாக்கப்பட்டது. ஒருபாவமுமறியாத பொதுஜனங்களும், இதர ஜீவராசிகளும் கொன்று குவிக்கப்படுவதைக் கண்டு மனம் நொந்த ஜப்பானிய சக்ரவர்த்தியின் உத்திரவுக்கிணங்க ஜப்பானிய சர்க்கார் 10-8-1945-ல் போட்ஸ்டாம் பிரகடனப்படி, சுதந்திர மன்னர் என்ற ஹோதாவில் தம் சக்ரவர்த்திக்கு நேசதேசத்தினர் முழுமரியாதை காட்டவேண்டுமென்ற ஒரேயொரு நிபந்தனையின் பேரில் சரணடையத்தயாரென அறிவித்தது. ஜப்பான் இவ்விதம் இணங்குமென நேசதேசத்தினர் கனவுகூட கண்டிரார். எனவே எதிர்பாராமல் ஜப்பான் இணங்கியதில் ஆனந்தகொண்ட நேசதேசத்தினருக்கும், கவலையே உருவான ஜப்பானியருக்குமிடையில் சரணாகதி பேச்சு வார்த்தைகள் ஆரம்பமாயின. யுத்தத்தை நிறுத்தும்படிக்கு இருதரப்புத் துருப்புகளுக்கும் உத்திரவிடப்பட்டது. 19-8-1945-ல் ஜப்பானியத் தூதுவர்கள் விமானத்தில் மணிலா வந்து சேர்ந்தனர். டோக்கியோவில் சமாதான ஒப்பந்தத்தில் கையெழுத்திடவேண்டி எடுத்துக்கொள்ளப்படும் நடவடிக்கைகள் நிர்ணயிக்கப்பட்டன. கடந்த 2605 வருடங்களாக சுதந்திரத்துடன் விளங்கிய ஜப்பான் இந்த தேதியிலிருந்து அமெரிக்க நேசதேசங்களிடம் உத்திரவுகளுக்கு முடிவணங்கவாரம்பித்தது. 2-8-1945-ல் டோக்கியோவில் நங்கூரம் பாய்ச்சிய மிஸௌரி என்ற அமெரிக்க யுத்தகப்பலில் ஜப்பான் சரணாகதி

ஒப்பந்தத்தில் கையெழுத்திட்டது. அந்தமான், நிக்கோபார், சயாம், மலாயா, இந்தோனேஷியா, இந்தோ சீனு, ஹாங்காங், மஞ்சுகோ, கொரியா போன்ற பிரதேசங்களும், இன்னும் கிழக்காசியாவில் ஜப்பான் வசமிருந்த இதர சகலபிரதேசங்களும் யுத்தமின்றியே ஆங்கிலோ-அமெரிக்க-டச்சு-பிரஞ்சு ஏகாதிபத்தியங்களுக்குக் கிடைத்துவிட்டன. ஆங்காங்கிருந்த ஜப்பானியத் துருப்புகளை நேசதேசத்தினர் கூலிகளாக வேலைவாங்குகின்றனர். அசல் ஜப்பானெங்கும்கூட நேசதேசத் துருப்புகள் அமுல் செலுத்துகின்றன. 2605-வருட சரித்திரப் பெருமைவாய்ந்த ஜப்பானிய சாம்ராஜ்யம் தவிடுபொடியாயிற்று. ஜப்பானிய கல்வி, கலாசாரம், நாகரிகம் சகலமும் மாற்றப்பட்டு வருகின்றன. அதன் கைத்தொழில்கள் நாசப்படுத்தப்படுகின்றன. இந்நிலைமையில் இன்னும் பத்து வருடங்களில் ஜப்பானியர் மிகவும் பிற்போக்கடைந்துவிடுவர்.

யுத்தத்திற்குப் பொறுப்பாளிகளெனவும், அக்கிரமக்காரர்களெனவும்கூறி ஆயிர ஆயிரக்கணக்கான இத்தாலிய-ஜெர்மன்-ஜப்பானியத் தலைவர்களை நேசதேசத்தினர் உலகமெங்கும் விசாரணை செய்து தூக்கிலிட்டும், சுட்டும், சிறையிலிட்டும் வருகின்றனர். சில அச்சுத் தலைவர்களும், இராணுவத்தலைவர்களும் நேசதேசத்தினரிடம் சிக்காமல் தற்கொலை செய்துகொண்டும் மாண்டுவருகின்றனர். இவர்களின் பெயர்களைமட்டிலும் வெளியிட ஓர் பெரிய பாரதம் வேண்டும். என்றாலும் ரிப்பன்ட்ராப், கெய்ட்டல், கெப்பல்ஸ், கோரிங், ஹிம்லர், டோனிட்ஸ், வான் போப்பன், டோஜோ, கொன்னேயி இளவரசர், யாமாஷிதா, ஹோமா போன்ற பிரபலஸ்தர்களின் பெயர்கள் குறிப்பிடப்பட்டாகவேண்டும். இவ்வித அச்சுத் தலைவர்களைத்தண்டிக்க நேசதேசத்தினர் கூறும் நியாயம் ஏதாயிருப்பினும் சரியே, அச்சு நாடுகளின் எதிர்கால சந்ததியினர் இத்தலைவர்களைப் பெருந்தெய்வங்களாகப்பாவித்து, இதற்கெல்லாம் பழிவாங்க மூன்றாவது உலகமகா யுத்தத்தை எப்பொழுது ஆரம்பிப்பரென்று நம்மால் ஜோஸியம் கூறமுடியாது. ஆனல் சுயமரியாதையுணர்ச்சியை அடக்கிநசுக்க அணுகுண்டாலும் முடியாதென்பது மட்டிலும் நிச்சயம்.

ஜெனரல் யாமாஷிதா "மலாயா புலி" எனும் கீர்த்திபெற்றவர். அவரின் கீழிருந்த துருப்புகள் தம் வசமிருந்த நாடுகளில்

அக்கிரமம் செய்ததாக யாமாஷிதாவுக்கு பிலிப்பைனில் அமெரிக்க இராணுவக்கோர்ட்டார் மரணதண்டனை விதித்தனர். தான் நிரப்ராதியென்றும், தனக்குத் தெரியாமல் தன் துருப்புகள் செய்ததாக நேசதேசத்தினர் சொல்லும் குற்றங்களுக்காகத் தன்னைத் தண்டிப்பது கடவுளுக்கும் சம்மதமாகாதென்றும் யாமாஷிதா கூறினர். ஆனல் 1942-ல் ஜப்பானியரிடம் சிக்காமல் பிலிப்பைனிலிருந்து ஓட்டம்பிடித்த அமெரிக்க சேனதிபதி ஜெனரல் மெக்கார்தர் ஜப்பான் சரணகதியால் திரும்பிவந்து ஜப்பானை அடக்கியாளுகையில் 7-2-1946-ல் கூறியதாவது:— "ஜெனரல் யாமாஷிதாவுக்கு விதிக்கப்பட்டுள்ள மரணதண்டனையை நான் இன்று ஊர்ஜிதப்படுத்துகின்றேன். இராணுவ உத்தியோகஸ்தரென்று அடையாளமாகத் தோன்றும் உடுப்புகள், விருதுகள், பட்டம், பதக்கங்கள் போன்ற சகலமும் அவரது திரேகத்திலிருந்து களைந்தெறியப்பட்டு, அவர் ஓர் மூர்க்கனைப்போல் தூக்கிலிடப்பட வேண்டும்." யாமாஷிதா அவ்விதமே கொல்லப்பட்டார்.



### அன்று ராஜா
### இன்று தோட்டி

மலாயா ஜப்பானியரிடம் இருந்த காலத்தில் சிங்கப்பூரிலிருந்த நேசதேச யுத்தக் கைதிகளின் சிறை முகாம்களுக்குத் தலைவராயிருந்த மேஜர் ஜெனரல் சயித்தோ, தனது தாய்நாடு சரணகதியடைந்ததன் பயனக இப்பொழுது சிறையிடப்பட்டிருக்கும் தனது கூண்டைத் தானே கூட்டி சுத்தப்படுத்துவதை இப் படம் சித்தரிக்கிறது. ஏன் சுதந்திரமாய் வாழ வேண்டுமெனும் கேள்விக்கு இப்படம் தக்க பதில்

அளிக்கும். ஆனல் ஜப்பானியர் சிறிது, பெரிதென்ற வித்தியாசமின்றி எந்த வேலையையும் செய்யும் பெருந்தன்மையுடையோர் என்ற உண்மையையும் இப்படம் நிரூபிக்கிறது. (இப்படம் மலாயா பி. இ. ச. பிரசார இலாகாவினுடைய தயவில் பிரசுரிக்கப் படுகிறது.

---

## அத்தியாயம்—12

---

### அடுத்த யுத்தம் எப்பொழுது?

[இதில் ஏகாதிபத்திய சூழ்ச்சிகள்—அட்லாண்டிக் சாஸனம் போன்ற பிரசார மகாநாடுகள்—ஐக்கிய நாடுகள் ஸ்தாபனம்—ஆசியாவில் வெள்ளையர் நடத்தும் அடக்குமுறைகள்—கொதித்தெழும் ஆசிய மக்கள் போன்ற விஷயங்கள் கூறப்பட்டுள்ளன.]

பிரசாரம் என்ற வார்த்தைக்கு சகல உண்மைகளையும் மக்களுக்கு விளங்கவைத்தல் என்று அர்த்தம். ஆனல் யுத்தத்தில் ஈடுபட்ட நாட்டுத்தலைவர்கள் தத்தம் கக்ஷிகளையே நியாயமானதென நம்பும்படி உலக மக்களுக்குச் செய்த பிரசாரத்தில் பொய்யும், புனைசுருட்டும் மலிந்திருந்தன. இருதரப்பினரும் தத்தம் குற்றங்குறைகளை மறைத்து, மாற்றானை இழிவுபடுத்தும் முறையிலேயே பிரசாரத்தையும், யுத்தத்தையும் நடத்திவந்தனர். உலகிலுள்ள சகல சிறிய, பெரிய நாடுகளதும் சுதந்திரத்திற்காகவே போர்புரியும் பரோபகார பரிசுத்தர்களென தம்மை உலக மக்கள் நம்பும்படி நேசதேசத்தினர் யுத்தமாரம்பமான 1-9-1939-லிருந்து செய்த பிரசாரங்களில் "அட்லாண்டிக் சாஸனம்" "யால்டா உடன்படிக்கை" "டெஹ்ரான் பிரகடனம்" "கெயிரோ மகாநாடு" "சான் பிரான்ஸிஸ்கோ ஒப்பந்தம்" "போட்ஸ்டாம் பிரகடனங்கள்" போன்றவை மிகவும் குறிப்பிடத்தக்கவை.

இவைகளின் மூலகர்த்தாக்கள் இவற்றின் மூலம் உலக மக்களுக்குப் பின்வரும் வாக்குறுதிகளைக் கொடுத்திருக்கின்றனர். "உலகிலுள்ள சகல நாடுகளும் தாம்தாம் சுதந்திரமாக வாழ வசதி செய்து கொடுப்போம். எந்த ஓர் நாடும் எவ்

விதக் காரணத்தை முன்னிட்டும் பிறநாடுகளை அடிமைகளாக வைத்துக்கொள்வதை அனுமதிக்கோம். சிறிய நாடுகளும், பெரிய நாடுகளும் ஜாதி, மத, நிறபேதமின்றி சமத்துவமாக வாழவேண்டும். எங்கும் ஜனநாயகம் (பொது ஜனங்களின் விருப்பப்படி நடக்கும் ஆட்சி முறை) அனுஷ்டிக்கப்படவேண்டும். உலகில் இனிமேலாவது யுத்தமேற்படாதவாறு சரியாகக் கவனிக்க ஓர் தக்க ஸ்தாபனத்தை சிருஷ்டிக்க வேண்டும். ஷை லக்ஷியங்களைப் பாரபட்சமின்றி கட்டாயம் செய்கையில் காட்டுவதாக இதில் கையொப்பமிட்டுள்ள நேசதேசப் பிரதிநிதிகளாகிய (பிரிட்டிஷ் சர்ச்சில், அட்லி, அமெரிக்க ரூஸ்வெல்ட், ட்ரூமன், ருஷிய ஸ்டாலின்) நாங்கள் ஏகோபித்து இதன் மூலம் உலக மகா ஜனங்களுக்குச் சத்தியம் செய்து பிரகடனப்படுத்துகிறோம்."

1918—1939-ம் வருடங்களுக்கிடையில் உலகைப் பாழாக்கிய சர்வதேச சங்கத்திற்குப் பதிலாக இப்பொழுது உலக ஐக்கிய நாடுகள் ஸ்தாபனம் என்ற ஒன்று சிருஷ்டிக்கப்பட்டிருக்கிறது. இதை சிருஷ்டிக்க வேண்டிய நடவடிக்கைகள், சட்டதிட்டங்கள் ஆகியவை சான் பிரான்ஸிஸ்கோ மகாநாட்டில் எடுத்துக் கொள்ளப்பட்டன. இந்த ஸ்தாபனத்தில் உலகின் மனிதவர்க்கத்தின் நலன்களைக் :கவனிக்க தனித்தனியாக பல சபைகள் இருக்கின்றன. உலகில் யுத்தமேற்படாமல் பார்த்துக்கொள்ள அதன் உலகப் பாதுகாப்புசபை வேலைசெய்யும். இந்த சபை அடிமையாகத் தவிக்கும் நாடுகள் சுதந்திரம் கோரி போர் தொடுத்தால் அதையும் நசுக்கும், அல்லது எளியாரை வலியார் வாட்டுவதைப் பார்த்துக்கொண்டிருக்கும் என்பதற்கு போதிய சான்றுகள் ஏற்பட்டிருக்கின்றன.

தோல்வியுற்ற அச்சு நாடுகளுக்கு இதில் இடமில்லை. வேறு சில நாடுகளும் இதில் சேர்த்துக்கொள்ளப்படவில்லை. இதில் தற்சமயம் 51-நாடுகள் அங்கம் வகிக்கின்றன. அமெரிக்கா, பிரிட்டன், ருஷியா இம்மூன்றும்தான் இதில் சட்டாம்பிள்ளைகளாக விளங்குகின்றன. விளையும் பயிர் முளையிலேயே தெரியும். காலஞ் சென்ற சர்வதேச சங்கத்தில் நடந்த சூழ்ச்சிகள் ஐக்கிய நாடுகள் ஸ்தாபனத்திலும் நுழையவாரம்பித்துவிட்டன. ருஷியா அத்தகைய சூழ்ச்சிகளுக்குக் குழிதோண்ட முயற்சிக்கிறது. ஆனால் வெள்ளை ஏகாதிபத்தியங்கள் வேறு

சாக்கு போக்குகளைச் சொல்லி ரஷியாவை முட்டாளாக்கப் பார்க்கின்றன. சர்வதேச சங்கத்திற்கேற்பட்ட தலைவிதியே இந்த ஐக்கிய நாடுகள் ஸ்தாபனத்திற்கும் ஏற்படும்.

ஐக்கிய நாடுகள் ஸ்தாபன உலகப் பாதுகாப்பு சபை இந்தோனேஷியப் பிரச்னையைக் கையாண்ட முறையைக் கண்டித்து, பிரபல அமெரிக்கப் பத்திரிகையான சிகாகோ ட்ரிப்யூன் 14-2-1946-ம் தேதி "அடிமை வியாபாரி" என்ற தலைப்பின் கீழ் வரைந்த தலையங்கத்தில் பிரிட்டிஷ், டச்சு, அமெரிக்க சர்க்கார்களை பின்வருமாறு தாக்கி எழுதியது.

"இந்தோனேஷிய சுதந்திரப் பிரச்னையைத் தீர்க்க ஐக்கிய நாடுகள் ஸ்தாபனம் கையாளும் முறையானது என்றென்றைக்கும் மறக்கமுடியாத ஆஷாடபூதித் தனத்தின் ஞாபகச் சின்னமாக விளங்கும். 7-கோடி இந்தோனேஷியர்கள் தம்மைத் தாமே ஆண்டுகொள்ளும் உரிமையை விரும்புகின்றனர். இது நியாயமற்ற விருப்பமென்றால் நமது (அமெரிக்கச்) சுதந்திரப் பிரகடனம் பகல் கொள்ளையாக கருதப்படவேண்டும். இந்தோனேஷியாவுக்கு பல்லாயிரக்கணக்கான மைல்களுக்கப் பாலுள்ள ஒரு சில லக்ஷம் ஜனங்களைக்கொண்ட ஹாலந்து சார்பாக இந்தோனேஷிய சுதந்திரத்தை எதிர்ப்பவர்கள், மண்குதிரையை நம்பி ஆற்றிலிறங்க எத்தனிப்பவராவர்.

என்றாலும் இதோனேஷியாவை அடிமையாக்கி வைக்க ஹாலந்துக்குப் பிரிட்டன் அரசியல் ஆதரவும், ஆயுத உதவியும் செய்துவருகிறது. இதற்குக் காரணம் பிரிட்டன் தனது சொந்த ஏகாதிபத்தியத்திற்குத் துணைதேடிக்கொள்ள விரும்புவதுதான். ஆனால் இதில் ட்ரூமன் ஒன்றும் சம்பந்தப்படாததைப்போல் பசப்ப முயற்சிப்பதுதான் வேடிக்கையாகும். பெவின் எவ்வளவு தூரம் ஆஷாடபூதி வேஷம் போடுகின்றாரோ, அதேபோல்தான் ட்ரூமனும் வேஷம் போடுகிறார் என்பது இதிலிருந்து தெளிவாகிறது. உண்மையில் நம் (அமெரிக்க) சர்க்கார்தான் இந்தோனேஷியாமீது படையெடுக்கும்படி பிரிட்டிஷாருக்கு உத்தரவிட்டனர். இந்த உண்மையை பிரிட்டிஷ் ஸ்தானிகர் ஹலிபாக்சும், நமது சர்க்காரும் ஊர்ஜிதம் செய்திருக்கின்றனர்.

பிரிட்டிஷ்காரர்கள் நமது ஆயுதங்களை வாங்கி, ட்ரூமன், பைரன்ஸ் இவர்களின் சம்மதம் பெற்றே இப்பொழுது இ

தோனேஷியர்களைக் கொன்று குவித்து வருகின்றனர். நாம் இதெல்லாம் ஒன்றும் ஏற்படாமலே தடுத்திருக்கலாம். ஜப்பானியர்கள்தான் பிரிட்டிஷ்காரர்களேயும், டச்சுக்காரர்களேயும் உதைத்து விரட்டிவிட்டார்களே! பிறகு நாம் இல்லாவிட்டால் ஜப்பானியர்களே இந்தோனேஷியாவிலிருந்து வெளியேற்ற பிரம்மாவாலும் முடிந்திராது. எனவே இந்தோனேஷியப் பிரச்னையைத் தீர்க்கும் பொறுப்பு நம்முடையதாகும். ஆகவே ட்ரூமன் இந்தோனேஷிய சுதந்திரத்தை அங்கீகரித்திருக்கலாம். ஆனால் அவர் ஆசிய மக்களின் அடிமைத்தனத்தை சாஸ்வதமாக்க விரும்புகிறார். அவர் சமாதானத்தை ஏற்படுத்தியிருக்கலாம். ஆனால் சண்டையை மூட்டிவிட்டிருக்கிறார். அவர் இவ்விதம் தீர்மானித்த விஷயம் நம்மிடம் (அமெரிக்க பொது ஜனங்களிடம்) கலந்தாலோசிக்கப்படவில்லை. ஆகவே இந்தோனேஷியாவின் தலையில் கல்லைப்போட்ட பாவத்திற்கு நிரபராதிகளான அமெரிக்கப் பொதுஜனங்கள் இன்று இலக்காகி நிற்கின்றனர்.

இன்று அமெரிக்க சுதந்திர வீரர் ஆப்ரகாம் லிங்கன் பிறந்த தினம். அந்த வீரரை இன்று வணங்கும் அமெரிக்கர்கள், அவரது ஸ்தானத்தில் சிறிதும் யோக்கியதையில்லா ட்ரூமன் வீற்றிருப்பதைக் கண்டு மிகவும் வருந்துகின்றனர்."

மேலே கண்டதிலிருந்து நாம் விளங்கிக்கொள்வதென்னவெனப் பார்ப்போம். அற்பனுக்கு பவிசு வந்தால் அர்த்தராத்திரியில் குடைபிடிப்பான் என்ற மாதிரி அன்று சுதந்திரத்தின் மகிமையை உலகிற்குக் காட்டிய அமெரிக்க சர்க்காரை இன்று உலகில் அடிமைத்தனத்தை ஸ்தாபிக்கும்படி ட்ரூமன் ஏவுகிறார். ஐக்கிய நாடுகள் ஸ்தாபனம் ஓர் ஆஷாடபூதி ஆலயமாக விளங்குகிறது. அதிலுள்ள சட்டாம்பிள்ளைகள் வேஷம் போடுகின்றனர். மற்றவர்கள் பெருமாள் மாடுகளைப்போல் தலையையாட்டும் ஆமாஞ்சாமிகளாய் இருக்கின்றனர். மேலும் ட்ரூமனைப்போன்ற ராக்ஷஸர்களின் பெயரை நாம் இதிகாசங்களிலும் கேட்டிரோம். அணுகுண்டை ஜனங்கள்மீது வீசலாமென எந்த சர்வதேச சட்டம் கூறுகிறது? இவ்விஷயத்தில் ரூஸ்வெல்ட் ஓர் மேதாவிதான்.

இன்று உலகிலுள்ள சகல ஏகாதிபத்திய சர்க்கார்களும் தம் குடியேற்றநாட்டுப் பொது ஜனங்கள் வலிய ஒத்துழைப்பதாகப் பறைசாற்றிக் கொள்ளுகின்றது. அதே சமயத்தில்

தாம் வெளியிடும் உத்திரவுகளுக்குக் கீழ்ப்படியா பொதுஜனங்களைத் தண்டிப்பதாகப் பயமுறுத்தி அறிக்கைகள் வெளியிடுகின்றன. இது முன்னுக்குப்பின் முரணான விஷயமாகும். இவ்வித உண்மைக்கு மாறான விஷயங்களைத்தான் இன்று ராஜதந்திரம் என்று கூறுகின்றனர். இதை ஏகாதிபத்திய தந்திரமென்று கூறுவதுதான் நன்கு பொருந்தும்.

சர்வதேச சங்கம் என்ற தோலைப் போர்த்திக் கொண்டு, 1918-39-ம் வருடங்களுக்கிடையில் ஏகாதிபத்திய நாடுகள் எவ்விதம் தமது பரந்த சாம்ராஜ்யங்களைச் சிரஞ்சீவியாகப் பாதுகாத்துக்கொள்ள தகடுதத்தம் செய்து வந்தனவோ, அதேபோல் 1939-45-ம் வருடங்களுக்கிடையிலும், இப்பொழுதும் ஐக்கிய நாடுகள் என்ற தோலைப்போர்த்திக் கொண்டு அவைகள் பகல் வேஷம் போட்டு வருகின்றன. இவைகளின் இத்தகைய சூழ்ச்சிகளின் விளைவாக "பிரசாரம்" என்ற வார்த்தைக்கு பொய்யை மெய்யாகச் சித்தரிப்பதென்ற அர்த்தம் கூட ஏற்பட்டுவிட்டது.

அட்லாண்டிக் சாஸனப் பிரகடனப்படி எங்கள் நாட்டை எங்களிடம் ஒப்படைத்துவிட்டு ஒரு நிமிஷங்கூட தாமதிக்காது நீங்கள் வெளியேறிவிடுங்கள் என்று ஏகிப்து, அரபு நாடுகள், இந்தியா, பர்மா, மலாயா, இந்தோனேஷியா, பிலிப்பைன், இந்தோ-சைனு, சயாம் போன்ற நாட்டு மக்கள் ஆங்கிலோ-அமெரிக்க-டச்சு-பிரஞ்சு ஏகாதிபத்தியங்களுக்கெதிராக இன்று செய்யும் ஆர்ப்பாட்டங்களையும், யுத்தங்களையும் அந்த ஏகாதிபத்தியங்கள் தமது ஆயுத-இராணுவ சக்திகளைக்கொண்டு லக்ஷலக்ஷமான மக்களைச் சிறையிலிட்டும், கொன்றும் அடக்கிவருவதும், அவைகள் பிரகடனப்படுத்திய சாஸனங்களும் ஒன்றுக்கொன்று எவ்வளவு நேர்மாறானவை யென்று யோசித்துப்பார்ப்பீர்களாக! இவ்வித ஏகாதிபத்தியம் திரும்ப ஸ்தாபிக்கப்படுவதை எதிர்ப்பவர்கள் நாடுகடத்தப்படுவர் என்றும் உத்திரவிடப்பட்டிருக்கிறது. பத்திரிகைகளுக்கு வாய்ப்பூட்டிடப்பட்டிருக்கிறது. ஆசிய-ஆப்ரிக்க நாட்டு மக்களின் தேசிய சுதந்திரம், பேச்சு சுதந்திரம், எழுத்து சுதந்திரம், பத்திரிகை சுதந்திரம், பொருளாதார சுதந்திரம், சமுதாய சுதந்திரம், அரசியல் சுதந்திரம், சங்க ஸ்தாபித சுதந்திரம் ஆகிய எல்லாம் யுத்தம் நடக்கும்போதுதான் நேசதேசங்கள் என்ற வெள்ளை





ஏகாதிபத்தியங்களால் பிரமாதமாகப் பேசப்பட்டு வந்தன. ஜப்பான் சரணாகதியடைந்ததும் அவைகளை மறந்த ஏகாதிபத்தியங்கள் இன்று திரும்பவும் துள்ளிக் குதிக்கின்றன. ஆனால் இலவு காத்த கிளிகளைப்போல் ஏமாந்த ஆசிய-ஆப்ரிக்க மக்கள் இன்று ஏகாதிபத்தியங்களை ஒழிக்க வழிதேடுகின்றனர். இக்கரைக்கு அக்கரை பச்சை என்று கருதுகின்றனர். ஜப்பானின் வீழ்ச்சியைக் குறித்து இப்பொழுதான் வருந்துகின்றனர். மலாயாவிலுள்ள பிரிட்டிஷ் இராணுவ சர்க்கார் விடுத்துள்ள கீழ்க்காணும் அறிக்கையே இதை நிரூபிக்கிறது:- "பிப்ருவரி 15உ சர்க்கார் விடுமுறை நாளல்ல. மலாயா பொதுவுடைமைக் கக்ஷியார் அன்று நடத்தவிரும்பிய பொதுஜனக் கூட்டத்திற்கும், ஊர்வலத்திற்கும் அனுமதிதரப்படவில்லை. [illegible] அத்தகைய கொண்டாட்டம் ஜப்பானின் வெற்றியைச் சிறப்பிப்பதாகக்கருதப்படும்." 15-உ மலாயாவின் சகல நகரங்களிலும் [illegible] மோட்டார்களும், துருப்புகளும், போலீஸாரும பாராசெய்தனர். சிங்கப்பூர் 15-2-1942-ல் ஜப்பானியரிடம் சரணாகதி யடைந்ததன் ஞாபகார்த்தமாக அன்று நடந்த ஓர் பொதுக்கூட்டத்தின்மீது போலீஸார் துப்பாக்கி பிரயோகம் செய்ததால் [illegible] மாண்டனர். பொது ஜனங்களில் பலர் கைது செய்யப்பட்டிருக்கின்றனர். ஜப்பானுக்கெதிராக யுத்தத்திலிறங்கும்படி ரஷியாவை ஆங்கிலோ-அமெரிக்க நாடுகள் கேட்டதற்கும், ரஷ்யா அதற்கு சம்மதித்ததற்கும் காரணமான யால்டா ரகசிய உடன்படிக்கைப்படி, ஜப்பான் வசமிருந்த ஏராளமான பிரதேசங்களை ரஷியாவுக்குப் பிடுங்கிக்கொடுக்க மற்ற இருநாடுகளும் சம்மதித்தனவென்ற உண்மையை மேற்படி மூன்று நாட்டு சர்க்கார்களும் 11-2-1946-ல் வெளியிட்ட அறிக்கைகள் ஊர்ஜிதப்படுத்துகின்றன. நேசதேசத்தினர் என்ற ஏகாதிபத்திய நாடுகள் பிரசாரம் செய்ய உபயோகித்த இதர மகாநாடுகளின் ரகசியங்களும் இப்படித்தான் கடை தேங்காயை எடுத்து வழிப்பிள்ளையார் தலையில் உடைப்பதுபோல் இருக்குமென ஆசிய ஜனங்கள் கருதுகின்றனர்.

எனவே அவர்கள் மேற்கத்திய ஏகாதிபத்தியங்களை உள் [illegible] புறமும் ஒருங்கே வெறுத்துப் போராடுகின்றனர். அவர் தம் உடல், பொருள், ஆவியனைத்தையும் துரும்பென மதித் தமது சுயமரியாதையை எப்படியும் காப்பாற்றிக் கொள் [illegible]



வேண்டுமெனத் திடசங்கல்பம்கொண்டு ஆர்ப்பாட்டங்கள், கலகங்கள், வேலை நிறுத்தங்கள், ஹர்த்தால்கள் முதலியதைச் செய்து வருகின்றனர். ஆனால் ஜப்பானின் தோல்வியால் ஆசிய நாடுகளுக்குத் திரும்பி வந்துள்ள மேற்கத்திய ஏகாதிபத்தியங்கள் தமது பழைய அடக்குமுறை சட்டதிட்டங்களை அமுலுக்குக் கொண்டுவரப் பகீரதப் பிரயத்னம் செய்து வருகின்றன. ஆசிய மக்கள் அடைந்துள்ள சுயமரியாதையுணர்ச்சியின் வேகத்தை அவைகள் இன்னும் உணர்ந்துகொள்ளவில்லை. 1941-ல் ஆசிய மக்கள் வெள்ளையனுக்கு நியாயமான மதிப்புக்கொடுத்தனர். ஆனால் வெள்ளை ஏகாதிபத்தியவாதிகள் திரும்பவும் கையாளும் சூழ்ச்சிகளைக் கண்ட ஆசிய மக்கள் இன்று சகல வெள்ளையன்களையும் மனிதவர்க்கத்தின் பெருந்துரோகிகள் என்று கருதுகின்றனர். மேலும் பிலிப்பைன், பர்மா, இந்தோனேஷியா ஆகிய நாடுகளை ஆங்கிலோ—அமெரிக்க—டச்சு ஏகாதிபத்தியங்களிடமிருந்து ஜப்பான் பிடுங்கியதும், ஆங்காங்கு தேசிய சுதந்திர சர்க்கார்களை ஸ்தாபித்து அங்கீகரித்தது. ஆனால் அத்தகைய தேசீய சுதந்திர சர்க்கார்களை நேசதேசங்கள் திரும்பி வந்ததும் அங்கீகரிக்காததோடு, அந்நாடுகளைத் திரும்பவும் அடிமைகளாக்கிக் கொண்டிருக்கின்றன. சயாம் நாட்டை பிரிட்டன் பழி வாங்கிவிட்டது. இதையெல்லாம் எதிர்த்து இன்று ஆசிய நாடுகளில் நடக்கும் போர்களை அந்த ஏகாதிபத்தியங்கள் எப்படி வேண்டுமானாலும் சித்தரித்துக் காட்டலாம். ஆனால் இதே காரணமாக அடுத்த யுத்தம் கண்டிப்பாய் வந்தே தீரும். ஏனெனில் ஏகாதிபத்திய நாடுகள் தமது பிடியை வாய்ப்பேச்சுகளால் விட்டுக்கொடா. இதர நாடுகளை அவை என்றென்றைக்கும் அடிமைகளாக வைத்திருக்கத்தான் விரும்பும். இவ்விதம் ஏற்படவிருக்கும் யுத்தத்தில் ரஷியாவும், சகல ஆசிய நாடுகளும், சில ஐரோப்பிய நாடுகளும் ஒரு பக்கமாகவும், இதர ஏகாதிபத்திய நாடுகள் எதிர் கக்ஷியாகவும் நிற்க நேரும். அதில் ஏகாதிபத்தியங்கள் சின்னபின்னப்படுத்தப்படுமென்பதில் ஐயமில்லை. அதனால் உலகமெங்கும் ஒவ்வொரு நாட்டிலும் சமதர்ம—பொதுவுடமை—ஜனநாயக சுதந்திர நிர்வாகம் ஏற்படும். பிறகுதான் உலகில் உண்மையான சாஸ்வத சமாதானம் நிலவும். தத்தம் பரந்த சாம்ராஜ்யங்களைக் காப்பாற்றிக்கொள்ள நினைத்து இவ்வித பயங்கர உலக மகாயுத்தம் மூளாதபடி தடுக்க ஏகாதிபத்திய நாடுகள் பகட்டு முயற்சிகள் பலவற்றையும் செய்யும். ஐக்கிய நாடுகள்

ஸ்தாபனம் எல்லாப் பிரச்னைகளையும் பேச்சு வார்த்தைகளினல் சமாதானமாகத் தீர்த்துக்கொள்ள முடியுமென வாய்வேதாந்தம் பேசிக்கொண்டிருக்கும். ரஷியா எவ்வளவோ முயற்சித்துங்கூட கிரீஸ், பாரசீகம், இந்தோனேஷியா ஆகிய நாடுகளிலுள்ள பிரிட்டிஷ் துருப்புகள் மட்டும் வெளியேறியபாடில்லை. ஐக்கிய நாடுகள் எனும் ஏகாதிபத்திய பிரசார மந்திரத்தால் உலக மக்களின் உண்மையான சுதந்திரம் எனும் மாங்காய் தானகப் பழுத்து விடாது. எனவே மூன்ருவது உலக மகா யுத்தம் அடுத்த 15 ஆண்டுகளுக்குள் ஆரம்பிக்குமென எதிர்பார்க்கலாம்.



ண்டை வடிவமான உலகில்
ின் கீழ்கோடி அமெரிக்கா
மேல் கோடியுடன் சேர்வ
பரிங் ஜலசந்தி பிரிக்கிறது.)

வட அமெரிக்கா.

ங்கஸ் தீவு
க்டோரியா தீவு
வல்ஸ் இளவரசர் தீவு
ட்பின் தீவு
ீன்லந்து
சௌத்தாம்டன் தீவு
டக்முறே
ட்மண்டன்
ன்னிப்பெங்
டாரண்டோ
ட்டாவா
ண்ட்ரீல்
ிபெக்
ாவாஸ்கோஷியா
பூபௌண்ட்லந்து
லிபாக்ஸ்
வங்கோவர் தீவு
ன் பிரான்ஸிஸ்கோ
ஸ் ஆஞ்சல்ஸ்
சயிண்ட் லூயிஸ்
காகோ
பூயார்க்
லடெல்பியா
ஷிங்டன்
பூ ஆர்லியன்ஸ்
ிபோர்னியா
டக்ஸிகோ
ளோரிடா
வனு (க்யூபா)
மைக்கா
ந்தோ டோமிங்கோ
பார்ட்டோ ரீகோ
ாவாய்த் தீவுகள் (பேர்ல்
ார்பர்) பவளத்துறைமுகம்
லிபிக் தீவுகள்
ரிட்டிஷ் ஹண்டுராஸ்
ௌதமலா
ண்டுராஸ்
ல்வடார்
ுமா

தென்னமெரிக்கா.

பாடோஸ்
கஸ் (வெனிசுலா)
ாகோட்டா (கொலம்பியா)
யாடிஜனீரோ (பிரேஸில்)
ட்டோ (ஈக்வடார்)
ா (பெரு)
பாஸ் (பொலிவியா)
சன்ஸியன் (பராகுவே)
ப்ரைஸோ (சிலி)

51. பாக்லந்து தீவுகள்
52. குடிலப், மார்ட்டினிக், டோமினிகா
53. தென் ஜார்ஜியா

அட்லாண்டிக் தீவுகள்.

அட்லாண்டிக் மகா சமுத்திரத்திலுள்ள தீவுகள் பல. இவற்றில் ஒரு கும்பலுக்கு மேற்கிந்தியத் தீவுகள் என்று பெயர். ஐரோப்பிய நாடுகளும், அமெரிக்க நாடுகளும் இப்பிரதேசத்தைப் பங்குபோட்டுக் கொண்டிருக்கின்றன.

54. செயிண்ட் ஹெலினா தீவு

ஐரோப்பா.

55. ஐஸ்லந்து
56. பரோ தீவுகள்
57. லண்டன் (பிரிட்டன்)
58. டப்ளின் (ஐரிஷ் குடியரசு)
59. ஆஸ்லோ (நார்வே)
60. ஸ்டாக்ஹோம் (ஸ்வீடன்)
61. கோபென்ஹேகன் (டென்மார்க்)
61.A. ஹெல்சிங்கி (பின்லந்து)
62. பெட்சாமோ துறைமுகம்
63. வார்ஸா (போலந்து)
64. பெர்லின் (ஜெர்மனி)
65. பாரிஸ் (பிரான்ஸ்)
66. மேட்ரிட் (ஸ்பெயின்)
67. லிஸ்பன் (போர்த்துகல்)
68. ரோம் (இத்தாலி)
69. அங்காரா (துருக்கி)
70. செபஸ்டபோல் துறைமுகம் (ரஷியா)
71. ஸிஸிலி (இத்தாலி)
72. கிரீட் (கிரீஸ்)
73 லெனின் கிராட் (ரஷியா)
74. மஸ்கோ (ரஷியா)
75. மால்டா (பிரிட்டிஷ்)
76. காஸ்பியன் கடல்
77. ஜிப்ரால்டர் (பிரிட்டிஷ்)

மத்திய தரைக்கடல்

ஐரோப்பாவுக்கும், ஆப்பிரிக்காவுக்குமிடையே மத்திய தரைக்கடலில் பலதீவுகளுள. கார்ஸிகா (பிரஞ்சு), சார்டீனியா, ஸிஸிலி, (இத்தாலி), மால்டா, சைப்ரஸ் (பிரிட்டிஷ்) ஆகியவை முக்கியமானவை.

ஆப்பிரிக்கா

78. டாஞ்சியர்ஸ் (ஸ்பெயின்)
79. கஸபிளாங்கா (பிரஞ்சு மொராக்கோ)
80. அல்ஜியர்ஸ் (பிரஞ்சு அல்ஜீரியா)
81. டூனிஸ் (பிரஞ்சு டூனிஸியா)
82. திரிபோலி (இத்தாலி லிபியா)

85. மன்ரோவியா லைபீரியா. (நிக்ரோ குடியரசு)
86. நைஜீரியா (பிரிட்டிஷ்)
87. கேமரூன் (பிரஞ்சு)
88. பிரஞ்சு நிரக்ஷரேகை ஆப்பிரிக்கா
89. ,, மேற்கு ஆப்பிரிக்கா
90. அலக்ஸாண்டிரியா (பிரி,எகிப்)
91. சைபிரஸ் தீவு (பிரிடிஷ்)
92. கெய்ரோ (பிரி. எகிப்து)
93. பிரிடிஷ் சூடான்
94. பெல்ஜியன் காங்கோ
95. மொம்பாசா (பிரி. கென்யா)
96. அபிஸீனியா (எதியோப்பியா)
97. இத். எரிட்ரியா
98. பெர்பெரா (பிரி.சோமாலிலந்)
99. ஒபியா (இத். சோமாலிலந்து)
100. விக்டோரியா ஏரி
101. டங்கனியகா (பிரிட்டிஷ்)
102. நியாஸாலந்து ( ,, )
103. லோரன்ஸோ மார்கிவிஸ் (போர். மொஸாம்பிக்)
104. பெங்விலா (போர். அங்கோலா)
105. ரொடீஸியா (பிரிட்டிஷ்)
106. தென்மேற்காப்ரிக்கா ,, )
107. பச்சுவானலந்து ( ,, )
108. கேப்டவுன் (பிரி. தென்னாப்ரிக்கா ஐக்கியம்)
109. அண்டனனரீவோ (பிரி. மடகாஸ்கர்)
110. மாரிஷஸ் தீவு (பிரிட்டிஷ்)
111. செய்ச்லஸ் தீவுகள் (பிரிட்டிஷ்)

ஆசியா

112. ஏடன் (பிரி. அரேபியா)
113. பேக்டாட் (ஈராக்-மெஸபொட்டோமியா)
114. ஜெருசலேம் (பிரி. பாலஸ்தீனம்)
115. பீருட், டமாஸ்கஸ் (பிர. ஸிரியா)
116. டெஹ்ரான் (ஈரான்-பாரசீகம்)
117. காபூல் (ஆப்கானிஸ்தானம்)
118. பலுச்சிஸ்தானம் (இந்தியா)
119. கராச்சி ( ,, )
120. பெஷாவர் ( ,, )
121. புது டில்லி ( ,, )
122. காஷ்மீரம் ( ,, )
123. நேப்பாளம் ( ,, )
124 லாசா (திபேத்)
125. ஸிங்கியாங் (சீனா)
126. பூடான் (இந்தியா)
127. கல்கத்தா (இந்தியா)
128. பம்பாய் ( ,, )
129. சென்னை ( ,, )
130. லக்ஷ தீவுகள் ( ,, )

134. மாந்தலே, அக்கியா
கூன்
135. பேங்காக், (தாய்லாந்
136. சைகூன் (இந்தோசீ
137. ஸிங்கப்பூர் (மலாயா)
138. மேடான் (டச்சு சுமத்
139. பத்தேவியா (ஜாவா)
140. போர்னியோ
141. டோக்கியோ (ஜப்பா
142. மணிலா (பிலிப்பைன்
143. கரோலின் தீவுகள்
(ஜ
144. இந்தோனேஷியத் தீ
151. வெளி மங்கோலியா
152. மூக்டன் (மஞ்சுகோ
153. விளாடிவோஸ்டாக்
154. கொரியா
155. உள் மங்கோலியா
156. சங்கிங் (சீனா)
157. நாங்கிங் ( ,, )
158. கேன்டன் ( ,, )
159. ஹாங்காங் (பிரிட்டிஷ்
160. தய்வான் (பார்மோச
161. ஹைனன் (சீனா)

இந்தோனேஷியத் தீவு

ஆசியா-ஆஸ்திரேலியா,
மகா சமுத்திரம்-பஸிபிக் ம
திரம் ஆகியவற்றிற்கிடை
தீவுகளுக்கு இந்தோனேஷ
கள் என்றுபெயர். சுமத்ரா,
போர்னியோ, ஸிலிபஸ்,
நியூகினி ஆகிய இன்னும்
கள் இதில் அடங்கியிருக்
ஹாலந்தும், பிரிட்டனும்தா
ற்றின் பெரும் பங்காளிகள்

ஆஸ்திரேலியா [பிரிட்டி

145 டார்வின் துறைமுகம்
146. பெர்த்
147. ஸிட்னி
148. மெல்போர்ன்
149. கான்பெரா
150. நியூஸீலந்து

பசிபிக் தீவுகள்

பஸிபிக் மகாசமுத்திரத்
பிலிப்பைன், கரோலின்,
குவாம், மிட்வே, ஹாவா
பர்ட், நாறு, சாலமன் நி
ரிடிஸ், பீஜி, நியூ கலிபோ
போனிஸ், சாமோ போன்
னமனேக தீவுகளுக்குத்தா
பிக் தீவுகள் என்று
கரோலின்